58

ஸ்ரீ தேசிகவந்தனமாலிகை–7

ஸ்ரீ:

# பாரிஜாதபுஷ்பம்
(என்கிற)
# ப்ரபந்தஸார வைபவம்.

ப்ரபந்தஸார தத்த்வஸாரம்
முதலியவற்றுக்கு
மறுப்பு.

பண்டிதராஜ
திருவரங்கம் திருமலை தாதாசாரியர்
எழுதியது.

ஸ்ரீநிவாஸ பிரஸ், திருவையாறு.
1961
சார்வரி–தை.

[விலை ரூ. 1–50

# ப்ரதிபோதனம்.

1. நம்பிக்கை த்ரோஹம் செய்து வண்ணமாடங்கள் முதலான பெரியாழ்வார் திருமொழிக்குத் தானே வஞ்சனை யாய் எழுதிய உரையைப் பெரிய பரகாலஸ்வாமி ஸாதித்த தாகக் காட்டி உடனே கையும் களவுமாகப் பிடிபட்டிருப்ப தற்காக (அவதாரிகை பக்கம் 7-11) जिह्वामुत्पाट्य सपदि मर्त्यं ननु मानिना।

2. நாம் நியமபங்கம் கூறியிருக்க அதை ப்ரக்ரம பங்கம் என்று கொண்டு அதுவும் இன்னதென்றறியாமல் அதிகரணஸாராவளியில் அக்குற்றம் இருப்பதாகச் சொன்ன தற்காக (பக்கம் 2)

3. நூறு பாசுரங்களை ஒரு பத்தாக வழங்குவது என்று பொய்யே பேசியதற்காக (பக்கம் 6)

4. ஆரம்ப நிகமனங்களுக்கும் ஐககண்ட்யத்திற்கும் வாசியறியாமைக்காக (பக்கம் 10)

5. நாம் ப்ரபந்தஸாரப் பாட்டிலுள்ள பாடக்ரமத்தைக் கூறியிருக்க திவ்யப்ரபந்தத்திலுள்ள பாடக்ரமமென ப்ர மித்ததற்காக (பக்கம் 19)

6. ஓரொன்றென்று என்று வாய்பாட்டில் விசேஷண விசேஷ்யமாயுள்ள ஓரொன்றுக்கும் 'ஓரொன்றுதானே யமை யாதோ' என்று தனியனிலுள்ள வீப்ஸார்த்தக ஓரொன்றுக் கும் பேதமறிய முடியாமைக்காக (பக்கம் 49)

7. திருவாய்மொழி 'இவையும்' பதிகத்தின் ஆறாயிரப் படியில் 'ஸாத்மிக்க ஸாத்மிக்க' என்று ஸ்பஷ்டமாய் ஸாதித் திருக்க அதை இல்லை யென்றதற்காக (பக்கம் 64)

8. ஓடும்புள்ளேறி முதலானவற்றின் ப்ரதிபாத்ய விஷயத்தில் தேசிகன் பூர்வர்களின் உரையைப் பரிஷ்கரித் திருக்கிறார் என்று பல வருஷங்களுக்கு முன்பே நிரூபணம் செய்யப்பட்டிருக்க மறுபடியும் உபஜீவிப்பதாகப் பொய் பேசியதற்காக (பக்கம் 64)

[தொடர்ச்சி ராப்பர் 3-ம் பக்கம்]

ஸ்ரீ:

# பாரிஜாதபுஷ்பம்
(என்கிற)
# ப்ரபந்தஸார வைபவம்.



## ப்ரபந்தஸார தத்த்வஸாரம்
முதலியவற்றுக்கு
## மறுப்பு.



பண்டிதராஜ
திருவரங்கம் திருமலை தாதாசாரியர்
எழுதியது.



ஸ்ரீநிவாஸ பிரஸ், திருவையாறு.

1960

சார்வரி-ஆவணி

[விலை ரூ. 1-50



ஸ்ரீ:

# விஷய ஸூசிகை.

ஸ்ரீ:

# முன்னுரை.

ஒரு நூல் அப்ரமாணம், அதாவது பொய் நூல், ஆவதற்கு அதைச் செய்தவரிடத்திலுள்ள குற்றங்கள் காரணம். அக்குற்றங்கள் ப்ரமம், அவதானக் குறைவு, அசக்தி, வஞ்சனைக் கருத்து என்று நான்கென எண்ணப் பட்டிருக்கின்றன. மேல் நாம் விமர்சிக்கும் ப்ரபந்தஸார தத்த்வஸாரம், ப்ரபந்தஸார பரிசீலனம், பாரிஜாதாபஹர ணம், ப்ரபந்தஸாராஸ்வாதிநீ ப்ரஹரணம், என்ற இந்நூல் களின் கர்த்தாவினிடத்தில் வேறு எங்கும் காணக்கூடாத வகையில் அக்குற்றங்கள் எல்லாம் மலிந்திருக்கின்றன. ஆகையால் அந்த நூல்கள் யாவும் அடிமுதல் நுனி வரையில் அபத்த விஷயங்களையே கொண்டவை. இப்படி நாம் சொல்வது வெறும் த்வேஷத்தினலா அல்லது உண்மையா என்பதை ஸஹ்ருதயர்கள் யாவரும் நம் பாரிஜாதபுஷ்பத்தை வாசித்துத் தீர்மானித்துக்கொள் வது. ஒரு நூலை மாம்பலம் ஸ்வாமி எழுதினர், மற்றொரு நூலை பனம்பலம் ஸ்வாமி எழுதினர் என்பதெல்லாம் வெறும் பொய். ஒரே தூர்த்தஸ்வாமிதான் ஸர்வத்துக்கும் கர்த்தா என்பது ஸர்வ ப்ரகட ரஹஸ்யம்.

திவ்யப்ரபந்தங்களின் ஸேவாக்ரமமும் ஆரம்ப அவ ஸான ப்ரகாரங்களும் ஸ்வாமி தேசிகனுடைய நியமனத் தினுல் அக்காலத்தில் வ்யவஸ்தாபிதங்களாயின. பிறகு 200 வருஷங்கள்வரையில் அந்த வ்யவஸ்தையின்படியே பகவத்ஸன்னிதிகள் க்ருஹங்கள் எங்கும் ஸேவை சாத்து

மைறகள் நடந்துவந்தன. ஆகிலும் நிஷ்காரணவைரிணோ ஜகதி என்றபடி ஸ்வாமி எழுந்தருளியிருக்கும்போதே உண்டான அஸூயையும் த்வேஷமும் சில பாமர குலங்களில் தொடர்ந்து வந்துகொண்டேயிருந்தபடியால் த்வேஷம் முற்றி பல பேதங்களை உண்டாக்கிக்கொண்டு வேறு ஸம்ப்ரதாயம் ஒன்றைப் பிற்காலத்தவர் ஸ்ருஷ்டித்தார்கள். பழைய வாழிதிருநாமத்தை விட்டுவிட்டுப் புதிய தொன்றை ஸ்ருஷ்டித்து அநுஸந்தித்து அத்துடன் த்ருப்தியடையாமல் பழைய வாழிதிருநாமத்தை வழக்கம்போல் பிறர் அநுஸந்திப்பதைத் தடுக்கவும் கங்கணம் கட்டிக் கொண்டனர். திருநாராயணபுரத்தில் அவர்கள் முயற்சி பலிக்காமற்போனதை க்ரந்தத்தில் கூறியிருக்கிறோம். காஞ்சீபுரத்தில் நடந்ததைப்பற்றி ப்ரஸித்தமான ஒரு ச்லோகமுண்டு.

अशनिरशनिपल्लीवंशजे ब्रह्मघाति-
न्यसिपततु सुतीक्ष्णस्तूर्णमाचार्यनाम्नि ।
य इह निगमचूडादेशिकेन्द्रस्य पद्यं
न्यरुणदनघहृद्यं हन्त निर्बध्य साधून् ॥

என்பது அது. புதிய வாழிதிருநாமத்தில் நம: ஸ்ரீ சைலநாதாய, ஸ்ரீ சைலேசதயாபாத்ரம், இந்த இரண்டு ச்லோகங்களையும் வாழிதிருவாய்மொழிப்பிள்ளை முதலான மூன்று பாட்டுக்களையும் செய்தவர்கள் யார் என்று நிச்சயமாய் எவருக்குந் தெரியாது. பலர் பலவிதமாகச் சொல்லி வருகிறார்கள். தேசிகன் எழுந்தருளியிருக்கும்போது குமார வரதாசார்யரும் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமியும் ஸ்வாமி நியமனம்பெற்று அந்த வாழிதிருநாமாநுஸந்தான வ்யவஸ்தையைச் செய்தார்கள் என்பது நூல்களில் கூறப்

பட்டிருப்பதுபோல் மணவாளமாமுனிகள் காலத்தில் புதிய வாழிதிருநாம வ்யவஸ்தை ஏற்பட்டது என்பது ஒரு நூலிலும் கூறப்படவில்லை. ஆகையால் முன்னிருந்து வந்த வ்யவஸ்தையை அப்படியேவைத்துப் புதிய ச்லோகங்களேயும் பாட்டுக்களேயும் அதே வ்ருத்தங்களில் அதே ரீதியில் யாரைக்கொண்டோ இயற்றினார்கள் என்பது நிச்சயம். ப்ரபந்தநிர்வாஹம், ப்ரபந்தாநுஸந்தான தீபிகை போன்ற ஒரு நூலே ஸம்ப்ரதாயாந்தரத்தில் எவராவது காட்டமுடியுமா? முடியவே முடியாது. இருந்தால்தானே காட்டுவதற்கு. வாழிதிருநாமம் பகவத் ஸன்னிதிகளில் அநுஸந்திக்கப்படும் ஒரு சிறந்த அம்சம். இதைப் பெரியோர்களின் நியமனமின்றி எவரும் அநுஸந்தித்திருக்கமாட்டார்கள். தென்கலே ஸம்ப்ரதாயத்தில் எந்தப் பெரியோர் இந்த வ்யவஸ்தையைச் செய்தது? மணவாளமாமுனிகளல்லவென்பது அவருடைய சரித்ரத்தில் கூறப்படாமையால் நிச்சிதம். அவருக்குப் பிற்பட்ட ஒருவர் செய்த வ்யவஸ்தை இது என்பதற்கும் ப்ரமாணம் எதுவுமில்லே. அவருக்குப் பிற்பட்டவர்கள் அவ்வளவு விச்வஸநீயர்களல்லராகையால் அவர்களில் யாரோ ஒருவர் செய்த நியமத்தை எல்லோரும் ஆதரித்திருக்கமாட்டார்கள். ஆகையால் வழக்கமாய் வந்த வ்யவஸ்தையைப் பின்பற்றி ச்லோகங்களேயும் பாட்டுக்களேயும் மாற்றிக்கொண்டார்கள் என்பது தான் உண்மை. ப்ராமாணிகர்கள் இங்கு வேறு ஒன்றும் கூறமுடியாது. நம: ஸ்ரீ சைலநாதாய இத்யாதி அநுஸந்தானம் எப்பொழுது யார் நியமனத்தின்மேல் ஆரம்பிக்கப்பட்டது? அதற்கென்ன ப்ரமாணம்? இக்கேள்விகளுக்கு யாராகிலும் தகுந்த விடையளிக்கமுடியுமா? முடியாது. நமோ ராமாநுஜார்யாய இத்யாதி தேசிகன் சரமதசையில்

ஆரம்பிக்கப்பட்டது. ப்ரபந்த நிர்வாஹாதிகள் அதற்கு ப்ரமாணம் என்று நாம் கூறமுடியும். உண்மை நிலை இப்படியிருக்க அபிநிவேசத்தினால் கார்யாகார்ய ஸாத்யாஸாத்ய விவேகமற்று லஜ்ஜையற்று பயமற்று மனஸ்ஸாக்ஷிக்கு விருத்தமாய், நாம் காணாததுதான் மெய், காண்பதெல்லாம் பொய் என்பாரைப்போல் விபரீதவாதம் செய்துகொண்டு அலைகின்றது ஒரு ஜந்து. நமது இந்தப் பாரிஜாதபுஷ்பம் என்கிற ப்ரபந்தஸார வைபவத்தையும் ஸம்ஸ்க்ருதமறிந்தவர்கள் ஸம்ப்ரதாயப்ரதீபம் என்கிற க்ரந்தத்தையும் பார்த்தால் ஒவ்வொரு விஷயத்திலும் உண்மை இதென்று ஸ்பஷ்டமாய் விளங்கும். இந்த ஜந்துவின் வஞ்சனைக்கு ஒரு உதாஹரணத்தைமட்டும் இங்குக் கூறவிரும்புகின்றோம்.

'திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தம். பெரியாழ்வார் திருமொழியோடு சேர்ந்ததன்று' என்பது புது வைஷ்ணவர்களின் கொள்கை. இதை ஸ்தாபிக்க முயல்கின்ற ஜடம் பெரியவாச்சான்பிள்ளை முதலானவர்களுடைய வ்யாக்யானம் இப்பக்ஷத்திற்கு அநுகூலமில்லாமல் ப்ரதிகூலமாயிருப்பதால் அதை ஸாமான்யமாகப் பேசிவிட்டு பெரிய பரகால ஸ்வாமியின் வ்யாக்யானம் என்று ஒன்றை ப்ரமாணமாகக் காட்டுகின்றது. தத்த்வஸாரம் ஏழாம் பர்வத்தில் இது எழுதுகின்றது:—

> தென்கலை ஸம்ப்ரதாயத்திற்போல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீ பரகால ஸ்வாமியின் வியாக்கியானம் தோன்றியேயுள்ளது. அதிலும் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழி

யைத் தனிப் பிரபந்தமாகவுமே கொண்டமை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. திருப்பல்லாண்டு வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் அவர் இட்டிருக்கிறார். "விஷ்ணுசித்தம் நத்வா ... ... பக்த்யா" என்கிற ச்லோகம் ஸ்ரீ பரகால ஸ்வாமியின் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியான ப்ராரம்பத்தில் விளங்கா நின்றது. இதனால் இது தனிப்பட்ட ப்ரபந்தமென்பது ஸு ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டது. அடுத்தபடியாக அவதாரிகையிலும் "ஈழ் திருப்பல்லாண்டில் மங்களாசாஸனம் செய்து" இத்யாதி வாக்யங்களாலே இது ப்ரத்யேக ப்ரபந்தமென்பதை நன்கு காட்டியிருக்கிறார்.

என்று. இதைப் படித்த பிறகு இதற்கு ஸாதாரணமாகச் சொல்லக்கூடிய ஸமாதானத்தை க்ரந்தத்தில் கூறியிருக்கின்றோம். ஆனால் பெரிய பரகால ஸ்வாமி திருப்பல்லாண்டு தவிர மற்ற பெரியாழ்வார் ஸ்ரீஸூக்திக்கு வ்யாக்யானம் செய்தருளியிருக்கிறாரா, ப்ரசுரமாயிருக்கிறதா, என்று அறிய ஆவல் உண்டாயிற்று. பரகால மட ஸ்ரீ ஸன்னிதியிலுள்ளவர்களுக்கு எழுதிக்கேட்டோம். அதற்குக் கிடைத்த பதிலில்:—

"திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, நாச்சியார் திருமொழி, இதுகளுக்குத்தான் ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி வ்யாக்யானம் உளது. மீந்த பாகத்திற்குக் கிடையாது. ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி ஸாதித்ததாகவே தெரியவில்லை" என்று ஸ்ரீ ஸ்ரீ ஸன்னிதியில் நியமனமாயிற்று."

என்று எழுதப்பட்டிருந்தது: ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் வித்வான் ஸ்ரீ மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமிக்கும் எழுதியிருந்தோம். அதற்கு அந்த ஸ்வாமி ஸாதித்த பதிலில்:—

ஸ்ரீ பரகால யதீந்த்ர மஹாதேசிகன் செய்தருளிய பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் அச்சில் கிடைக்கிறது. அதில் வண்ணமாடங்கள் சூழ் என்கிற இரண்டாம் திருமொழி வ்யாக்யாநாரம்பத்தில் இரண்டு ச்லோகங்கள் காணப்படுகின்றன.

மேல் "அதில் முதல் திருமொழியிலே திருவாய்ப்பாடியில் ஸ்ரீ க்ருஷ்ணன் அவதரித்தபடியையும்" என்று 'முதல்' என்றிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

இந்த 'முதல்' என்ற சொல் உரைகாரருடையதா ஸம்பாதகர் கைச்சரக்கா என்பதை ஆலோசிக்க வேண்டும்.

என்று எழுதப்பட்டிருந்தது. இந்த உத்தரம் பார்த்த பிறகு மறுபடியும் மைஸூர் ஸ்ரீ ஸன்னிதிக்கு விக்ஞாபனம் செய்யப்பட்டது. அதற்கு அருளப்பட்ட பதில் ஸ்ரீமுகத்தில்

காஞ்சியில் அச்சான முதலாயிர வ்யாக்யானத்தில் முன் கடிதத்தில் அடியேன் குறிப்பிட்டிருந்த பாகங்கள்தான் ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி வ்யாக்யானம். மற்றது ஸ்ரீ ஸ்ரீ நம் ஸ்வாமி நியமனம் பெற்று கூடிய மட்டில் ஸம்ப்ரதாயத்திற்கு விரோதமிராமல் காஞ்சீபுரத்தவரே எழுதிய ப்ரதிபத வ்யாக்யானம்.

என்று விஷயத்தின் தத்த்வம் அறிவிக்கப்பட்டது. பரம க்ருபையாய் அந்த முதலாயிர வ்யாக்யான புஸ்தகமும்

அனுப்பப்பட்டிருக்கிறது. இதில் பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி ஆக நான்குக்கும் வ்யாக்யானம் இருக்கிறது. இதில் பெரியாழ்வார் திருமொழியில் திருப்பல்லாண்டுக்கு உள்ளது மட்டும் தான் ஸ்ரீ பரகாலஸ்வாமி ஸாதித்த வ்யாக்யானம். வண்ணமாடங்கள்சூழ் என்றாரம்பிக்கும் இரண்டாம் திருமொழி முதல் சென்னியோங்குவரையில் மற்றெல்லாவற்றுக்குமுள்ள வ்யாக்யானம் இந்த அஸமஞ்ஜஸம் ஸ்வயமாக எழுதியது. பெருமாள் திருமொழிக்கும் இது எழுதியதே. "ஸ்ரீ பெரிய பரகாலஸ்வாமி அருளிய வ்யாக்யானம்" என்று திருப்பல்லாண்டு வ்யாக்யானாரம்பத்திலும், "திருப்பாவை வ்யாக்யானம் ஸ்ரீ பெரிய பரகாலஸ்வாமி அருளிச்செய்தது" என்று திருப்பாவை வ்யாக்யானாரம்பத்திலும், இதேபோல் நாச்சியார் திருமொழி வ்யாக்யானாரம்பத்திலும் அச்சிட்ட இந்த ஸ்ருகாலம்

ஸ்ரீ பரகாலயதீந்த்ர க்ரந்த மாலாயாம்
ஸ்ரீ விஷ்ணுசித்தஸூரி திவ்யஸூக்தி
வ்யாக்யானம்

என்று வண்ணமாடங்கள்சூழ் வ்யாக்யானாரம்பத்திலும்,

ஸ்ரீ பரகாலயதீந்த்ர க்ரந்தமாலையில்
முதலாயிர வ்யாக்யானத்தில் பெருமாள்
திருமொழி வ்யாக்யானம்

என்று பெருமாள் திருமொழி வ்யாக்யானாரம்பத்திலும் "பெரிய பரகாலஸ்வாமி அருளிச்செய்தது" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லாமலும் ஆனாலும் அந்த ஸ்வாமி அருளிச்செய்ததுதான் என்று எல்லோரும் ப்ரமிக்கும்படியும் அச்சிட்டிருக்கிறது. "தத்காலம் எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீமத் அபிநவரங்கநாத பரகாலயதீந்த்ர மஹாதேசிகன் வேறு ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவனும் அதில் அபிநிவேசமுள்ளவனுமான என்னை நம்பி இந்தக் கைங்கர்யத்தைச் செய்யும்படி நியமித்திருப்பதால் வெகு அவதானத்தோடு எவ்வித வார்த்தைக்கும் இடமிராமல் இதை நிறைவேற்றும் விருப்பமுள்ளவன் யான் என்பதைப் பெரியோர்கள் நம்பவேண்டு''மென்று எழுதிக்கொண்டே பெரிய நம்பிக்கை த்ரோஹம் செய்திருக்கிறது. திருப்பல்லாண்டின் ஆரம்பத்தில் எவ்வித விசேஷமுமிராமல் ஸாதாரணமான சித்ரக் கோட்டையும் எழுத்துக்களையும் போடச்செய்துவிட்டு வண்ணமாடங்கள்சூழ் ஆரம்பத்தில் கண்ணைக் கவரும்படியான அலங்காரத்தைச் செய்வித்திருக்கிறது. முதல் பத்தை ஒன்பது திருமொழியாகவே கணக்கிட்டிருக்கிறது.

இப்படித் தன்னிடத்தில் பூர்ண நம்பிக்கை வைத்த மஹா ஸாத்த்விகரான ஸ்வாமிக்கு த்ரோஹம் செய்தது மட்டுமின்றி ஸாக்ஷாத் பெரிய பரகாலஸ்வாமியையும் தேசிக ஸம்ப்ரதாய விருத்தாசரணம் செய்தவராக உலகத்திற்குக் காட்டத் துணிவு கொண்டது. முன்னுள்ள உரைகளில் அநுபபந்நாம்சங்களைக் கழிப்பதில் ஸ்ரீ பெரிய பரகாலஸ்வாமிக்கு நோக்கு. ஆகையால் பெரியாழ்வார் திருமொழியில் திருப்பல்லாண்டில் சில விபரீதார்த்தங்கள் கூறப்பட்டிருப்பதால் அவற்றை நிரஸித்து ஸமீசீனார்த்தங்களை உரைப்பதில் மட்டும் ஸ்வாமி ப்ரவர்த்தித்தார். இது

ஸ்ரீசே தேசிக பக்தாநாம் ஸம்ருத்த்யா சாஸநக்ரமம்
ப்ரதர்சயதி தத்தாஸ: பரகாலாபிதோ யதி:

என்கிற ச்லோகத்தினால் ஸ்பஷ்டம். ''பெரியாழ்வார் திவ்ய ஸூக்த்யம்ருதபானம் செய்கிறேன்'' என்று சொல்லப்ராப்

தியுள்ளவிடத்தில் ''திருப்பல்லாண்டைக்கொண்டு தேசிக னடியார்கள் எம்பெருமானிடத்தில் மங்களாசாஸனம் பண்ணும் க்ரமத்தை தேசிக பக்தனுன நான் விளங்க வைக்கிறேன்'' என்கிருர். தேசிகன் திருவுள்ளத்திற்கு விருத்தமான விவரணத்தை நிரஸிக்கிறேன் என்பது கருத்து. பெரியாழ்வார் திருமொழியில் திருப்பல்லாண்டு தவிற மற்ற பாகத்தில் விசேஷித்துச் சொல்லவேண்டியது எதுவுமில்லையாகையால் அதற்கு நான் வ்யாக்யானம் செய்யவில்லை என்ற ஸ்வாமி திருவுள்ளம் இதனுல் ஸ்பஷ்ட மாகின்றது.

இப்படி தேசிகனையே தைவமாகக்கொண்ட ஸ்ரீ பெரிய பரகாலஸ்வாமி அருளிச் செய்ததுபோல் தேசிகன் ஸாதித்த ப்ரபந்தஸாரத்திற்கும் அதையனுஸரித்த ஸம்ப் ரதாயத்திற்கும் விருத்தமானரீதியில் ஒரு க்ருத்ரிம வ்யாக்யா னத்தைத் தானே வெளியிட்டுவிட்டு இதை ப்ரமாணமாக்கி இதற்கு விருத்தமாயிருப்பதால் ப்ரபந்தஸாரம் க்ரித்ரிம நூல் என்று கோஷமிடும் ஒரு வ்யக்தி எத்தாலாகியது? எவ்விதமானது? என்பதை எண்ணி எண்ணி எம் மனம் யதோவாசோ நிவர்தந்தே என்ற நிலையில் நிற்கிறது. இத் தனை பாபிஷ்டமான ஒரு ஐந்து ஸ்ரீவைஷ்ணவன் என்ற பெயருடன் இருந்துவருவது ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹத் திற்கே ஒரு களங்கம். மஹத்தான ஒரு தௌர்பாக்யம்.

ஸ்ரீ பெரிய பரகால யதீந்த்ர மஹாதேசிகன் அருளிச் செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம் தெலுங்கு லிபியில் அச்சாகியிருக்கிறது. அதில் அவதாரிகையின் முடிவில்

''இதில் சொன்ன ஆசார்ய நிஷ்டாவைபவத்தை அமுதனுர் நூற்றந்தாதியில் பரக்கக் காட்டியருளினுர்.

நாதிஸங்க்ஷேபவிஸ்தரம் என்கிற முறையிலே நூற்றந்தாதி விஸ்தாரமாய், இவ்வந்தாதி ஸங்க்ஷேபமாய், பிள்ளையந்தாதி நடுநிலைமையாய் நம்போல்வார்க்கு ஸுகாநுஸந்தேயமாய் அமைந்தபடி கண்டிகோளே. பிள்ளையந்தாதிகொண்டு நம் தேசிகன் அருள் பெற்று அத்தாலே யதீந்த்ர ப்ரியராய் அம்முகத்தாலே ஆழ்வார் க்ருபைக்கு விஷயராய் அத்தாலே எம்பெருமான் திருவடிகளைப் பெற்று உஜ்ஜீவிக்க நமக்கு ஸுகரமார்க்கம் கிடைத்ததாயிற்று. "தந்தையென நின்ற தனித் திருமால் தாளில் தலை வைத்தோம் சடகோபனருளினாலே" என்றாரிறே ஆசார்யன். ஆசார்யநிஷ்டாவைபவ ப்ரதிபாதகமான மூன்று ப்ரபந்தங்களும் அந்தாதியாய் தலைக் கட்டுகிறபடி. இக்கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலாயிரத்தின் முடிவிலும் நூற்றந்தாதி இயற்பா முடிவிலும் பிள்ளையந்தாதி தேசிக ப்ரபந்தத்தின் முடிவிலும் சேர்க்கப்பட்டிருக்கும். இது நம் ஆசார்யர்கள் அருளிச்செய்யும்படி"

என்று ஸாதிக்கப்பட்டிருக்கிறது. இங்கு 'இது நம் ஆசார்யர்கள் அருளிச்செய்யும்படி' என்று ஸ்வாமி ஸாதித்திருப்பதற்கு மூலம்

"அப்பொழுது ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயரும் ஆழ்வார் விஷயமான கண்ணிநுண் சிறுத்தாம்பை முதலாயிரம் முடிவில் நாதமுனிகள் சேர்த்தாப்போலவும் எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை இயற்பாமுடிவில் அவ்வெம்பெருமானாரே சேர்த்தாப்போலவும்.........தேசிகர் விஷயமான பிள்ளையந்தாதி

யையும் தேசிக ப்ரபந்தங்களின் முடிவில் சேர்த்து
அநுஸந்திக்க வேண்டுமென்று......ப்ரார்த்திக்க......
அப்படியே நைனாசார்யரும் முதலிகளுடனே தாம்
செய்த பிள்ளையந்தாதியையும் அநுஸந்தித்து"

என்று ப்ரபந்தாநுஸந்தானதீபிகையில் காட்டப்பட்டிருக்கிறது. இத்தீபிகையிலேயே

பெரியாழ்வார் திருமொழி முதலாக நூற்றந்தாதி
அளவாகவுள்ள இருபத்துநான்கு ப்ரபந்தங்களையும்
அடியொத்திருக்கிற அமிர்தரஞ்சனி முதலாக ப்ரபந்த
ஸாரம் அளவாகவுள்ள இருபத்துநான்கு தேசிக
ப்ரபந்தங்களையும்

என்று ஆழ்வார்களின் ப்ரபந்தங்கள் போலவே தேசிக ப்ரபந்தங்களும் இருபத்துநான்கென்று பகவத் ஸங்கல்பத்தினுல் ஏற்பட்ட ஒற்றுமையையும் பெரியோர்கள் பேசியிருக்கின்றனர். இப்படி தேசிகன் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி நைனாராசார்யர் இவர்கள் நியமனத்தால் இவர்கள் காலம்முதல் வ்யவஸ்திதமான க்ரமத்தில் அநுஸந்திக்கப்பட்டு வருமவையாய் ஸ்ரீ பெரிய பரகாலஸ்வாமியினுல் அப்படி ஸ்பஷ்டமாய் நிர்தேசிக்கப்பட்டவையான பிள்ளையந்தாதி முதலியவற்றை பெரிய பரகாலஸ்வாமி ஸ்ரீ ஸூக்தியையே ப்ரமாணங் கட்டியும் காட்டியும் அப்ராமாணிக நவீனக்ரந்தங்கள் என்று ஸ்தாபிக்க முயலும் வ்யக்தி ஒரு மனுஷ்யனு அல்லது ஹ்ருதயமில்லாத ஒரு ப்ராணியந்த்ரமா என்பது விஜ்ஞானிகள் கண்டறியவேண்டிய ப்ரதான விஷயம்.

தேவதத்தர் வீட்டுப் புழக்கடையில் காய்கறி திருடி அவரால் அடித்துத் துரத்தப்பட்ட ஒருவன் 'பூபூபூ. அவர் சாக' என்று மூன்றுதடவை ஊதிச் சொல்லிவிட்டு

வீட்டுக்கு வந்து தன் நோட்டுப் புஸ்தகத்தில் அவர் செத்துவிட்டார் என்று எழுதிவைத்துவிட்டு கண்டவர் களிடமெல்லாம் அவர் செத்துப்போய்விட்டார் என்று சொல்லிக்கொண்டிருந்தான். இவன் இப்படிச் சொல்லு வதைக் கேட்ட ஒருவர் 'என்னப்பா இப்படிச் சொல்லு கிறாய்? இப்பொழுதுதானே நான் அவரிடம் பேசிவிட்டு வந்தேன்' என்று கேட்டார். அதற்கு அவன் 'நான் எதையும் ப்ரமாணமின்றிச் சொல்லமாட்டேன். டாக்டர் டயரியைக் காட்டுகிறேன், பாருங்கள்' என்று கூறி தான் எழுதிவைத்திருப்பதைக் காட்டினான். அதைப்பார்த்த அவர் 'இது நீ எழுதிவைத்ததல்லவோ? டாக்டர் டயரி அன்றோ'என்றார். 'போமய்யா உமக்கு ஒரிழவும் தெரியாது' என்று கோபித்துக்கொண்டு போய்விட்டது அந்தத் திருட்டு ஆத்மா.

நாட்டில் இப்போது பொய் திருட்டு கொலை முதலிய அதர்மங்கள் ஓங்கி நிற்கின்றன. ஆசார அநுஷ்டானங்கள் மறைந்தேபோயின. ரயில்வண்டிகளும் ஸ்டேஷன்களும் போலவே வீடுகளும் தீட்டு எச்சில் முதலான ஸர்வமும் கலந்து வைதிக சோபை முற்றிலும் அற்று தீப்பற்றி எரிந்ததைபோல் இருக்கின்றன. தேவாலயங்கள் பக்தி ப்ரஸக்தி அறவே ஒழிந்து வெறும் கண்காட்சி சாலை களாக மாறிவிட்டன. இவற்றின் பலனாக மழையேயில் லாமல் வீட்டுக் கிணறுகள்கூட வற்றிவிட்டன. பல புதிய கொடிய நோய்கள் உண்டாகிவருகின்றன. சண்டை சச்சர வுகள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றன. பூகம்பம் பெரு வெள்ளம் புயல்காற்று தீவிபத்து இவைகள் அடிக்கடி உண்டாகி பெரும் சேதத்தை விளைவிக்கின்றன. அமைதி, நிம்மதி என்பவை சிறிதும் உலகில் இல்லை. இத்தீங்குக

ளெல்லாம் விலகி யோகக்ஷேமம் சரிவர நடைபெறும்படி ஸ்ரீமத் வேதமார்க்கத்தை புன:ப்ரதிஷ்டை பண்ணி அது மேன்மேலும் விளங்கிவரும்படி செய்யவேண்டியது ப்ராஹ்மணர்களின் கடமை. அதிலும் ஸ்ரீ வைஷ்ணவர்களின் மிக ப்ரதான கடமை. அதைச் செய்யத் தவறுவதோடு நிற்காமல் அத்யந்த பாமரர்போல் ஸம்ப்ரதாயத்தையே ஒரு சண்டைக்களமாக்கி அஸுரத்தன்மையை வளர்த்துவருமவர்களுக்கு ஸாதுக்கள் வாயினாலும் ஆதரம் காட்டத் தகாது. காட்டினால் அதே பாபத்திற்கு ஆளாவர்.

ப்ரபந்தஸார தத்த்வஸாரத்திற்கு அரங்கேற்றம் நடந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. அங்கார ஏற்றம் நடந்திருக்கவேண்டும். அந்த வஞ்சனை நூலை ஆமோதிப்பவர்கள் விஷயமறியாதவர்களாயிருக்கவேண்டும். அல்லது தாக்ஷிண்ய பரவசராயிருக்கவேண்டும். மேலே கூறியபடி நம்முடைய இந்தப் பாரிஜாதபுஷ்பத்தையும் அபேக்ஷிதமான விடங்களில் ஸம்ப்ரதாய ப்ரதீபத்தையும் பார்த்து தடஸ்த அறிவாளிகள் உண்மையை உள்ளபடி உணரலாம்.

---

"श्वसितावधूतपरवादिवैभवा
निगमान्तनीतिजलधेस्तलस्पृशः ।
प्रतिपादयन्ति गतिमापवर्गिकीं
'निगमान्तसूरि'पदसात्कृताशयाः ॥"

---

वाचाटताऽन्या सुलभा जगत्यां वैदुष्यमन्यद्विरलोपलम्भम् ।
तयोर्विशेषग्रहणासमर्थैरनात्मनीनः क्रियतेऽट्टहासः ॥

परीवादः शक्त्या भवतु परिहासः प्रसरतु
क्रुधोद्दण्डं भर्त्स्येमहि कथमपि क्षुब्धमनसः ।
भविष्यामो नामी वयमथ तु निष्ठामृजुपदे
भजन्तः स्थास्यामोऽनृजुदमनधाटीधृतधियः ॥

उत्साहं विहितोज्झनेषु विपुलां श्रद्धां निषिद्धक्रिया-
स्वासक्तिं परिवादवर्त्मनि परां प्रीतिं हठायोधने ।
निस्सङ्गत्वमथादधाति पतिते तीव्रे प्रहारेऽपि या
तस्यै सर्वविलक्षणक्रमजुषे निर्लज्जतायै नमः ॥

वेदादारभ्य काव्यावधि सकलहितोदञ्चनं वाक्प्रपञ्चं
मौग्ध्याद्विध्वस्य विद्वज्जनविमतिहतान् दुर्निबन्धान्निबध्य ।
दर्पं यस्याः प्रसर्पान्निरवधिनरकोदर्कभीमं भजन्ते
तस्यै नित्योच्छ्रितायै नम इदमिदमप्यस्तु निर्लज्जतायै ॥

न दूषणाद्देशिकतल्लजानां न पीडनाद्भागवतोत्तमानाम् ।
न भाषणात्तत्त्वविपर्ययाणां भीरस्ति भव्या किल वैष्णवश्रीः ॥

असूनरीणां प्रसभं पिबन्तः सहस्रशः सन्तु शराः परेषाम् ।
दशाननस्यानुभवावसेयसारः स रामस्य शरोऽन्य एव ॥

द्वेषं विहाय परदूषणदोहलं च
स्नेहं विधाय दनुजद्विषि तज्जने च ।
शास्त्रेऽवगाह्य गुरुसूक्तिसुधाम्बुधौ च
शान्ता भवन्तु सुजनत्वविभूषणाश्च ॥

॥ ஸ்ரீ: ॥

# பாரிஜாதபுஷ்பம்.

---

## (ப்ரபந்தஸார வைபவம்)

श्री श्रीनिवासं सरसीरुहाक्षमस्मद्गुरुं च प्रणिपत्य भक्त्या ।
अत्यन्तसूरीन्द्रकृतेः प्रबन्धसारस्य सारस्यमुदाहरामः ॥

## 1. அபஹாரசிக்ஷை.

ஸ்ரீமங்கிகமாங்தமஹாதேசிகனுல் அருளப்பட்டு அக்கா
ம் முதல் அத்யயனமும் அநுஸந்தானமும் செய்யப்பட்டு
ருகின்ற உத்தமோத்தமமான ப்ரபந்தஸாரத்தைப்பற்றி
ஷ்ப்ரக்ருதி செய்த துர்விமர்சத்தினுல் எவரும் கலங்கா
மக்காக **விவேக பாரிஜாதம்** வெளிவந்திருக்கின்றது.
ப்பாரிஜாதத்தை எம்பெருமானும் அபஹரிக்கமுடியாது.
த்யஸங்கல்பனுன அவனுடைய ஸங்கல்பத்தினுல் அவ
னுடைய உத்யானவனத்திலேயே உண்டாகி வளர்ந்த
தை அவன் அபஹரிப்பது எப்படி? அவனுடைய சத்ருக்
ள் தான் அதை அபஹரிக்க விரும்புவர்.

விவேகபாரிஜாதம் உண்மையில் அபஹரிக்கப்பட்டால்
ங்கும் அவிவேகஸாம்ராஜ்யந்தான் நிலை நிற்கும். ஆகவே
தை அபஹரிக்க எண்ணம் கொள்பவர்களுக்கு இங்கு
க்ஷை செய்யப்படுகின்றது.

### 1. திருப்பல்லாண்டு

"திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தம். இதைப் பெரியாழ்
ார் திருமொழியோடு சேர்த்து ஒரே ப்ரபந்தமாகக் கூறுவ
ால் ப்ரபந்தஸாரம் தேசிகன் செய்ததன்று" என்பது,

'விசிஷ்டாத்வைதம் ஸரியான வேதாந்தமன்று. இதைக் கூறுவதால் ஸ்ரீபாஷ்யம் பகவத் ராமானுஜன் இயற்றியதன்று' என்ற அத்வைதிகளின் வாதம் போன்றது. பாஷ்யகாரர் எப்படி ஸம்ப்ரதாயமாய் வந்த விசிஷ்டாத்வைதத்தை ஸித்தாந்தமாகக்கொண்டவரோ அப்படி தேசிகன் பெரியாழ்வார் திருமொழி திருப்பல்லாண்டுடன் ஒரே ப்ரபந்தமென்ற ஸம்ப்ரதாயத்தை அப்படியே கொண்டவர். இது

"நல்ல திருப்பல்லாண்டு நான் மூன்றோன் வாழியே
நானூற்றறுபத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே"

என்று பிற்காலத்தவர் கூறியபடி பிரித்துக் கூருமல்

"ஏரணி பல்லாண்டு முதல் பாட்டு நானூற்றெழுபத்
தொன்றிரண்டும்"

என்று சேர்த்து ஒரே தொகையாகக் கூறியிருப்பதனுல் ஸ்பஷ்டம்.

இனித் தனி ப்ரபந்தமென்றே திருவுள்ளமிருந்தபோதிலும் ஏதோ காரணத்தினுல் திருப்பல்லாண்டின் எண்ணிக்கையையும் சேர்த்து மொத்தமாகக் கூறினுர் என்று கொள்ளலாமென்ற ஆக்ஷேபத்திற்கு "அப்படியாகில் ஸ்வாமி கையாண்டிருக்கும் நியமத்திற்கு பங்கம் வருமாகையால் இது கூடாதென்று" ஸமாதானம் கூறினேம். இப்படி நாம் நியமபங்கமென்று கூறியிருக்க ப்ரக்ரமபங்கம் கூறப்பட்டதாக வைத்து ஐயோ பாவம் "அதிகரணஸாராவளியில் அபலபிக்கமுடியாத ப்ரக்ரமபங்கதோஷம் வரும்படி ஸாதித்திருக்கிருரே. அப்படி இங்குமிருக்கலாமே" என்று ப்ரபல அரிஷ்டம் அதிசோசநீயமாய்ப் பேசுகின்றது. "ஆஸ்தாம் நாமயதீந்த்ரபத்ததிஜுஷாம்"என்றுஅஸ்மதீயர்களைப்பற்றி நாம் பெருமை கொள்ளவேண்டியிருக்க இத்தனை அவ்யுத்பன்னமாய் ஒன்று இருக்கவேண்டுமோ என்று மனம் வருந்து

கின்றது. 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு' என்று முதலில் பகவானைக் குறிப்பிட்ட பெரியாழ்வார் பிறகு 'இலங்கை பாழாளாகப் படை பொருதான்' என்றும் அதன் பிறகு 'அண்டக் குலத்துக்கதிபதி' என்றும் குறிப்பிடுவதால் திருப்பல்லாண்டில் அபலபிக்கவொண்ணுத ப்ரக்ரம பங்கதோஷமுண்டென்று இது ஒப்புக்கொள்ளுகின்றது போலும். ப்ரக்ரம பங்கம் என்ருல் என்ன ? அது எவ்விடத்தில் வரும் என்பதைப் பெரியோர்களிடத்தில் கேட்டறிய வேண்டும். லஜ்ஜையிருந்தால் இந்த ஒரு பெருந்தவறைப் பற்றியே லேகன ஸந்ந்யாஸம் செய்ய ப்ராப்தம். இதுதான் ஸப்தச: க்ஷாளிதமாயிற்றே.

நாம் கூறிய நியமபங்கம் எது, எப்படி என்பதை 'ஏரணி பல்லாண்டு ... ...' என்று மற்றவிடங்களில் போல் வகை வேறு காட்டாமல் தொகையை மட்டும் ஸாதித்திருப்பது'' என்றுள்ள நம் வார்த்தைகளிலிருந்தே புத்திமான்கள் அறியக்கூடும்.

ஸ்வாமி ஸாதித்த மற்ற ஒவ்வொரு நூலும் போலவே ப்ரப்ந்தஸாரமும் ஸ்வாமியின் அஸாதாரணமான ப்ரஜ்ஞா விசேஷத்திஞலுண்டானதாய் சாஸ்த்ரங்களில் முதிர்ந்த அறிவும் தேர்ச்சியும் பெற்ற ஸஹ்ருதயர்களே அறியக் கூடிய பல சிறப்புக்களையுடையதான ஓர் அத்புத அமைப்பு. அதில் முதல் பாட்டில் தாம் மேல் இது சொல்லப்போகிரேும், இப்படிச் சொல்லப்போகிரேும் என்பதை விளக்குகின்ருர். அதில் 'திருமொழிகள், அவற்றுட் பாட்டின் வகையாகத் தொகை, இலக்கம் மற்றும்' என்றதைக் கவனிக்கவேண்டும். திருமொழிகள். **அவற்றுள்** ஒவ்வொன்றின் **பாட்டின் தொகை இலக்கம்.** எவ்விதமாகத் தொகை ? வகையாக. வகை தனித் தனி ப்ரபந்தம். அதி

லுள்ள பாட்டு இத்தனை என்பது வகையாகத் தொகை யிலக்கம். **மற்றுமெல்லாம்.** வகைகளை விட்டு ஒவ்வொரு ஆழ்வார் செய்த பாட்டுக்களின் தொகை இலக்கம். ப்ரபந் தங்களின் மொத்த இலக்கம். எல்லா ப்ரபந்தங்களையும் சேர்த்து அவற்றிலுள்ள பாட்டுக்களின் மொத்த இலக்கம். இவை எல்லாவற்றையும் விரித்துரைக்கிறேனென்கிறார். இந்த ப்ரதிஜ்ஞையின்படி இரண்டாவது முதல் பதினான் காவது வரையிலுள்ள பதின்மூன்று பாட்டுக்களில் ஒவ்வொ ருவருடைய திருமொழிகளையும் அல்லது திருமொழியையும், தனித்தனியே அதனதன் தொகையிலக்கத்தையும் கூறு கின்றார். அவற்றில் திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமங்கை யாழ்வார் இந்த ஐவர்களைப்பற்றின பாட்டுக்களில் அவரவ ருடைய ப்ரபந்தங்களைத் தனித்தனியே எடுத்து அவற்றின் தனித்தனித் தொகையிலக்கத்தைக் கூறியிருக்கின்றார். முதலாழ்வார்கள் மூவர், மதுரகவிகள், குலசேகரர், திருப் பாணாழ்வார், திருவரங்கத்தமுதனார் என்ற இவ்வெழுவர் பாட்டுக்களில் இவர்கள் ஒவ்வொரு ப்ரபந்தத்தையே செய்த வர்களாகையால் வகை எதுவுமின்றி அதனதன் தொகை யிலக்கமே கூறப்பட்டிருக்கிறது. இப்படிப் பன்னிரண்டு பாட்டுக்களைக் கவனிக்கும்போது, முதல் பாட்டில் செய்யப் பட்ட ப்ரதிஜ்ஞையை அநுஸரித்து எந்த ஆழ்வார் பல ப்ரபந்தங்களைச் செய்திருக்கின்றாரோ அந்த ஆழ்வாரைப் பற்றின பாட்டில் அவர் செய்த ப்ரபந்தங்களைத் தனித் தனியே எடுத்து அதிலுள்ள பாட்டுக்களின் எண்ணிக் கையைத் தனித்தனியே கூறுவது என்கிற நியமத்தைக் கொண்டிருக்கிறார் ஸ்வாமி என்பது யாவருக்கும் எளிதில் புலப்படும்.

பெரியாழ்வாரைப்பற்றின பாசுரத்தில் "அவர் செய்த ப்ரபந்தம் இரண்டாயிருந்தும் அவற்றைத் தனித்தனியே எடுத்துப் பாட்டுக்களின் எண்ணிக்கை கூறப்படவில்லை. இரண்டின் மொத்த எண்ணிக்கையே கூறப்பட்டிருக்கிற" தென்றால் அந்த நியமத்திற்கு பங்கம் வரும். ஆகையால் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமென்று கருதப்படவில்லை யென்பது திண்ணம். ஒவ்வொரு ஆழ்வார் செய்த பாட்டுக் களின் மொத்த எண்ணிக்கையக் கூறவந்தவை பதினைந்தும் பதினாறுமாகிய இரண்டு பாட்டுக்களாகையால் அவற்றிற்கு முற்பட்ட பாசுரத்தில் அதற்கு ஸங்கதியேயில்லையென்ப தையும் இங்குக் கவனிக்கவேண்டும்.

திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமென்று தேசிகன் கருதி னாரென்றால் அது பதினேழாம் பாட்டில் ப்ரபந்தங்கள் மொத்தம் இருபத்து நான்கு என்றதோடு விரோதிக்கு மென்றோம். இதற்கு அந்தப் பாட்டு ப்ரக்ஷிப்தம். ஸ்வாமி செய்ததன்று. ஆகையால் அதோடு விரோதம் காட்டுவது பொருந்தாது என்று ஸமாதானம் கூறப்படுகின்றது. பரிசீ லன நூலில் 'ஓரொருவர்' என்ற ப்ரயோகம் அவ்வளவு பாதக மல்ல, என்று பதினேழாம் பாட்டை ப்ராமாணிகமாகக் கொள்ளும் பக்ஷம் பேசப்பட்டிருக்கிறது. அந்தப் பக்ஷத் தில் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமானாலும் மொத்த எண் ணிக்கை கூறப்பட்டிருக்கிறது என்கிற ஸமாதானம் அஸங் கதமென்பதை ஒப்புக்கொண்டே தீரவேண்டும். பதினே ழாம் பாட்டு ப்ரக்ஷிப்தமென்று பேசச்செய்வது அங்குள்ள 'இருபத்து நான்கு' என்ற சொல்தான். அந்தப் பாட்டில் ப்ரபந்தங்கள் இருபத்து நான்கு என்பதுதான் ப்ரதான விஷயம். அது தன் துஸ்ஸித்தாந்தத்திற்கு நிர்மூலஹேது வாயிருப்பதால் பாட்டு ப்ரக்ஷிப்தமெனப்படுகின்றது.

ஐயோ பாவம். அஸ்தானே அபிநிவேசம் மனிதனை எவ்வளவு அப்ராமாணிகனுக்குகின்றது !

திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமானல் பெரியாழ்வார் திருமொழியின் முதல் பத்து பத்தாகாது. ஒன்பதுதான் ஆகுமென்றேம். இதற்கு ஸமாதானம், "நூறு பாசுரங்களை ஒரு பத்தாக வழங்குவது ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயம். அதன்படி வண்ணமாடங்கள் முதலாக மெச்சூது தொடங்கும் வரையில் நூறு பாட்டு குறையாமலிருப்பதால் முதற் பத்தின் பிரிவு நிரவத்யமானதே. திருப்பல்லாண்டைச் சேர்த்தால் நூற்றுப் பத்துப் பாசுரங்கட்கு மேற்படும். இதனாலும் திருப்பல்லாண்டு தனி நூலேயாகும்"— எனப் படுகிறது. இத்தகைய வேறு வஞ்சகப் பேச்சு உலகில் எங்கும் காணமுடியாது. திருவாய்மொழியில் ஒவ்வொரு பத்திலும் 110 பாசுரங்கள் இருக்கின்றன. இரண்டாம் பத்தில் 112 பாசுரங்கள். இவற்றைப் பத்தாக வழங்குகின்றவர்கள் ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தைச் சேராதவர்களா? அல்லது தவருக வழங்குகின்ருர்களா ? ஆமெனில் திருப்பல்லாண்டுடன் ஆரம்பிக்கின்ற பெரியாழ்வார் திருமொழி முதற்பத்திலும் அப்படியே இருக்கலாமாகையால் அது தனி நூல் என்பதற்கு இது ப்ரமாணமாகமாட்டாது.

நூறு பாசுரங்களை ஒரு நூறென்று வழங்காமல் ஒரு பத்தென்று ஏன் வழங்குவது என்று புத்திமான்கள் கேட்காமல் இருப்பார்களா ? அவர்களுக்குப் பதில் சொல்லவியலாமல் விழிக்கவேண்டுமே என்ற எண்ணம் சிறிதுமில்லாமல் இப்படிப் பேச மற்ற எவரும் துணியமாட்டார்கள். பத்துத் திருமொழிகளுள்ளது ஒரு பத்து எனப்படுகிறது. திருப்பல்லாண்டு தனியாகில் முதல் பத்து பத்தாகாது. ஒன்பதுதான் ஆகும். ஆகவே இதன் பத்தென்ற

ப்ராமாணிகவ்யவஹாரம், 'திருப்பல்லாண்டு தனி நூலன்று. ஒரு பெரிய நூலின் ஒருபாகமே' என்பதை விளக்கிக்காட்டு கின்றது என்று இப்பெயரையே நாம் ப்ரமாணமாகக் காட்டி யிருப்பதைக் கனவிலும் மறுக்கமுடியாது.

பெரிய பரகால ஸ்வாமியின் உரையிலும் திவ்யஸூரி சரிதத்திலும் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமென்று விளக் கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. அதுவுண்மையாகில் பூர்வபக்ஷத்தில் கொள்ளப்படும் நீதியை ஒட்டி 'அந்தப் பாகம் ப்ரக்ஷிப்தம். பிறகு யாரோ மாற்றி எழுதியது, என் போம். தேசிகன் செய்தருளிய நாள் முதல் இதுவரையில் விடாமல் அத்யயன அநுஸந்தானங்களில் இருந்துவரும் ப்ரபந்தஸாரத்தை யாரோ செய்ததென்றும் ப்ரக்ஷேபமுள்ள தென்றும் சொல்வது பொருந்தாது. ப்ரசாரத்தில் இல்லாத மற்ற நூல்களில் இவ்விதக் குற்றங்கள் எளிதில் இடம் பெறும். உண்மையில் அந்நூல்களில் அந்த விளக்கம் காணப்படுகின்றதா என்று பார்க்கவேண்டும். பரகால ஸ்வாமியின் உரையில் திருப்பல்லாண்டு வ்யாக்யான ஆரம் பத்தில் ஒரு ச்லோகமும் வண்ணமாடங்கள் வ்யாக்யான ஆரம்பத்தில் ஒரு ச்லோகமும் இட்டிருப்பதால் தனி ப்ரபந்த மென்று அவர் திருவுள்ளமென்பது யுக்தமன்று. சததூஷ ணியில் ஒவ்வொரு வாதத்திலும் மங்கள ச்லோகமிருப்ப தைக்கொண்டு ஒவ்வொரு வாதமும் தனி க்ரந்தமென்பா ரில்லை. 'க்ருஷ்ணாவதாரவிஷயம் விவ்ருணோமி பக்த்யா' என்றதை ப்ரமாணமாக்கினால் ராமாவதாரத்தையும் திவ்ய தேசத்து எம்பெருமான்களையும் பற்றியுள்ள திருமொழி கள் தனி ப்ரபந்தமென்றோ பெரியாழ்வார் திருமொழியைச் சேர்ந்தவையல்லவென்றோ ப்ரஸங்கிக்கும். திவ்யஸூரி சரிதம் ஐந்தாம் ஸர்க்கம் 70-ம் சலோகத்தில் மல்லாண்ட

திண்டோள் முதலியவற்றுக்குப் பல்லாண்டு பாடியது கூறப்பட்டது. 71-ம் ச்லோகத்தில் மறுபடியும் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய திருவவதாரம் முதல் ஸகல லீலைகளையும் அநுபவித்தது சொல்லப்பட்டது. 72-ம் ச்லோகத்தில் "இப்படி எம்பெருமானுடைய லீலைகளை அநுபவித்ததனால் பெரியாழ்வாருக்குண்டான ஆநந்தம் அவருடைய தமிழ் ப்ரபந்தமாக உருவெடுத்து வெளியாயிற்று" எனப்பட்டிருக்கிறது. இங்கு ப்ரபந்தங்கள் இரண்டு என்பதை எந்த வார்த்தை காட்டுகிறது? 'பூயோபி' 'மறுபடியும்' என்றதனால் பேதம் தோற்றுகிறது என்பது யுக்தமன்று. திருப்பல்லாண்டோடு நிற்காமல் மேலும் பாசுரங்களை இயற்றினார் என்பதே அதன் பொருள். இதே ஸர்க்கத்தில் 24-ம் ச்லோகத்தில் பெருமாள் திருமொழியைப்பற்றி, "ரங்கநாதன் விஷயமாக முப்பது. மறுபடி திருவேங்கடமுடையான் முதலானவர்கள் விஷயமாக எழுபது", என்று கூறியிருப்பதைக் காண்க. பதினெட்டாவது ஸர்க்கம் 41-ம் ச்லோகத்தில்

கோதாயா: க்ருதியுகளேன தத்ஸுதாயா:
ஸாகம் தத்க்ருதிமவதார்ய ஸந்துதோஷ

என்று ஆண்டாளுடைய ப்ரபந்தம் இரண்டென்றவர் பெரியாழ்வாருடைய ப்ரபந்தத்தை ஒன்றாகவே கூறியிருப்பதைக் காண்பவர்களுக்கு திவ்யஸூரிசரிதத்தை இயற்றிய கருடவாஹனபண்டிதருடைய கருத்தைப்பற்றி ஸம்சயம் ஏற்பட ந்யாயமில்லை. ஐந்தாம் ஸர்க்கம் முடிவிலுள்ள ச்லோகத்தில் **ப்ரபந்தயுகளம்** என்கிற பாடம் காணப்படுகின்றது. இதற்குச் சிலர் தமிழ் ப்ரபந்தம், கல்பஸூத்ரவ்யாக்யானம் ஆக இரண்டு என்று பொருள் கூறி இதனால் தமிழ்ப்ரபந்தம் இரண்டென்பது கிடைக்காதென்பர். ஆனால் "பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு" என்று இங்குள்ள டிப்பணி

யைப் பாக்கும்போது 'யுகளம்' என்ற பாடம் புதிதாகப் புகுத்தப்பட்ட ஒன்று என்பது விளங்குகின்றது. "ப்ரபந்த மகம்" என்றித்தகைய உண்மைப் பாடம் வேறு இருந்திருக்கவேண்டும். பாடத்தை மாற்றுகின்றவர்கள் அனேகமாய் அவ்யுத்பன்னர்களாகையாலும் வ்யுத்பன்னராகுலும் ஆக்ரஹத்தினுல் மதியிழக்கின்ருர்களாகையாலும் முன் பின் விரோதத்தைப் பராமர்சிப்பதில்லே. இப்படி திவ்ய ஸூரிசரிதத்தில் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமென்று விளக்கப்பட்டிருக்கிறதென்பது வெறும் பொய்யென்று முடிந்தது. தென்கலே ஸம்ப்ரதாய முன்ஞேர்களான பெரிய வாச்சான்பிள்ளே முதலானவர்கள் திருப்பல்லாண்டுடன் சேர்ந்து பெரியாழ்வார் திருமொழி ஒரே ப்ரபந்தமென்ற திருவுள்ளமே கொண்டவர்கள். இதை அவர்களுடைய உரைகளிலுள்ள வாக்யங்களேயே எடுத்து நிரூபணம் செய்திருக்கின்ருர்கள். பெரியாழ்வார் திருமொழியில் கடைசி பாட்டிலுள்ள 'கோயில் கொண்ட கோவலனே' என்றவிதற்கு வ்யாக்யானம் செய்யுமிடத்தில்

> திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும்
> இவர் மனதிலிருக்கிற கிருஷ்ணன் தான்
> பிறந்த படியையும் வளர்ந்த படியையும்
> இவரைக் கொண்டு கேட்டான்.

என்று பெரியவாச்சான்பிள்ளே ஸாதித்திருக்கின்ருர். இதற்கு முன் "திருப்பல்லாண்டினர்த்தத்தை நிகமிக்கிருர்" என்றிப்படிப் பலதடவை ஸாதித்திருக்கிருர். இவ்விடங்களில் "தொடங்கி" "நிகமிக்கிருர்" என்ற இவற்றின் பொருளே சாஸ்த்ரபரிசயமில்லாதவர்கள் அறிவது அரிது. ஒரு ப்ரபந்தமானுல்தான் தொடக்கமென்பதும் நிகமனமென்பதும் சேரும்.

இப்படி அசைக்கமுடியாத ஹேதுவைக்கொண்டு பெரிய வாச்சான் பிள்ளை முதலானோர்க்கும் ''திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் ஆரம்பத் திருமொழியேயன்றித் தனி ப்ரபந்தமன்று'' என்றே திருவுள்ளமென்று ப்ராமாணிகர் செய்த ந்யாயமான முடிவை எவர் மறுக்கமுடியும்? ஆகிலும் வெகு கம்பீரமாகப் பேசுவதாகப் பாவித்து ''நிகமித்தார் என்று பெரியாழ்வார் திருமொழியிலிருக்கிறதாம். இதனால் இரண்டும் ஏகப்ரபந்தமென்று ஸ்தாபிதமாகிறதாம். திருவிருத்தத்திலிருந்து பலபாசுரங்களையெடுத்துத் திருவாய்மொழி வ்யாக்யானத்திலே ஐககண்ட்யம் செய்தருளுகிறார்கள். இது கொண்டு திருவிருத்தமும் திருவாய்மொழியும் ஏகப்ரபந்தமென்பாரில்லை'' என்று வாசாமகோசரமான அசடு வழியப் பேசப்பட்டிருக்கிறது. 'இருக்கிறதாம், ஸ்தாபிதமாகிறதாம்' என்று ஆம் போட்டுப் பேசிவிட்டால் போதுமா? இதுவே மறுப்பாகுமா? 'நிகமித்தார்' என்ற சொல் அங்கு இருந்தால் அதை ப்ரயோகித்தவர் ஏகப்ரபந்தத்வபக்ஷாவலம்பி என்பது ஸ்தாபிதமேயாகும். அந்தச் சொல் அங்கு இல்லையென்றால் அதை நிரூபணம் செய்ய வேண்டும். இதை விட்டு ஆம் ஆம் என்றால் இதனால் என்ன பயன்? ''உலகம் ப்ரத்யக்ஷமாய்த் தெரிகிறதாம், அதனால் உண்மையிலேயே அது இருக்கிறதாம்'' என்று அத்வைதிகளுடையவும் பௌத்தர்களுடையவும் வாதம் போல் இருக்கின்றது இது. இங்கு ஐககண்ட்யத்தைக் குறிப்பிட்டு அதனால் திருவிருத்தமும் திருவாய்மொழியும் ஒரு ப்ரபந்தமாகிவிடுமா என்பது எத்தனை அசட்டுத்தனத்தைக் காட்டும் கேள்வி! ஆரம்பநிகமனவ்யவஹாரம் செய்யப்பட்டிருப்பதைக்கொண்டு ஏகப்ரபந்தத்வம் ஸாதிக்கின்றவர்களைப் பார்த்து ஐககண்ட்யத்தை ஹேதுவாக்கி ஏகப்ரபந்

தத்வத்தை ஆபாதனம் செய்யலாமா ? ஆரம்ப நிகமனங்களும் ஐககண்ட்யமும் ஒன்ரு ? ஈஜ ஜாநாவஸி வெஅ ।

இதற்கு மேல் "இவர்களுடைய மருள் இவர்களோடே நிற்கட்டும். இதை தேசிகன் தலையிலேற்றினதோடும் நிற்கட்டும். நிரவத்யஹ்ருத்யஜ்ஞாநநிதிகளான ஸதாசார்யர்கள் பக்கலிலும் ஏற்ற முயலவேண்டா" எனப்பட்டிருக்கிறது. தேசிகனுக்கு நிரவத்யஹ்ருத்யஜ்ஞாநநிதிகளான ஸதாசார்யகோடி ப்ரவேசம் கிடையாது ! வேதாந்தாசார்யர் என்ற பிருதப்ரதானம் பண்ணும்படி ஸ்ரீ ரங்கநாதன் கடாக்ஷத்திற்குப் பாத்ரரானவரன்ரே இவர். அதைப் பெருதவர்களுக்குத்தானே நிரவத்யஹ்ருத்யஜ்ஞாநமும், ஸதாசார்யத்வமும் உண்டு ! சரீரத்தில் ஒவ்வொரு பரமாணுவிலும் ஊறியிருக்கும் த்வேஷம் குமிழியிட்டுக் கிளம்பிக் கொண்டே இருக்கிறது.

ஏகப்ரபந்தத்வாபிப்ராயம் மருளாகில் அதை அவர்கள் தலையில் எவரும் ஏற்ற வேண்டா. அவர்கள் தான் தாமும் கொண்டு 'நிகமித்தார்' என்று கூறி பிறர் தலையிலும் ஏற்றியிருக்கின்ருர்கள். ஆகவே திருப்பல்லாண்டு தனி நூலென்ற எண்ணம் ப்ராசீன ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியர்களுக்குள் எவருக்கும் இருந்ததில்லை. தம் ஸம்ப்ரதாய முன்னோர்களின் உரை நூல்களில் எவ்வித ஆதாரமும் கிடைக்காமையால் தான் "பெரியவாச்சான்பிள்ளை முதலான பேராசிரியர்கள் தனி ப்ரபந்தமாகக் காட்டி வ்யாக்யானம் செய்தருளி" என்று கம்பீரமாகப் பேசிவிட்டுப் பெரிய பரகால ஸ்வாமியையும் கருடவாஹன பண்டிதரையும் தம் பக்ஷத்திற்குப் பொய் ஸாக்ஷியம் கூற இழுக்கின்ருர்கள். அவர்கள் இதற்கு ஒரு நாளும் இசையார்கள்.

இனி ஒன்று பார்ப்போம். திருப்பல்லாண்டு தனி நூலென்று ப்ராசீனர்களோ நவீனர்களோ கொள்வதற்கும் சொல்வதற்கும் என்ன காரணமிருக்கின்றது ? வாடினேன் வாடி, உயர்வற உயர் நலம் என்ற இத்திருமொழிகளைத் தனி நூலென்று எவரும் சொல்லவில்லை. ஏன் ? அப்படிச் சொல்லக் காரணமொன்றுமில்லை. ஆகையால் சொல்ல வில்லை. ஆகிலும் வக்ரபுத்தி ஒருவன் இவை தனியென்றே கொண்டு அப்படியே அச்சிட்டுப் புஸ்தகங்களை வழங்கினுல் நாம் என்ன செய்யக் கூடும் ? பெரிய திருமொழியிலும், திருவாய்மொழியிலும் முதல் பத்து பத்தாகாது, ஒன்பதே ஆகும். ஆகையால் தனியே பிரித்தது தவறு. ஆக்ரஹத் தினுல் செய்யப்பட்ட அவச் செயல் என்று குறை கூறு வோம், நிந்திப்போம். இதே நிலைதான் ப்ரக்ருதத்திலும்.

இனித் திருப்பல்லாண்டு என்ற வ்யவஹாரம் திருப் பாவை, திருப்பள்ளியெழுச்சி என்னுமிடங்களில் போல் தனி ப்ரபந்தமாயிருக்கும் சிறப்பைக் காட்டுகின்றது. திருவண்ண மாடங்கள், திருவாடினேன் என்றிப்படி மற்ருேர் திருமொ ழிக்கு வ்யவஹாரம் காணப்படவில்லை என்பது யுக்தமன்று. அந்த வ்யவஹாரம் ஒரு சிறப்பைக் காட்டுகின்றது என்பது உண்மை. ஆனுல் அச்சிறப்பு தனி நூலாயிருக்கும் தன்மை தான் என்பதற்கு ஸாதகப்ரமாணமில்லை. முதல் பத்து பத்தாகாமல் ஒன்பதாகிவிடும் என்ற பாதக ப்ரமாணமிருக் கிறது.

நாச்சியார் திருமொழியில் பதினுன்கு திருமொழிகள் இருந்தும் முதல் பத்து இரண்டாம் பத்து என்று பிரிவு செய்யப்படவில்லை. முழுப்பத்து ஒன்றுக்குமேல் இருக்கு மிடங்களில் அத்யயனுதி ஸௌகர்யத்தைக்கருதிப் பத்துப் பத்து திருமொழிகளைச் சேர்த்து முதல் பத்து இரண்டாம்

பத்து என்றிப்படிப் பிரித்தார்கள். இப்படிப் பிரித்தவர்கள் திருப்பல்லாண்டைத் தனி ப்ரபந்தமாகக் கருதியிருந்தால், **வண்ணமாடங்கள்** முதல் **மெச்சூது** வரையில் ஒரு பத்து. **அரவணையாய்** முதல் **தன்னேராயிரம்** வரையில் இரண்டாம் பத்து. **அஞ்சன வண்ணனை** முதல் **கதிராயிரம்** வரையில் மூன்றும் பத்து. **அலம்பா வெருட்டா** முதல் **வாக்குத் தூய்மை** வரையில் நான்காம் பத்து. பிறகு ஐந்தாம் பத்தில் மூன்றே திருமொழி, என்றல்லவோ பிரித்திருக்கவேண்டும். பத்துப் பத்தாகப் பிரிக்க ஆரம்பித்து முதல் முதலில் ஒன்பது திருமொழிகளையே ஒரு பாகமாக்கி அதற்குப் பத்து என்ற பெயரிடவேண்டிய காரணமென்ன ? முழு மூடன் கூட இப்படிச் செய்யமாட்டான். ஆகவே ஸம்ப்ரதாய ஆரம்பகாலம் முதல் முதல் பத்தின் முதல் திருமொழியாய் அநுஸந்திக்கப்பட்டுவரும் திருப்பல்லாண்டுக்கு 'திரு' வினுல் குறிக்கப்படும் சிறப்பு அந்த ஸ்திதிக்கு, அதாவது அது முதல் பத்தில் அடங்கினதே. தனி நூலன்று என்ற நிலைக்கு, முரணுகாத சிறப்பென்று நிச்சயமாய் அறியவேண்டும். அதுதான் எது எனில் அகண்ட திவ்யப்ரபந்தத்தின் ஆரம்பத்தில் இருக்கையே. எம்பெருமானுக்கு ஒரு விலக்ஷண மங்களாசாஸன ரூபமாய் இருக்கும் பல்லாண்டு பல்லாண்டு, அடியோமோடும் நின்னோடும், என்கிற இரண்டு பாட்டை முதலில் வைத்துக்கொண்டிருப்பதையும் அச்சிறப்பாகக் கொள்ளலாம்.

எவரும் மறுக்கவொண்ணுதபடி உண்மை இவ்வாறு இருக்கின்றபடியால் பிற்காலத்தில் துரபிநிவேசமுள்ள சில ஐடப்ராஸிகள் திருப்பல்லாண்டைத் தனி ப்ரபந்தமாக்கினுர்கள் என்பதை இசைந்தேயாகவேண்டும். புத்தி ஸ்வாதீன

மில்லாத ஒருவன் உயர்ந்த ஒரு பட்டு வஸ்த்ரத்தின் ஒரு தலைப்பைக் கிழித்துப்போட்டுவிட்டான். அதைக்கண்டு வருந்தி அநியாயமாய் இப்படிச் செய்துவிட்டானே என்ற பெரியோர்களின்மீது அவனைச்சேர்ந்த துஷ்டப் பையன்கள் "அவனு கிழித்தான், இயற்கையாகவே இவை இரண்டு வஸ்த்ரங்கள் தானே" என்று கூறிக் கல்லையும் மண்ணையும் எறிந்தார்களாம். அப்படி இருக்கிறது ப்ரக்ருதத்தில் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமென்று போராடுகின்றவர்களின் கதை.

இந்த ஒரு விஷயத்தை நன்றாகக் கவனித்துவிட்டால் தென்கலை வடகலை ஸம்ப்ரதாயபேதத்தின் உண்மை எல்லோருக்கும் உடனே எவ்வித ஸந்தேஹமுமின்றி நிச்சயமாய் விளங்கிவிடும். வேறு ஒன்றும் நாம் சொல்லவேண்டியதில்லை. பிறர் சொல்வதெல்லாம் வெறும் புளுகு என்பது தானே கொள்ளப்படும். திவ்யப்ரபந்தத்தை நாலாயிரமாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தில் இந்த இந்த ப்ரபந்தம் இந்த இந்த வரிசையில் இருக்கவேண்டுமென்ற வ்யவஸ்தை ஸ்ரீமந் நாதமுனிகளால் செய்யப்பட்டது என்பதுயாவருமங்கீகரித்த விஷயம். அவர் திருப்பல்லாண்டைத் தனிப் ப்ரபந்தமாகக் கருதியிருந்தால் வண்ணமாடங்கள் முதல் மெச்சூது முடிவு வரையில் பத்துத் திருமொழிகளைச் சேர்த்து ஒரு தொகுதியாக்கிப் பெரியாழ்வார் திருமொழி முதல் பத்தென்று வகுத்திருக்கவேண்டுமேயன்றி ஒன்பது திருமொழிகளை வைத்துப் பத்து என்று பெயரிடக் காரணமெதுவுமில்லை. நூறு பாசுரங்களுக்குப் பத்து என்று வ்யவஹாரமென்பது மிகவும் பரிஹாஸ்யம். நூறை நூறென்னுமல் ஏன் பத்தென்பது என்றால் ஸமாதானம் கூற வேண்டுமே. கூற முடியுமா? நூறு பாட்டுக்களில் பத்துப் பத்துப் பாட்டு இருப்பதால்

பத்து என்ற வ்யவஹாரம் என்னில் ஐந்து இருபது அல்லது இருபது ஐந்து இருப்பதால் ஐந்து என்றோ இருபது என்றோ வ்யவஹாரம் இருக்கலாமே. அவரிஷ்டம் அது. ஆகையால் அப்படி வ்யவஹரித்தார் எனில் காரணமெதுவுமில்லாமல் தமக்குத் தோன்றியபடி வ்யவஹரித்தார் என்று முடிகின்றது. இனி நூறு ஒரு பத்து என்று கருதியவர் ஸரியாக நூறு இருக்கவேண்டுமென்று கருதினரா அல்லது சிறிது அதிகமாயுமிருக்கலாமென்று கருதினரா? ஒவ்வொரு பத்திலும் நூற்றுக்கு அதிகமாயிருப்பதால் முதல் பக்ஷம் கூடாது. இரண்டாவது பக்ஷத்தில் நூறு நூருகப் பிரிக்கப் புகுந்தவர் ஒவ்வொரு பாகத்திலும் அதிகமாயுமிருக்கலாமென்று ஏன் கொள்ளவேண்டும்? திருமொழி நடுவில் நூறு முடிந்து விடுகிறது. வட்டு நடுவேயின் ஐந்தாம் பாட்டோடு நூருகிவிடுகிறது. மிகுந்த ஐந்தை மேல் சேர்ப்பதில் ஔசித்யமில்லை. அதனுல் அந்த ஐந்தும் இந்த நூற்றிலேயே வைக்கப்படுகிறதெனில், இந்த ஸங்கடமிருப்பதால் நூறு நூருகப் பிரிக்கும் எண்ணம் அவருக்கு இல்லையென்றே கொள்ளவேண்டும். பத்துத் திருமொழிகளை ஒரு பத்தாக்கினுர் என்ருல் எவ்விதக் குற்றமும் ஸங்கடமுமில்லையாகையால் இதுவே ப்ராமாணிகம். நூறு பாட்டு ஒரு பத்தெனப்பட்டது என்பது கேவலம் வஞ்சக வார்த்தை; அல்லது அஜ்ஞ வார்த்தை.

மேலும் ருக்வேதத்தில் மண்டலங்களின் உட்பிரிவுகள் ஸூக்தம் எனப்படுகின்றன. ஸூக்தம் என்பதே தமிழில் திருமொழி எனப்படுகிறது. பல திருமொழிகளுள்ள ப்ரபந்நங்களே பெரியாழ்வார் திருமொழி, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, பெரிய திருமொழி, என்றிப்படி திருமொழி என்ற பெயர் பெற்றன. நம்மாழ்வாராயிரமும் நம்

மாழ்வார் திருமொழி என்றே கூறப்படலாமாயினும் அதன் சிறப்புத் தோன்ற திருவாய்மொழி எனப்பட்டது. ஆகவே திருமொழி, திருவாய்மொழி என்ற பெயர்களுக்குக் காரண மான பெயரையுடைய திருமொழிகளின் எண்ணைக்கொண்டு முதல் பத்து, இரண்டாம் பத்து என்ற வ்யவஹாரம் உண் டாயிற்றென்பது ஸுஸ்பஷ்டமாய் விளங்குகின்றபடியால் பாட்டுக்களின் ஒரு நூற்றுக்குப் பத்தென்ற வ்யவஹாரம் என்பது கேட்க ஸஹிக்காத குடிலப் பேச்சென்னத் தடை யில்லை.

இவ்வளவால் பெரியாழ்வார் திருமொழி முதல் பத்துக்கு, இதில் இரண்டாம் பத்து முதலானவற்றுக்குப் போலும் பெரிய திருமொழி, திருவாய்மொழி இவற்றின் பத்துக்க ளுக்குப்போலும் ப்ராசீனமாய் பத்துத் திருமொழிகள் இருந்தே தீரவேண்டுமென்பது யாவருமிசையவேண்டிய உண்மை. எல்லாம் வல்ல ஸர்வேச்வரனும் இதை மறுக்க முடியாது. இப்படியாகில் திருப்பல்லாண்டைப் பிரித்துத் தனி ப்ரபந்தமென்பதும் முதல் பத்துக்கு ஒன்பதே திரு மொழியென்பதும் அர்வாசீன ஸம்ப்ரதாய குத்ருஷ்டிகளின் விஷமச் செயல் என்பதைத் தவிர வேறு என்ன சொல்லக் கூடும்? திவ்யப்ரபந்தத்தின் முதல் முதலான பாகமே இப்படி நாசமாக்கப்பட்டது. ஏறக்குறைய இருநூறு வரு ஷங்களுக்கு முன் ஆரம்பித்த இந்தப் புது வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் நாளுக்கு நாள் கலியின் கொடுமையினுல் வளர்ந்து திவ்ய தேசங்களையெல்லாம் ராமாவதாரத்திற்கு முந்தின ஜனஸ்தானங்களாக்கியிருக்கிறது. பல பல ப்ரகர ணங்களில் திருப்பல்லாண்டை மட்டும் ஸேவித்து வேறு ப்ரபந்தம் ஸேவிப்பது 'அக்னிமீடே புரோஹிதம்' முதலான வேதாரம்ப மந்த்ரங்களைப் படித்து வேறு பாகங்களை

ஸேவிப்பது போன்றது. தனி ப்ரபந்தமென்பதற்கு இது ப்ரமாணமாகாது. பேராசிரியர்கள் எவரும் திருப்பல்லாண்டைத் தனி ப்ரபந்தமாகக் காட்டவில்லை என்பது கூறப்பட்டது.

"பிரிப்பதிலும் சேர்ப்பதிலும் ஏதேனும் லாப நஷ்டமிருந்தால் துரபிநிவேசமென்னலாம். உள்ளதை உள்ளபடி வெளியிட்டவர்களை வீணாக ஏன் பழிக்க வேண்டும்" எனப்படுகிறது. இல்லாததை உள்ளதாகக் காட்டுகின்றவர்கள் அவர்கள் என்பது விரிவாக விளக்கப்பட்டது. இனி லாப நஷ்டம் எதுவுமிராதபோது துரபிநிவேசம் ஏன் உண்டாகும் என்றதற்கு உண்மையும் அருமையுமான ஸமாதானம் கூறுகின்றோம். கேண்மின், 'ரக்ஷாம்ஸி ஹவா புரோநுவாகே' என்று ஆரம்பித்து வேதத்தில் ஒரு கதை சொல்லப்பட்டிருக்கிறது. ராக்ஷஸர்கள் வெகு உக்ரமான தபஸ்ஸு செய்து, வரம் கொடுக்கவந்த ப்ரஹ்மாவினிடம் "ஸூர்யன் எங்களோடு சண்டை செய்ய இசையவேண்டும். இந்த வரம் தான் நாங்கள் கேட்பது. வேறு எதுவும் எங்களுக்கு வேண்டாம்" என்றார்களாம். அதைக் கேட்ட ப்ரஹ்மா "நீங்கள் போய் அவனைச் சண்டைக்கு இழுங்கள். ஏன் வராமல் போகிறான்" என்றார். அவர்கள் இன்னும் உதயம் முதல் அஸ்தமயம் வரையில் ஸூர்யனைச் சண்டைக்கு அழைத்துக்கொண்டே இருக்கிறார்கள் எனப்பட்டிருக்கிறது. சண்டையே சில பிறவிகளுக்குப் புருஷார்த்தம். தபஸ்ஸு செய்து வரமாகப் பெறும்படியான அருமை புருஷார்த்தம். இது கிடைத்து விட்டால் அது அவர்களுக்குப் பெரும் லாபம். கிடைக்காமல் போனால் பெரும் நஷ்டம்.

சண்டையிட விஷயம் வேண்டுமே. அதற்காகப் பதினெட்டு பேதங்களைக் கல்பித்தனர். அவை போதா என்று கருதியும், மூடர்களும் அறிந்து சண்டைக்குத் தயாராக வேண்டுமென்று உத்தேசித்தும் திருமண் ப்ரணாமம் முதலான விஷயங்களிலும் பேதங்களை வளர்த்துக்கொண்டே வந்தனர். திவ்யப்ரபந்த விஷயத்திலும் பேதங்கள் உண்டாக்கப்பட்டன. தேசிகன் "பல்லாண்டு முதல்" என்றாரல்லவா. அதற்கு நேர் மாறாகத் தனி ப்ரபந்தம் திருப்பல்லாண்டு என்றார்கள். இப்படி ஒரு பேதம் கிடைத்தது ஒரு பெரும் லாபம். இதைக் காரணமாக்கி ஒரு சண்டை கிளப்பாவிட்டால் இந்த பேத கல்பனம் நிஷ்பலமாய்ப் போய்விடுமே என்று எண்ணியும் பாகவதாபசாரங்கள் நிறைந்த கலஹங்களில்லாத நாள் பட்டினி நாளாகையாலும் ப்ரக்ரமம் முதல் பங்கமடைகின்ற நம் ப்ரக்ரம பங்க மஹாவித்வான் திருப்பல்லாண்டைத் தனிப் ப்ரபந்தமாக்காததையே காரணமாகக்கொண்டு ப்ரபந்தஸாரம் தேசிகன் க்ருதி யன்று என்று கோஷணம்பண்ணி பலரையும் சண்டைக்கிழுக்கிறார். ராவண பக்தர்களான சிலர் "ரத்நஹாரீ து பார்த்திவ:' என்ற நீதியை அநுஸரித்து மூன்று உலகங்களையுமாண்ட லங்கேச்வரன் ஸீதையைக் கொண்டுபோனான். ராமன் அவனிடம்போய்க் கெஞ்சிக் கூத்தாடிக் கேட்டும் திருப்பிக் கொடுக்க மறுத்ததன்றி 'உயிரோடு திரும்பிப்போகிறாயா அல்லது என் கத்திக்கு இரையாகிறாயா' என்று அவன் கர்ஜனம் செய்தான். உயிர் பிழைத்தால் போதுமென்று ராமன் திரும்பி தன்னூர் போய்ச் சேர்ந்தான்" என்பது ராமாயணக்கதை. இப்பொழுதிருக்கும் ராமாயணம் இதற்கு மாறாகக்கூறுகின்றதாகையால் இது வால்மீகி இயற்றிய ராமாயணமன்று, என்கிறார்களாம். அவர்களுக்கும் இந்த ப்ரபல

அரிஷ்டத்திற்கும் ஏதேனும் வாசியுண்டா என்று மஹா ஜனங்கள் ஆலோசித்து நிச்சயிக்கவேண்டும்.

பரிசீலன நூல் நான்காம் பக்கத்தில் "திருப்பல்லாண்டையும் பெரியாழ்வார் திருமொழியையும் ஒரே ப்ரபந்தமாகக் கணக்குச் செய்வது ஒவ்வாதுதான். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் இப்படிச் சொல்லமுடியாதுதான்" எனப்பட்டிருக்கிறது. இதில் இரண்டாம் வாக்யத்திற்கு 'இப்படிச் சொன்னால் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களாகமாட்டார்கள்' என்பது பொருள். இதை யாவரும் எளிதில் அறியலாம். இதை நாம் 'ஒரு ப்ரபந்தமாக்கினால் ஸ்ரீவைஷ்ணவத்வம் குலையாதோவென்னில்' என்று அநுவாதம் செய்து தக்க பதில் கூறியிருக்கிறோம். இவையிரண்டையும் புரிந்துகொள்ளச் சக்தியில்லை. நாம் புரிந்துகொள்ளாமலே எழுதியிருக்கிறோமென்று கூறப்படுகிறது. ஸ்வலிகிதமபி நைஷஜாநாதி.

இப்படி நம் விவேக பாரிஜாதத்தின் முதல் ப்ரகரணத்தைப்பற்றி பிறர் சொல்லுவதெல்லாம் அபத்தம் என்பது விளக்கப்பட்டது. இனி அடுத்த ப்ரகரணத்தைப்பற்றிச் சொல்வதைப் பார்ப்போம்.

## 2

திருமங்கையாழ்வாருடைய ஆறு ப்ரபந்தங்களில் திருநெடுந்தாண்டகமே கடைசியானது எனப்படுகிறது. பெரிய திருமடலே கடைசி என்பது ஸித்தாந்தம். இதற்கு பாடக்ரமமே ப்ரமாணம் என்றோம். இங்கு பாடக்ரமமென்று நாம் கருதியதை 'ஸ்வாமி ஸாதித்த இந்த க்ரமத்தை' என்று அடுத்த வாக்யத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். இப்படி

விளக்கம் செய்யப்பட்டிருந்தும் அதை உள்ளபடி உணர மாட்டாமல் 'இதன் கருத்து என்னவென்றால்' என்றாரம் பித்து திவ்யப்ரபந்தத்தில் அந்த ஆறு ப்ரபந்தங்களும் படிக்கப்பட்டிருக்கும் க்ரமத்தை நாம் கருதியதாகக்கூறி அதற்குமேல் குசோத்யங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்பஷ்டமான நம் வார்த்தைகளைப் புரிந்துகொள்ளமாட்டாத ஒரு வ்யக்தி அரும்பெரும் நூல்களைப்பற்றித் தாறுமாறாகப் பேசும்படியான கொடுங்காலமிது. ஹா ஹந்த கலௌ கிம் கிம் ந ஸம்பாவ்யதே

"அறிவுதரும் பெரிய திருமொழி தப்பாமல்" என்றாரம் பித்து ஸ்வாமி 'சீர்பெரிய திருமடலதனில்' என்று முடிவில் பெரிய திருமடலைக் கூறியிருப்பதனால் பெரிய திருமடலே கடைசி ப்ரபந்தமென்றேற்படுகிறது. இந்த க்ரமம் தென்கலை ஸம்ப்ரதாயத்திலும் இஷ்டமென்பது "நாலைந்து மாறைந் தும் நமக்குரைத்தான் வாழியே, இலங்கெழு கூற்றிருக் கையிரு மடலீந்தான் வாழியே" என்கிற அவர்களுடைய உக்தியால் தெரிகிறதென்றும் கூறினோம். நாலைந்து, இருபது பாட்டுக்களையுடைய திருக்குறுந்தாண்டகம். ஆறைந்து திருநெடுந்தாண்டகம். இருமடல் சிறிய திருமட லும் பெரிய திருமடலும். தென்கலை ஸம்ப்ரதாயஸ்தரான திருவல்லிக்கேணி தமிழ்ப் பண்டிதர் சே. கிருஷ்ணமாசார்யர் சென்ற ரௌத்ரிஸு வெளியிட்ட நாலாயிர திவ்யப்ரபந்தத் தின் இரண்டாம் பதிப்பில் திருமங்கையாழ்வார் வைப வத்தைப்பற்றிய பாகத்தில் ஆறு ப்ரபந்தங்களும் பெரிய திருமடலை முடிவாகக்கொண்ட இந்த வரிசையிலேயே நிர்தே சிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே நாலாயிர திவ்யப்ரபந்தம் உருவெடுத்தது முதல் இக்காலம் வரையில் ஸம்ப்ரதாயபேத

மில்லாமல் பெரிய திருமடலே திருமங்கையாழ்வாரின் ப்ரபந்தங்களில் கடைசி என்று கொள்ளப்பட்டு வந்திருக்கிறதென்பது ஸ்பஷ்டம்.

திவ்யஸூரி சரிதத்தில் திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமென்கிற ச்லோகம் இருக்கிறது. இது இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் கொள்ளப்படாமையால் திவ்யஸூரி சரிதத்தின் இந்த ப்ரகரணம் ப்ரக்ஷிப்தமென்று கொள்ளவேண்டும். ப்ராமாணிகமென்னில் [illegible] என்று தேசிகன் காட்டியருளின வழியைப் பின்பற்றி ஒரு நிர்வாஹம் செய்யவேண்டும். இதுவன்றி நான் பார்த்த முயலுக்கு மூன்றே காலிருப்பதனாலே நாலு கால் ப்ராணி அது என்ற நூல் ப்ராமாணிகர் எழுதியதன்று என்று வாதப்போர் புரிய எழுகின்றவன் வழியைப் பின்பற்றுவது உன்மத்தர் போக்கு. பெரிய திருமடல் நான்காவதென்றும் சிறிய திருமடல் ஐந்தாவதென்றும் விபரீதமாக இந்த திவ்யஸூரிசரிதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

"எம்பெருமானை அடைவதில் **மிகவும்** ஆர்த்தியைக் காட்டுவதால் பெரிய திருமடலே இறுதியில் இருக்கத்தக்கது" என்றோம். இதை மறுக்கக் கருதி திருவிருத்தத்தில் நம்மாழ்வாருடைய ஆர்த்தி மிகக் காணப்படுகின்றது. அது சரமப்ரபந்தமன்றே எனப்படுகிறது. "திருவாணை நின்னாணை கண்டாய் கூவிக்கொள்ளாய் வந்தந்தோ" என்னப் பண்ணும் இவ்வித ஆர்த்தியா திருவிருத்தத்தில் இருக்கிறது? [illegible] ।

இனித் திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமென்று பெரியவாச்சான்பிள்ளை அதன் உரை ஆரம்பத்தில் ஸாதித்திருப்பதால் அதற்கு விருத்தமாய் பெரிய திருமடல் சரமப்ரபந்தமென்றது அநாதரணீயமென்னில் அர்த்தக்ரமத்தை அநுஸரித்து உரைகாரர் ஸாதித்தது. ப்ரபந்தம் அவதரித்த க்ரமம் ஸ்வாமி ஸாதித்தது. திருநெடுந்தாண்டகத்தில் பேரானந்தம் பெற்றுவிட்டதாகப் பேசின ஆழ்வார் பிறகு வேறு ப்ரபந்தம் செய்யப் புகுந்து அதில் அந்தப் புருஷார்த்தம் பெறுவதற்கு முன்பே இருக்கக்கூடிய விச்லேஷதசையையே பற்றிப் பேசினரென்று கொண்டக்கால் விரோதமொன்றுமில்லையாகையால் ஸாத்விகர்கள் ஒன்றை ஆதரித்து மற்றொன்றை அநாதரிக்கமாட்டார்கள். "மெய்யே கட்டுவிச்சி சொல்லென்னச் சொன்னாள்" என்று திருநெடுந்தாண்டகத்தில் சுருக்கமாகச் சொன்னதை விஸ்தரிக்கிறார் மேல் என்பது மிகப் பொருத்தமுள்ளது. விரோதமிருப்பதாக வைத்துப் பார்த்தாலும் பெரியோர்கள் விஷயத்தில் நாம் எதுவும் சொல்வதற்கில்லையென்று உதாஸீனராயிருப்பார்கள். பக்ஷபாதத்தினால் ஒன்றை அநாதரணீயமென்றால் மற்றொன்று ஏன் அப்படியாகக் கூடாதென்று வரும். ப்ரபந்தஸாரத்தில் குற்றங்களிருப்பதால் அது தேசிகன் இயற்றியதன்று என்றால் பல பல குற்றங்கள் இருப்பது ப்ரஸித்தமாகையால் பெரியவாச்சான்பிள்ளை இயற்றியதாகக் கருதப்படும் உரைகள் யாவும் அவர் இயற்றியவை அல்ல. பிற்பட்டவர் யாரோ செய்து அவர் தலையில் வைத்தார்கள் என்று பிறர் சொல்லத் தயங்கார்கள். இவர் செய்தார் என்ற அபாதித வ்யவஹாரம் ப்ரபந்தஸாரத்திலும் துல்யம். உண்மையைப் **பேசினால்** பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியைப் பரிஷ்கரிக்கவேணுமென்ற திருவுள்ளத்தினாலேயே ஸ்வாமி

பெரிய மடலைக் கடைசியில் வைத்தருளினரென்று கொள்வதே யுக்தம். திருநெடுந்தாண்டகம் முடிவில் பரமபுருஷார்த்தம் பெற்றதாகக் கூறப்படவில்லை. **இன்பமெய்த நினைந்து உருகியிருப்பன்.** இன்பமெய்தவேண்டுமென்று விரும்பி நினைந்திருப்பேன் என்கிறார் ஆழ்வார் 28-ம்பாட்டில். 29-ம் பாட்டிலும் **நினைந்திட்டேனே** என்று நினைவையே கூறினர். கடைசியான 30-ம் பாட்டிலும் **"விண்ணவர் தம் பெருமானே அருளாயென்று ... கலியன் சொன்ன"** என்று ப்ரார்த்தனுரூபமான உபாயபரம் இப் ப்ரபந்தம் என்றே காட்டினர். ஆகையால் இது கடைசியாயிருக்கத் தகுதியற்றது. பெரிய திருமடல் முடிவில் "தன்னருளும் ஆகமும் தாரானேல் ஊர்வன்" என்றதனுல் மடலூர்வதற்கு அவச்யமில்லாமல் கை தொழுத மாத்ரத்திலோ அல்லது அதற்குப் பின்னோ அருளும் ஆகமும் தந்தான் என்பது குறிப்பாகக் காட்டப்பட்டிருப்பதால் அங்குதான் புருஷார்த்தப்ராப்தி கூறப்பட்டுள்ளதென்று கொள்ளவேண்டுமென்றும் அதனுல் அதுதான் சரமப்ரபந்தமாயிருக்கத் தகுதியுள்ளதென்றும் ஸ்வாமி திருவுள்ளம். ஸம்ப்ரதாய க்ரமத்தில் வந்த வரிசையை பெரியவாச்சான்பிள்ளை அர்த்தத்தைக்கொண்டு மாற்றுகிருர். அது யுக்தமன்று என்பதும் ஸ்வாமி திருவுள்ளம். இதை புத்திமான்கள் ஸ்வயமே அறியக்கூடுமாகையாலும் ப்ரபந்தஸாரம் விமர்சக்ரந்தமன்றுகையாலும் அதைக் கண்டோக்தமாய்ச் சொல்லவில்லை. 'இது மூன்ருவது ப்ரபந்தமாயிருந்தால் இதனை எதற்காகச் சாத்துமுறை செய்வது' எனில் ஆண்டாளின் முதல் ப்ரபந்தமான திருப்பாவைக்கு ஏன் சாத்துமுறை? இதற்கு விடையளிக்கமுடியுமா? பாரிஜாதம் இந்த விவேகத்தைத் தந்திருக்கிறது. பெரிய திருமொழி இத்துடன் முடிகின்றதால் இதற்குச் சாத்துமுறை.

# 3

இனி மூன்றும் விஷயம். திருவரங்கத்தமுதனர் செய்த நூற்றந்தாதியை ராமாநுசன் செய்ததாக ப்ரபந்தஸாரம் கூறுகின்றது— ''யதிராசர் தம்மோடு ஆறிருவர் ஓரொரு வர் அவர் தாம் செய்த'' என்று. இது பெருந் தவறு என் பது வெளிப்படை. இவ்விதத் தவறு தேசிகன் ஸ்ரீ ஸூக்தி களில் இருக்க முடியாது. ஆகையால் ப்ரபந்தஸாரம் தேசி கன் ஸாதித்ததன்று என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமா தானம் கூறினேம்— நூற்றந்தாதியின் கர்த்தாவைக் கூறு மிடத்தில் அமுதனரை வெளிப்படையாகக் கூருமல் எதி ராசரையே கூறுவது என்பது ஸம்ப்ரதாய முறை. அதனு லேயே 'பூதம் ஸரச்ச' என்ற பொதுத் தனியனில் ... ... ... 'யதீந்த்ரமிச்ரான்' என்று யதிராஜனே அநுஷந்திக்கப்பட்டி ருக்கிருர்— என்று. விரிவுக்கஞ்சியும், ப்ரதிவாதி வ்யுத் பந்நர், சாஸ்த்ரஜ்ஞர். சுருக்கமாய் எழுதினுலே பர்யாப் தம் என்று எண்ணியும் ஸ்பஷ்டமான சில விஷயங்களைச் சொல்லாமலே இருந்துவிடுவது நம் வழக்கம். இப்படி நாம் வேண்டுமென்றே விட்ட இடங்களைப் பிடித்துக்கொண்டு அட்டஹாஸம் செய்வது பூர்வபக்ஷிக்கும் வழக்கம். இங் குள்ள மறுப்பு இவ்விதமானதே. இதை உபபாதிக்கின்ருேம். வித்வான்கள் விவேகிகள் யாவரும் மிகக் கவனமாகக் கேட்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கின்ருேம்.

இச்சிறிய தமிழ் ப்ரபந்தத்திலும் தம்முடைய கவிதார்க் கிகஸிம்ஹத்வத்தையும் வேதாந்தாசார்யத்வத்தையும் உப யோகப்படுத்தி வெகு ஸாமர்த்யமாகப் பாட்டுக்களை இயற்றி யிருக்கின்ருர் ஸ்வாமி. இரண்டாம் பாட்டு முதல் பதினுன் காம் பாட்டு வரையிலுள்ள பதின்மூன்று பாட்டுக்களில் ஒவ் வொரு ஆழ்வார் செய்தருளின ப்ரபந்தங்களும் அவற்றில்

ஒவ்வொன்றிலுள்ள பாட்டுக்களின் எண்ணிக்கையும் கூறப் படுகின்றதென்பது முன்பே சொல்லப்பட்டது. அவற்றில் கடைசியாய் நூற்றந்தாதி விஷயமான பாட்டை இப்போது கவனிப்போம்.

தேசமெலா முகந்திடவே பெரும்பூதூரில்
சித்திரையில் ஆதிரைநாள் வந்து தோன்றி
காசினிமேல் வாதியரை வென்ற ரங்கர்
கதியாக வாழ்ந்தருளு மெதிரா சா முன்
பூசுரர்கோன் திருவரங்கத் தமுத னுருன்
பொன்னடிமே லந்தாதி யாகப் போற்றிப்
பேசியநற் கலித்துறைநூற் றெட்டுப் பாட்டும்
பிழையறவே யெனக்கருள்செய் பேணி நீயே.

என்பது அது. கீழுள்ள பன்னிரண்டு பாட்டுக்களிலும் அந்தந்த ஆழ்வாரை ஸம்போதனம் பண்ணி 'எனக்கருள் செய் திருந்த நீயே' என்றிப்படி அந்தந்த ஆழ்வாரே அவர வர் செய்த ப்ரபந்தத்தைத் தமக்கருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கிருர். அந்த க்ரமத்தில் இங்கும் நூற்றந்தாதி யின் கர்த்தாவான அமுதனுரை ஸம்போதனம் பண்ணி "நூற்றெட்டுப் பாட்டும் பிழையறவே யெனக்கருள் செய் பேணி நீயே" என்று ப்ரார்த்தித்திருக்கவேண்டும். ஆனுல் ஸ்வாமி அப்படிச் செய்யாமல் நூற்றந்தாதிக்கு ப்ரதிபாத்ய ரான யதிராஜனை ஸம்போதித்து "உன் விஷயமாக அமுத னுர் செய்த ப்ரபந்தத்தை எனக்கு நீ அருள்" என்கிருர். அவதரித்த நாள் ஊர் திங்களும் ப்ரதிபாத்யரான ராமானுச னுக்கே கூறப்பட்டிருக்கின்றன, கர்த்தாவான அமுதனுருக் கில்லே. இதற்குக் காரணம். அருளிச் செயல்களை மிகவும் ஆதரித்து உலகம் வாழும்படி எங்கும் ப்ரவர்த்திப்பித்த பெருமையினுலும் ஸ்ரீரங்கநாதனுடைய விசேஷ கடாக்ஷத்

திற்கு இலக்கானபடியினுலும் எம்பெருமானுர் ஆழ்வார்களுடைய ஸ்தானத்தைப் பெற்று விளங்கினுர். நம்மாழ்வார் விஷயமாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு இயற்றிய மதுரகவிகள் போல் ராமாநுச நூற்றந்தாதி இயற்றிய திருவரங்கத்தமுதனுர் ஆழ்வார் என்ற பதம் பெறவில்லை. ஆகையால் ஆழ்வார் வரிசையில் இவரைச் சேர்ப்பது உசிதமன்று. கர்த்தாவானபடியால் இவரைச் சொல்லவேண்டியதும் அவச்யமாகின்றது. ஆகையால் ஆழ்வார்கள் ஸ்தானத்தில் ராமாநுசனை வைத்து விசேஷங்களையெல்லாம் கூறிக் கர்த்தாவாக மட்டும் திருவரங்கத்தமுதனுரைக் கூறினுர். இப்பாட்டுடன் ஒவ்வொரு ப்ரபந்தத்திலுள்ள பாட்டுக்களின் எண்ணிக்கையைக் கூறும் ப்ரகரணம் முடிந்தது. இதற்குமேல் ப்ரபந்தம் ஒன்ருனுலும் பலவானுலும் இந்த விசேஷத்தைக் கருதாது ஒவ்வொருவர் செய்த பாட்டுக்களின் மொத்த எண்ணிக்கையைக் கூறும் ப்ரகரணம். இது 15, 16 ஆக இரண்டு பாட்டாக இருக்கிறது. இவை இரண்டும் ஒரே அந்வயமாய் ஒரு வாக்யமாயிருக்கின்றன. கீழ்ச் சொன்ன காரணத்தினுல் இங்கும் "முத்திதருமெதிராசர் பொன்னடிக்கே மொழிந்தவமுதர் பாடல் நூறுமெட்டும்" என்று எதிராசனை முதலில் நிர்தேசித்தே அமுதனுரைக் கூறினுர்.

இங்கு முதலாழ்வார்களின் பாட்டுக்களுடைய எண்ணிக்கையில் வேற்றுமையில்லாதபடியால் மூவர் ப்ரபந்தங்களையும் சேர்த்து மூன்று நூறு என்ருர். வேற்றுமை உள்ளபடியால் மற்றவர் பாட்டுக்களின் எண்ணிக்கையைத் தனித்தனியே கூறினுர். முதலாழ்வார்கள் மூன்று நூறு என்ருல் ஒவ்வொரு முதலாழ்வார் இயற்றியது ஒவ்வொரு நூறு என்பதுதானே கிடைக்கின்றது. கூறிய எண்ணெல்லாம் சேர்ந்தால் நாலாயிரமாகின்றதாகையால் நாலாயிரமென்றது

அநுவாதமாய் நாலாயிர திவ்யப்ரபந்தம் என்ற வ்யவஹாரத்தைப் பொருத்தமாக்குகின்றது. இப்படி முதல் பாட்டாகிற ப்ரதிஜ்ஞாப்ரகரணம் முதல் மூன்று ப்ரகரணம் முடிந்தன. இனி ப்ரபந்தங்கள் மொத்தம் இத்தனை என்று கூறும் நான்காம் ப்ரகரணம் பதினேழாவதான 'வையகமெண்' என்கிற ஒரு பாட்டாலாகியது. ப்ரபந்தங்கள் மொத்தம் இருபத்துநான்கு. அதிகமுமல்ல குறைந்தவையுமல்ல என்று பரிச்சேதம் செய்வதில் இங்கு நோக்கு. இங்கே ப்ரபந்தங்களின் சிறப்புத் தோற்றுவதற்காக அவற்றின் கர்த்தாக்களான ஆழ்வார்களையெல்லாம் அவரவர் பெயரால் நிர்தேசம் செய்து அவர்களுடைய எண்ணிக்கையையும் கூறுகின்றார்: ஆழ்வார்கள் ஆறிருவர் ஒரொருவர். அதாவது பதின்மூவர், என்று. இங்கு நாலாயிரமென்றது எல்லா ப்ரபந்தங்களிலுமுள்ள பாட்டுக்களின் மொத்த எண்ணைக் காட்டுகின்றது.

இவ்விடத்தில் ப்ரபந்தங்களின் கர்த்தாக்களை நிர்தேசிக்கும்போது பன்னிரண்டு ஆழ்வார்களைப்பற்றின வரையில் விசாரம் எதுவுமில்லை. கடைசியான ராமாநுச நூற்றந்தாதியின் கர்த்தாவைக் கூறும்போதுதான் விமர்சம் செய்ய வேண்டியிருக்கிறது. "பொய்கை பூதம் பேயாழ்வார் என்றாரம்பித்து ஐயனருட்கலியனென்று" பன்னிரண்டு ஆழ்வார்களைக் கூறிய பின் அமுதனாரைக் கூறினால் இவரையும் ஆழ்வார்கள் கோஷ்டியில் சேர்த்தது போல் ஆகும். இது ஸம்ப்ரதாயத்தில் எவருமிசையாத விஷயமாகையால் இவர் பெயரை இங்குக் கூறமுடியவில்லை. முன் இரண்டு பாட்டுக்களில் 'எதிராசா ... ... உன் பொன்னடி மேல், எதிராசர் பொன்னடிக்கே' என்று எதிராசனையும் கூறி அமுதனாரையும் கூறினார். அப்படி இங்குக் கூறவியலாது. ஒரு

வரையே கூறவேண்டிய இடமிது. இப்படி ஒருவரையே கூறவேண்டிய இடத்தில் கர்த்தாவான அமுதனாரை விட்டு ப்ரதிபாத்யரான ராமாநுசனையே கூறுவது என்ற ஸம்ப்ர தாய வ்யவஸ்தை இருந்ததாகையால் அதையநுஸரித்து ஸ்வாமி எதிராசனையே இங்கு பதின்மூன்றும் புருஷராகக் குறிப்பிட்டார். "அவ்வித ஸம்ப்ரதாய வ்யவஸ்தை இருந் தது" என்பது 'பூதம் ஸரச்ச' என்ற தனியனில் **யதீந்த்ர மிச்ரான்** என்று எதிராசனைச் சேர்த்திருப்பதால் அறியக் கிடக்கின்றது.

இங்கு ஒரு அசட்டு ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. "பட்டர் அருளிச்செய்த பூதம் ஸரச்சேத்யாதி ச்லோக மானது திவ்யப்ரபந்தாவதாரணத்தைப் பற்றியதேயன்று. ஆழ்வார்களில் நம்மாழ்வார் அங்கியானவர். மற்றையாழ் வார்களும் எம்பெருமானாரும் அவருக்கு அங்கபூதர்கள் என் பதைத் தெரிவிப்பதாமத்தனை. ஆகவே எம்பெருமானாரை யும் முன்னேயிட்டு ஸ்ரீமத் பராங்குச முனியை முடிவிலிட் டது" என்பது அந்த ஆக்ஷேபம். இதற்கு உத்தரம் கூறு கின்றோம். ச்லோகத்திற்குப் பொருள் இதுதான் என்று எவரும் கட்டளையிட முடியாது. பதங்களினாலும் ந்யாயங்க ளாலும் பொருளை நிச்சயிக்கவேண்டும்.

அங்காங்கிபாவம் இங்கு எந்தச் சொல்லாலும் அறிவிக் கப்படவில்லை. இதற்கு மாறாக எல்லாப் பதங்களும் இரண் டாம் வேற்றுமை உள்ளவையாகையால் ப்ரணதோஸ்மியில் நேராக அந்வயித்து அப்பதங்களால் குறிக்கப்பட்டவர்கள் யாவரும் இங்கு செய்யப்படும் ப்ரணாமத்திற்கு இலக்காகும் விஷயத்தில் ஸமரென்று தோற்றுவிக்கின்றன. ப்ரமாணாந் தரங்களால் உயர்வு தாழ்வு ஏற்பட்டால் அதை இங்குக்

கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமில்லை. நம்மாழ்வாரை முடி வில் எடுத்ததும் அவருக்கிட்ட ஸ்ரீமத் என்கிற விசேஷண மும் மற்றவர்களைக் காட்டிலும் அவருக்குள்ள ஒரு சிறப் பைக் காட்டுகிறதென்பது உண்மை. ஆனால் அது மற்ற வர்கள் அங்கமாயிருக்க இவர் அங்கியாயிருத்தல் என்பது அன்று. அதற்கு ப்ரமாணமில்லையாதலின். பாதக ப்ரமாண முமுண்டு. இது நம்மாழ்வாருடைய ஸ்துதி ப்ரகரணமன்று. ஸகல திவ்யப்ரபந்த ஆரம்ப ப்ரகரணம். இதில் ப்ரபந் தங்களை அருளிச் செய்த அத்தனைத் திருநாமங்களுக்கும் ப்ரணமம் பண்ணவேண்டியது உசிதம், ப்ராப்தம். ஒருவ ருக்கு அங்கித்வம் கொண்டால் ப்ரணமம் அங்கேயே பர்ய வஸிக்குமாகையால் மற்றவர்களிடம் ஸ்வரஸமாய் அந்வ யிக்காது. இது ப்ரகரணத்திற்குப் பொருந்தாததொன்று. இனி அந்தச் சிறப்பு எதுவெனில் மற்ற ஆழ்வார்கள் கர்த் தாக்களாகமட்டுமிருக்க இவர் மறைந்திருந்த எல்லா ப்ரபந் தங்களையும் நாதமுனிகள் மூலமாக வெளிப்படுத்தி ப்ரசாரத் திற்குக் கொண்டுவந்ததும் திருவாய்மொழியினால் உபநி ஷத்துக்களின் ரஹஸ்யார்த்தங்களை எடுத்துரைத்து உப தேசித்ததுமே அச்சிறப்பு. இது ப்ரகரணத்திற்கேற்ற கருத்து. இங்கு ஆண்டாளுக்கு அவள் திருத்தகப்பனாரான பெரியாழ்வாரிலும் மதுரகவிகளுக்கு அவர் தேவுமற்றறி யேன் என்று கொண்டாடின நம்மாழ்வாரிலும் அந்தர்பாவம் கருதப்பட்டபடியால் அவ்விருவரையும் ஸ்பஷ்டமாகக் கூற வில்லை. இப்படியன்றி ஆண்டாளை இங்குக் கூறாதது நம் மாழ்வாருக்கு அவயவமாயிருக்க ஔசித்யமில்லை என்ற கார ணத்தினால் என்பது குகல்பனம். இது பொதுத் தனியன் களில் கடைசியானது. லக்ஷ்மீநாதஸமாரம்பாம் குருபரம் பராவிஷயம். அடுத்தது ராமாநுசனைப்பற்றியது. அதற்கு

அடுத்தது நம்மாழ்வாரைப்பற்றியது. அதற்கடுத்ததாய் முடிவில் இருக்கும்படியான இந்த பூதம் ஸரச்ச என்பது முதலாழ்வார்கள் மூவர் முதல் எல்லா ஆழ்வார்களையும் ப்ரதி பாதிக்க வந்தது. ஆகையால் இங்கே ஆண்டாளைக் கருத வேயில்லை என்பது நியாயமன்று. இதனால் ஆண்டாளைக் குறிப்பிடுவதற்கு முரணாகவிருப்பதால் மற்ற ஆழ்வார்களுக்கும் நம்மாழ்வாருக்கும் அங்காங்கிபாவம் சொல்லவந்த தன்று இந்த ச்லோகம் என்பது ஸ்பஷ்டம். இப்படியே மதுர கவிகளை விடுவதற்கும் ராமாநுசனை எடுப்பதற்கும் எவ் விதக் காரணமுமில்லை. ஆகையால் குத்ஸிதத்தின் கூற்று இங்கு வெகு குத்ஸிதம். இப்படிச் சொல்லாலும் கருத்தா லும் பதின்மூவர் இங்கு வணங்கப்படுகிறார்கள். இவர்களில் பன்னிருவர் ப்ரபந்தமியற்றியவர்கள். இனி இயற்பாவில் சேர்ந்த இராமாநுசநூற்றந்தாதியை இயற்றிய அமுதனார் இந்த ச்லோகத்தில் நிர்தேசிக்கப்படவில்லை. அதற்கு ப்ரதி பாத்யரான எதிராசர் நிர்தேசிக்கப்பட்டிருக்கிறார். இந்த இரண்டையும் சேர்த்துப் பார்க்கும் புத்திமான்களுக்கு மற்ற ப்ரபந்தங்களின் கர்த்தாக்களான ஆழ்வார்களோடு இராமாநுசநூற்றந்தாதிக்காக ஒருவரை வெளிப்படையாகக் கூறவேண்டுமானால் இராமாநுசனைத்தான் கூறவேண்டு மென்ற கருத்து இந்த ச்லோகம் இயற்றிய பட்டருக்கு இருந் தது என்பதும் இதிலிருந்து இப்படி ஒரு வ்யவஸ்தை பெரி யோர்களால் அநுஸரிக்கப்பட்டுவந்தது என்பதும் எளிதில் புலனாகும். இந்த வ்யவஸ்தையை அநுஸரித்தே ஸ்வாமி யும் 'எதிராசர் தம்மோடு' என்று ஸாதித்திருக்கின்றார். கீழ் இரண்டு பாட்டுக்களிலும் அமுதனாரைக் கர்த்தாவாக ஸ்பஷ்டமாய்ச் சொல்லியிருக்கிறபடியால் அடுத்த பாட்டில் எதிராசனைத் தாம் கூறும்போது தமக்கு ப்ரமமிருப்பதாகக்

கொள்ளாமல் தம் தாத்பர்யத்தை புத்திமான்கள் உள்ளபடி அறிவார்கள் என்று கருதினர்.

எல்லாம் ப்ரஹ்மமே என்று உபநிஷத்துக்கள் கூறு கின்றன. ப்ரஹ்மம் ஒன்றே மெய். மற்றதெல்லாம் பொய் என்று இதற்கு மற்ற வேதாந்திகள் பொருள் கூறினர்கள். நம் முன்னேர்கள் உபநிஷத்தின் கருத்தை உள்ளபடி கண்டு விளக்கினர்கள். மற்ற வஸ்துக்களேயும் பரப்ரஹ்மத்தையும் இவற்றின் ஸ்வரூபஸ்வபாவங்களேயும் தனித் தனியே விளக்கி, இவற்றுக்குப் பரஸ்பரமுள்ள ஸம்பந்த விசேஷத் தையும் அறிவித்துப் பிறகு உலகமெல்லாம் பரப்ரஹ்மமே என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றமையால் 'பரப்ரஹ்மத் தின் உடலானவை மற்ற வஸ்துக்களெல்லாம். அவற்றின் ஆத்மாவாய் ப்ரதானமாய் இருப்பது ப்ரஹ்மம்' என்ற கருத் துடன் அபேதத்தை அவை கூறுகின்றன என்று நிஷ்கர் ஷம் செய்தார்கள். இதையறிந்தவர்கள் இங்கு மருள் கொள் ளார்கள் என்று தேசிகன் கருதினர். ஆழ்வார்களோடு ஒரு வரிசையில் ஸமமாகக் கூறுவதற்கில்லேயாகையால் அவ ருக்கு அந்தராத்மா போல் மிக ப்ரதானராயிருக்கும் எதிரா சனே நிர்தேசிக்கப்பட்டார் என்று எளிதில் அறிவர் என்று எண்ணினர். 'பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ரான்' என்றுள்ள பூர்வர்களின் நிர்தேச முறை ப்ரஸித்தமா யிருந்தபடியாலும் எவரும் இங்குத் தடுமாறமாட்டார்கள் என்று நிச்சயித்தார். விஷயமறியாத துர்ஜனர்கள் நிந்திப்ப தைப்பற்றித் தமக்குச் சிறிதும் கவலேயில்லே என்று தாமே பல விடங்களில் அருளிச்செய்தார்.

இனி எதிராசன் நூற்றந்தாதியைச் செய்யாதவரா யிருக்க "ஆறிருவர் ஓரொருவரவர் தாம் செய்த" என்று அவர் செய்ததாகக் கூறலாமோவெனில் இவ்வாக்ஷேபமும்

வேதாந்தமார்க்க பரிசயமில்லாமையையே காட்டுகின்றது. "ருதம் பிபந்தௌ" என்று ஜீவனைப் போலவே அகிலஹேய ப்ரத்யநீகனான ஸர்வேச்வரனையும் கர்மபலன்களை அநுபவிப்பவனாக உபநிஷத்துச் சொல்லிற்று. இதன் கருத்து என்னவெனில் ஜீவன் தன் கர்மபயனைத்தான் ஸாக்ஷாத் அநுபவிக்கின்றான். ஸர்வேச்வரன் அவன் அதை அநுபவிக்கும்படிச் செய்கின்றான். போகத்தில் ஜீவன் ஸாக்ஷாத் கர்த்தா. ஸர்வேச்வரன் ப்ரயோஜககர்த்தா, என்றார்கள். வேதாந்த தேசிகன் 'பரகாலயதீந்த்ரமிச்ரான்' இத்யாதி ப்ரயோகங்களுக்கு இந்த உபநிஷத்து கையாண்ட நீதியே மூலமென்பதை உணர்த்துவதற்காகவே முன் இரண்டு பாட்டுக்களில், பரமாசார்யனான எதிராசனுடைய திருவருள் பெற்றவமுதனார் செய்தது நூற்றந்தாதி, என்பதை ஸ்பஷ்டமாகக் கூறி அதனால் எதிராசன் நூற்றந்தாதிக்கு ப்ரயோஜக கர்த்தா என்பதை உய்த்துணரவைத்து இப்பாட்டில் இவரையே கர்த்தாவாகக் கூறினார். ஆழ்வார்கள் அவரவர் ப்ரபந்தங்களுக்கு ஸாக்ஷாத் கர்த்தாக்கள். எதிராசன் நூற்றந்தாதிக்கு ப்ரயோஜக கர்த்தா. எதிராசன் திருவருள் பெற்றிலராகில் அவரிடத்தில் பக்தி உண்டாயிருக்கமாட்டாதாகையால் அமுதனார் இந்த நூற்றந்தாதியை இயற்றியிருக்க முடியவே முடியாது. ஆகையால் எதிராசன் இதற்கு ப்ரயோஜக கர்த்தா. ஆகையால் "ஒரொருவர் அவர் தாம் செய்த" என்றதில் எவ்விதக் குற்றமுமில்லை என்பது மட்டுமன்று; ஸம்ப்ரதாய க்ரமமாய் வந்து உபய வேதாந்தவித்துக்களான மஹாப்ராஜ்ஞர்களே அறிந்து ரஸிக்கக் கூடியதும் அதிவிலக்ஷணமுமான ஒரு மஹா ப்ரௌட ப்ரயோகம் இது.

यथा यथा देशिकस्य भक्तिः पादाम्बुजे दृढा ।
तथा तथाऽवगाहः स्यात् तच्छ्रीसूक्तिसुधाम्बुधौ ॥

பக்தி சிறிதுமில்லை யென்பது மட்டுமின்றி ஸ்வாமியின் வைபவத்திலும் ஸ்ரீஸூக்திகளிலும் குறை கூறுவதையே பிழைப்பின் பயனாகக்கொண்டிருப்பவர்களுக்கு ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளில் குற்றம் தவிர குணமொன்றும் புலனாக வில்லையென்றால் இதில் ஆச்சர்யமொன்றுமில்லை.

எதிராசன் நியமனத்தால் செய்யப்பட்டதாகையால் எதிராசன் ப்ரயோஜககர்த்தா என்பதும் யுக்தமே. அச்சிட்ட நாலாயிர ஸ்ரீகோசங்களில் திருவரங்கத்தமுதனார் வைபவத்தைக் கூறுமிடத்தில் "எம்பெருமானாரும்... ... ... அவரைப் பார்த்து ... ... ஸம்பந்தம் தோற்றும்படி ஒரு ப்ரபந்தம் செய்யும் என்று நியமித்தருள இவரும் ... ... நூற்றெட்டுப் பாட்டாகவருளிச்செய்து" எனப்பட்டிருக்கிறது. இதை இப்படியே தன் நூற்றந்தாதி உரையில் இது கூறியிருக்கின்றது. ஆயினும் இப்போது "உண்மையில் நூற்றந்தாதிக்கு இராமானுசர் ப்ரேரகருமல்லர்" என்கிறது. அது மூடத்தனம் நிறைந்த காலம். இப்போது அறிவு வெள்ளமெடுத்தோடுகின்றது போலும்.

பாஷ்யகாரருடைய நியமனம் இல்லாவிட்டால் நூற்றந்தாதி திவ்யப்ரபந்தத்தில் சேர்ந்தே இராது. இது திவ்ய ப்ரபந்தங்களில் ஒன்றாகத் திகழ்வது ஸ்வாமியின் நியமனத்தினால்தான். ஆகவே திவ்யப்ரபந்தத்வேந பரிகணநத்தில் ஸாக்ஷாத் கர்த்ருத்வமும் எம்பெருமானாருக்கேயாதலால் அவரையே நிர்தேசிக்கவேண்டியதாயிற்று.

## 4

இனி நான்காவது விஷயம். 'வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்' என்றவிடத்தில் பதத்தின் முதலில் 'ப்ர'

என்றிருப்பது தமிழிலக்கணப்படி மிகத் தவறு எனப்படுகிறது. பல வருஷங்களுக்கு முன்பே ஸ்வாமியை தூஷிப்பதற்காக இது கூறப்பட்டிருந்தது. தமிழ் நூல்களிலிருந்து இவ்வித ப்ரயோகங்களை எடுத்துக் காட்டி இதற்கு ஸமாதானம் கூறியிருந்தோம். இதைப் பாரிஜாதத்தில் நினைவூட்டினோம். அப்படியிருந்தும் இது மிகத் தவறு என்ற பழம் பல்லவியே பாடப்படுகிறது. சித்ரகூடம் என்று இப்படி நம் ப்ரபந்தங்களிலேயே ஆழ்வார்களின் ப்ரயோகம் இருப்பதைக் காட்டினோம். அதற்குப் பதத்தின் நடுவே அப்படியிருக்கலாம். முதலில் இருக்கக்கூடாது என்று இப்போது கூறப்படுகின்றது. 'இணைந்தியல் காலை யரலக்கிகரமும்' என்ற நன்னூல் ஸூத்ரம் பதத்தின் ஆதிமாத்ரவிஷயமா? அல்லது நடுவுக்கும் பொதுவானதா? ஆதிமாத்ர விஷயமாகில் 'சித்திரகூடத்திருந்தான் தன்னை' என்றவிடத்தில் இகரம் வரக்கூடாது. பொதுவாகில் 'திருச்சித்ரகூடந்தன்னுள்' என்றவிடத்தில் வராமலிருப்பது கூடாது. ஸூத்ரம் பொதுவாயிருந்தும் நடுவில் இகரம் வராமலிருக்கலாமெனில் ஆதியிலும் வராமலிருக்கலாமென்பதற்குத் தடையென்ன? ஆழ்வார் தவறித்தான் போய்விட்டார் எனில் அவரைப் பின்பற்றி ஸ்வாமியும் தவறிவிட்டார் என்றிருக்கட்டுமே. அல்லது தேசிகன் இத்தவறுள்ள ப்ரபந்தசாரத்தை இயற்றியிருக்கமாட்டாரென்பதுபோல் குலசேகர ஆழ்வார் இத்திருமொழியை இயற்றவில்லையெனவேண்டும். விஷயத்தை அலசிப்பார்த்து ஸாதித்தருளவேண்டும். "சங்கர பாஸ்கர யாதவபாட்ட ப்ரபாகர" என்றவிதில் பதத்தின் ஆரம்பத்தில் ப்ர இருப்பதை புத்திமான்கள் காட்டியதற்கு ஸமாதானுபாஸம் உளறப்படுகிறது. ஸூத்ரத்தில் ஸமாஸத்தில் அடங்காத தனிப்பத்தில்தான் அந்தவிதி என்று கூறப்பட

வில்லை. ஸமாஸத்தில் அடங்கின பதங்களில் இந்தவிதி யில்லையென்றால் அபிப்பிராயம் சம்பிரதாயம் என்பதெல்லாம் தவறாகும். இவற்றைக்கொண்டு செய்யுள் இயற்றக் கூடாதென்றதாகும். இது ஸமாஸஸ்தலமன்று என்று ஒரு குதி குதிக்கலாம். ஆனால் ஜாட்யம் வெளியாவதுதான் பலன். 'வேதநூற்பிராயம் நூறு' என்ற ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தி குற்றமுள்ளதாம். இது தமிழ்தான். செய்யுள் தான். ஸமாஸம்தான். 'சச்சம்பிரதாயம்' என்று உபதேச ரத்னமாலை 58-ம் பாட்டிலுள்ளதையும் இங்கே பராமர்சிப்பது. இனி இது தத்புருஷஸமாஸம் அல்லது மத்யம பதலோபி ஸ்மாஸம். 'சங்கர' இத்யாதி த்வந்த்வ ஸமாஸம் என்னக்கூடும். இலக்கணத்தில் இராத கல்பனைகளைச் செய்து இப்படித் திண்டாடுவதைக்காட்டிலும் ப்ரபந்த ஸாரத்தில் 'ப்ர' இருப்பது குற்றம். மற்றவிடங்களில் எப்படி இருந்தாலும் குற்றமில்லை என்று ஒரே அவதாரணம் செய்துவிட்டால் பிறர் வாய்திறக்க வழியில்லாமல் போய் விடுமே! இன்னும் சிலநாள் கழித்து இந்த மாபெரும் யுக்தி விஷயங்களை அலசி அலசிப்பார்க்கும் மூளையில் தோன்றி விடலாம்.

அருணகிரிநாதர் என்ற சைவர் செய்த உலக ப்ரஸித்தமான திருப்புகழ் முதல் ப்ரகரணம் ஏழாம் பாட்டில் 'கருணாகர ப்ரசண்ட கதிர்வேலா' என்றிருக்கின்றது. ஓ கருணாகரனே, ஓ ப்ரசண்ட கதிர்வேலனே, என்பது இதன் பொருள். பனிரண்டாம் பாட்டில் "கரியென ப்ரசண்ட வாரணப்பிடிதனை" என்றிருக்கிறது. இவ்விரண்டு இடங்களிலும் எவ்வித ஸமாஸமுமின்றி 'ப்ர' என்பது பதத்தின் ஆரம்பத்தில் இருக்கின்றது.

नानाव्याकरणाभिज्ञबहुविद्वत्परिग्रहे ।
शब्दासाधुत्वमाहुर्ये शाब्दिकांस्तान् न मन्महे ॥

என்று தேசிகன் அருமையாய்ச் செய்திருக்கும் உபதேசம் இந்த அஸமஞ்ஜஸத்திற்குப் பொருத்தமானதே. "மெய யெழுத்தை முதலிலேகொண்ட சொல் செய்யுளில் தலை காட்டவே மாட்டாதென்று நாம் எழுதியான பின்பு வாய் திறக்க எவருளர்" என்று வெகு கம்பீரமான கேள்வி கேட் கப்படுகிறது. ஆத்மா இல்லை. ஈச்வரனில்லை யென்று நாம் கூறியபின்பு வாய்திறக்க எவருளர் என்று சார்வாகன் மற்ற எல்லோரையும் ஒரு கேள்வி கேட்டு ஜயபேரி அடித் தானும். அவன் பள்ளிக்கூடத்தில் பயின்றதுபோலும் இது.

ஸம்ஸ்க்ருத பதங்களைத் தமிழில் உபயோகிக்கும் போது எப்படி மாற்றிக்கொள்வது என்பதைக் கூறவந்த நன்னூல் ஸூத்ரங்களில் ஒன்று "இணைந்தியல் காலையரலக் கிகரமும்" என்பது. 'வடமொழியாக்கம்' என்ற தலைப்பின் கீழ் அச்சிடப்பட்டிருக்கின்றது. இதற்கு உதாஹரணங்கள் வாக்கியம் வாச்சியம் நாட்டியம்; வக்கிரம் வச்சிரம் சத்திரம் அப்பிரம்; சுக்கிலம் ஆமிலம்; என்று கொடுக்கப்பட்டிருக் கின்றன. ஆகையால் நடுமுதல் கடை என்ற பேதமின்றி ஸம்யுக்தமான யரலக்களுக்கு இகரம் வருமென்று விதிக்கப் படுகின்றது என்பது ஸ்பஷ்டம். இதன்படி சித்ரகூடம் என்பது தவருகும். சித்திர என்றும் ஆழ்வார் ப்ரயோக மிருப்பதனுல் இந்த ஸூத்ரம் இங்கு ப்ரவ்ருத்திக்கிறது என்பது ஸ்பஷ்டம். அப்படி இருந்தும் சித்ர என்றும் ப்ர யோகிக்கப்பட்டிருப்பதால் ஸம்ஸ்க்ருத பதத்தை மாற்றுவ தானுல் இப்படி மாற்றிக்கொள்ளவேண்டுமென்பது ஸூத்

ரத்தின் கருத்தேயன்றி மாற்ருமல் அப்படியே உபயோகிக்கக்கூடாது என்ற நிஷேதம் கருதப்படவில்லை. ஆகையால் அவச்யமானவிடங்களில் ஸம்ஸ்க்ருதச் சொற்களை மாற்ருமல் உள்ளபடியே ப்ரயோகிக்கலாம் என்பது பெறப்படுகின்றது. இதனுல்தான் ஆழ்வார்கள் பதங்களின் நடுவில் இகரத்தைக்கொள்ளாததுபோல் அருணகிரிநாதர் ஆரம்பத்திலும் கொள்ளவில்லை. தமிழிலக்கணத்தின் இந்த உண்மையை தேசிகன் செவ்வனே அறிவராதலின் ப்ரபந்த சாரமென்று எவ்வித சங்கையுமின்றி ப்ரயோகித்தார்.

**अपि माषं मषं कुर्याच्छन्दोभङ्गं न कारयेत्**

என்பது கவிகள்கொண்ட நியமம். ஆகையால் செய்யுளில் தான் கவிகள் அதற்குத் தக்கபடி பதங்களை அமைப்பார்கள். ஆரியச்சொல்லை வடசொல்லாக்காமல் செய்யுளில் எங்கும் உபயோகப்படுத்தக்கூடாது என்ற பிற்காலத்து இலக்கண நியமத்தை அப்படியே கவிகள் அநுஸரிக்க வில்லை. இதில் அல்பமதிகள் ஏதேனும் சொல்வது யானையின் நடையைப்பற்றி கொசு குறை கூறுவது போன்றது. உண்மை இப்படி இருப்பதால் இந்த அதிகப்ரஸங்கி ஆழ்வாரும் தவறிவிட்டார் அல்லது அந்த ப்ரபந்தத்தை ஆழ்வார் இயற்றவில்லை, கோவில்களில் பொங்கல் புளியோதனம் வாங்குகின்றவர்கள் இயற்றினுர்கள் என்ருவது, ப்ரபந்த சாரம் தேசிகன் இயற்றியதுதான் என்ருவது ஒப்புக் கொள்ளவேண்டும்.

''பதங்களின் நடுவில் போலவே ஆரம்பத்திலும் வட மொழி எழுத்து அப்படியே இருக்கலாமென்பது பெரியோர்களின் கருத்து'' என்று நாம் பாரிஜாதத்தில் கூறினேம். இது எவரும் மறுக்கமுடியாத உண்மை என்பது விளக்கப்

பட்டது. பரமாத்மனை சித்ரகூடம் என்று நாம் காட்டிய ப்ரயோகங்கள் ப்ரபல ப்ரமாணங்களே. ஆகிலும் 'நடுவில் வரலாம். ஆரம்பத்தில்தான் வரக்கூடாது' என்று தான் கூறுவதற்கு எவ்வித ப்ரமாணமும் காட்டாமலே

"தே, மே என்பவை வடமொழியில் வாக்யாரம்பத்தில் வாரா என்று ஒரு வித்வான் சொல்ல தேஜஸ்வீ, மேதஸ்வீ, இத்யாதிகள் தாராளமாக வரக் காண்கிறோமே, என்றாராம் ஒருவர். அது போல் இருக்கின்றது இது"

எனப்பட்டிருக்கிறது. இதில் பதில் சொன்னவர்தான் வித்வான். தன் கருத்தை நன்றாக வெளியிடத் தெரியாத மூடன் தே மே வாக்யாரம்பத்தில் வாரா என்றான். தேஜஸ்வீ, சைத்ர:, மேதஸ்வீ மைத்ர:, என்று வாக்யாரம்பத்தில் தே மே என்ற இரண்டு எழுத்துக்களும் வரக் காண்கின்றோமே என்கிறார் வித்வான். சிறிது நேரம் விழித்துவிட்டு அம்மூடன் எழுத்துக்களை விட்டுப் பதங்களைச் சொன்னதாகக் கொள்ளலாம் என்றான். அதைக் கேட்ட வித்வான் கேலிச் சிரிப்புடன்

ते धूर्ताः परपरिवादजीविनो ये ।
मे त्वं देवि हरेः प्रिया (मे हे लक्ष्मि,) ।

என்றிப்படி இரண்டு பதங்களும் வாக்யாரம்பத்தில் திவ்யமாய் வருகின்றனவே என்றார்.

மூடன்—வாராவென்று யாரோ சொல்லக் கேட்டிருக்கிறேனே.

வித்வான்—கேட்டிருக்கலாம். அதைப்பற்றி வீட்டிலுள்ள பெரியோர்களைக் கேட்டுத் தெளிவு பெறலாமே.

மூடன்—அதெப்படி ஸ்வாமின். பல நாற்றுண்டுகளாகப் படிப்பே இல்லாத வம்சமன்றோ எங்களுடையது. எங்களைச் சேர்ந்த எவரும் படித்தவரல்லர். அடிதடி சண்டைக்காகவும் அது கிடையாதபோது வாய்ச் சண்டைக்காகவும் வாழ்வதன்றோ எங்கள் குலம். தேவரீரே க்ருபை செய்து ஸாதித்தால் நல்லது.

வித்வான்—படிப்பே இல்லாத வம்சத்தில் பிறந்த ஒருவன் சிறிது அறிவு பெற்றுவிட்டால், அதாவது 'ராமசப்தம் என்று ஒன்று உண்டு. ஆனால் அது மகாராந்தம்' என்று க்ரஹித்தவுடனே, உலகத்திலேயே படித்தவர் எவருமில்லையென்றுகொண்டு தலைகீழாக நிற்பான். நீ அவ்வாறன்றி பணிவு உள்ளவனாயிருப்பதைப்பற்றி ஸந்தோஷம். யுஷ்மத் அஸ்மத் என்ற சப்தங்களின் தவ தே, மம மே, என்ற தே மே இருக்கின்றனவே அவை வாக்யாரம்பத்தில் வருவதில்லை. இதை நினைவில் வைத்துக்கொள். இனி யாரிடத்திலாவது சொன்னால் இப்படி ஸ்பஷ்டமாய்ச் சொல்.

## 5

சிறிய திருமடல் பெரிய திருமடல் இரண்டும் ஸம்ப்ரதாயத்தில் பல பாட்டுக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இது ஏட்டுச் சுவடிகளிலும் அவற்றை ஆதாரமாகக் கொண்ட அச்சுப் புஸ்தகங்களிலும் அங்கங்கே போடப்பட்டிருக்கும் சிறிய குறுக்குக் கோடுகளால் விளங்குகின்றது. பாட்டுக்களின் முடிவைக் காட்டுவது தவிர வேறு எவ்வித

ப்ரயோஜனமும் இக்கோடுகளுக்குக் கிடையாது. இது மறுக்கமுடியாத ப்ரபல ப்ரமாணம். நூறு வருஷங்களுக்கு முன் அச்சிட்ட புஸ்தகங்களில் லக்கமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு ப்ரக்ரமபங்க மஹாவித்வான் மறுப்பு எழுதியிருக்கும் வேடிக்கையை எல்லோரும் ரஸிக்கவேணும்:

திருமடல் அச்சிட்டவர் எவரோ கோடுகள் போட்டிருக்கிறூராம். லக்கங்களும் போட்டிருக்கிறூராம். அது ஒரு பெரிய ப்ரமாணமாம்.

என்பதுதான்அது. இது 'ஆம்' போட்டுவிட்டால் கொசுவின் ரக்கைக் காற்றிஞல் குலபர்வதங்கள் போல் பிறர் சொன்ன ப்ரபல யுக்திகள் சிதறிவிடுமன்ருே ! தனித் தனிப் பிரிவாக ஸேவிக்கும் வழக்கமுண்டு என்று இரண்டாவது ப்ரமாணம் கூறிஞேம். இதற்கு ஸமாதானம் "வாழாள்பட்டு" என்றிது முதலான பாட்டுக்களில் ஒவ்வொன்றையும் முற்பாதி பிற்பாதியாகப் பிரித்து ஸேவிக்கிருர்கள். அதஞல் ஒரு பாட்டு இரண்டு பாட்டாய்விடுமா ?" எனப்படுகிறது. இதற்கு உத்தரம். ஸேவாக்ரமத்திஞல் இங்குப் பிரிவு உண்டு என்பது நிஸ்ஸந்தேஹமாய்ப் புலஞகின்றது. அதேபோல் திருமடல்களில் பிரிவு உண்டு என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். மற்றப் பாட்டுக்கள் சிறியவையாகையாலும் முற்பாதி பிற்பாதி என்பதை யாவரும் தானே யறியக்கூடுமாகையாலும் அவற்றில் செய்யவேண்டிய நியமம் எதுவுமில்லை. மடல்கள் பெரியவையானபடியால் அவற்றில் வ்யவஸ்தை செய்யப்படாவிட்டால் கலக்கமும் அதஞல் வேறுபாடுகளும் உண்டாமென்று பார்த்து அவற்றைத் தவிர்ப்பதற்காக நாற்பது பிரிவு எழுபத்தெட்டு பிரிவு என்ற நியமத்தைச் செய்தார்கள். ஒவ்வொரு பிரிவையும் ஒரு பாட்டு என்ருர்கள். பாடப்படுவது பாட்டு. இலக்கணப்படி உள்ள பாட்டில் பாட்டு

ன்ற சொல் யோகரூடம். அதன் ஒரு பாகத்தில் யௌகி கம். மற்றப் பாட்டுக்களில் ஒவ்வொரு பாதியையும் ஒரு பாட்டு எனலாமோவெனில் பாடப்படுவதால் பாட்டென்னத் தடையேயில்லை. அப்படி ஒருவரும் வ்யவஹரிக்கவில்லையே என்னில் அவச்யமில்லை. வ்யவஹரிக்கவில்லை. மடல்களில் அவச்யமிருந்தது. வ்யவஹரித்தார்கள். ஆகையால் இலக் கணப்படி ஒரே பாட்டானாலும் சிறிய திருமடல் 40 பாட்டுக் களுடையதென்றும் பெரிய திருமடல் 78 பாட்டுக்களுடைய தென்றும் முன்னோர் பிரித்துச் செய்திருக்கும் வ்யவஸ் தையில் குற்றமொன்றுமில்லை.

பல்லாண்டு பல்லாண்டு, அடியோமோடும், என்ற இந்த இரண்டு பாட்டுக்களை ஒரே பாட்டென்ற பாவனையுடன் ஸேவித்து வருவதனால் அவை ஒரு பாட்டாய்விடுமோ ? என்று மற்றொரு கேள்வி கேட்கப்படுகிறது. இதற்கு இங்கே ஸங்கதியேயில்லை. ஸித்தாந்தத்திற்கு இது அநு கூலம். இந்த இரண்டு பாட்டுக்களை ஒரு பாட்டென்ற பாவ னையுடன் ஸேவிப்பதுபோல் ஒரே பாட்டான மடல்களைப் பல பாட்டுக்களென்ற பாவனையுடன் ஸேவிக்கின்றார்கள் என்றபடி. பல என்ற பாவனையிருப்பதால் உண்மையில் பலவாகா எனில் இலக்கணப்படி பலவாகா. இலக்கணப் படிப் பல என்று எவரும் சொல்லவில்லை. பிரிவுகள் பல இருப்பது உண்மை. ஒவ்வொரு பிரிவை ஒரு பாட்டென வைத்துக் கணக்கு செய்யப்பட்டால் விரோதமென்ன ? ஒரு பிரிவை ஏன் ஒரு பாட்டென்னவேண்டுமெனில் அநுஸந்தா னத்தில் மாறுபாடும் அதனால் அவ்யவஸ்தையும் ஏற்படா மல் இருப்பதற்காக என்பது முன்பே கூறப்பட்டது. உண் மையில் அவ்விரண்டு பாட்டுக்களை ஒரே பாட்டென்ற பாவ

னையுடன் ஸேவிக்கின்றார்கள் என்பதில்லை. தனித் தனிப் பாட்டென்ற பாவனையுடன்தான் முழு முழுப் பாட்டாகவே ஸேவிக்கின்றார்கள். இதற்குக் காரணம்.

மதுரையில் யானை மேல் வீதிவலம் வரும்போது ஸேவை ஸாதித்த எம்பெருமானைப் பெரியாழ்வார் மங்களா சாஸனம் செய்தது இவ்விரண்டு பாட்டாலேயே. பிறகு ப்ரபந்தம் இயற்ற ஆரம்பித்தபோது முதலில் முன் செய்த மங்களாசாஸனத்தைப்பற்றியே 'வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்' என்றாரம்பித்து முதல் திருமொழி ஸாதித்துப் பிறகு மங்களாசாஸனத்தில் மல்லாண்ட திண்டோள் என்று ப்ரஸ்துதமான க்ருஷ்ணாவதார சரிதத்தை அடிமுதல் அநுபவிக்கக் கருதி வண்ணமாடங்கள் சூழ் என்று தொடங்கி மேல் திருமொழிகளை ஸாதித்தார். வாழாள்பட்டு முதலிய முதல் திருமொழிப் பாசுரங்களில் பல்லாண்டு கூறுதும் பல்லாண்டு கூறுமின் என்று நிர்தேசிக்கப்பட்ட பல்லாண்டு எதுவெனில் அதை விளங்கவைப்பதற்காக பல்லாண்டு பல்லாண்டு அடியோமோடும் நின்னோடும் என்ற இந்த மங்களாசாஸனப் பாட்டு இரண்டும் முதலில் வைக்கப்பட்டன. இவை ஸாக்ஷாத் திருமொழியில் சேர்ந்தவை அல்ல. வாழாள்பட்டு என்பது முதலான பத்துப் பாட்டுக்களே வண்ணமாடங்கள்சூழ் முதலான பத்துப் பாட்டுக்கள் போல் ஒரு திருமொழி. பல்லாண்டு கூறுதும் என்றால் பல்லாண்டு பல்லாண்டு என்ற இந்த இரண்டு பாட்டுக்களையும் பாடி மங்களாசாஸனம் செய்வோம் என்பது பொருள். இப்பாட்டு இரண்டையும் சேர்த்து இத்திருமொழியில் பனிரண்டு பாட்டு. ஆகிலும் பல்லாண்டு கூறுவதைச் சொல்லும் மேல் பத்துப் பாட்டுக்களும் இவற்றிலுள்ள பல்லாண்டு என்ற சொல்லின் பொருளான முதல் இரண்டு பாட்டும்

வெவ்வேறு வகைப்பட்டவை என்பது ஸ்பஷ்டம். இப்படி இவை இரண்டும் விலக்ஷணமானவை என்பதைக் காட்டுவ தற்காகவே முழு முழுப் பாட்டாகவே இவற்றின் அநுஸந் தானம் செய்யப்படுகின்றது. ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்கள் ஏதோ ஒரு விசேஷத்தைக் குறிப்பாகக் காட்டுவதற்காகவே அங்கங்கே ஒரு நியமத்தைச் செய்திருக்கிறுர்கள். சாத்து மறை காலத்தில் முடிவில் இவ்விரண்டு பாட்டுக்களை மட் டும் அநுஸந்திப்பதும் இவை தனித்தவை என்பதைக் காட் டுகின்றது. பன்னிரண்டு பாட்டும் ஒரு திருமொழியாளுல் திருவாய்மொழி சாத்துமறைக்குப் பிறகு கண்ணிநுண் சிறுத்தாம்பு முழுவதும் போல் இராமானுச நூற்றந்தாதி சாத்துமறைக்குப் பிறகு பன்னிரண்டு பாட்டுக்களும் அநு ஸந்திக்கப்படவேண்டும். இரண்டு பாட்டுக்களையே அநு ஸந்திப்பதுதான் வழக்கம். ஆகையால் இவை இரண்டும் தனித்தவை என்பதில் ஸந்தேஹமில்லை. இவ்வுண்மையை அறியாதவர்கள் வாழாட்பட்டு என்று தொடங்கும் திரு மொழியையும் சேர்த்துத் தனி ப்ரபந்தமென்று கொண்டு முதல் பத்தை ஒன்பது திருமொழியாக்கினுர்கள். திருப்பல் லாண்டு என்பதற்கு முக்யார்த்தம் பல்லாண்டு பல்லாண்டு முதலான இரண்டு பாட்டுக்களே. திருமொழியையும் சேர்த்து அப்படி வ்யவஹரிப்பது கௌணம். 'பேரணிந்த வில்லிபுத்தூர்' என்ற பாட்டில் திருப்பல்லாண்டு என்பதில் திரு என்ற ஸ்தானத்தில் 'ஏரணி' என்ற விசேஷணம் இடப் பட்டிருக்கிறது. 'மால் கருடவாஹனனுயத் தோன்ற வாழ்த் தும்' என்ற இந்த விசேஷணத்தினுல் முதல் இரண்டு பாட் டுக்களே ஏரணி பல்லாண்டு என்பதனுல் கருதப்பட்டது என்பது விளங்குகின்றது. வாழாட்பட்டு முதலான பாட் டுக்களில் வாழ்த்து இல்லையாகையால் அவை வாழ்த்தும்

பல்லாண்டாகமாட்டா. வாழ்த்தும் பல்லாண்டை முதலாக வுடைய பாட்டுக்களாகின்றன. இவ்விஷயங்களை ஒரு வருஷத்திற்கு முன்பு ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் நாம் வெளியிட்டிருக்கிறோம். தனித்தவையாகிலும் இரண்டே பாட்டை ஒரு திருமொழியென்பது உசிதமன்றாகையால் தனித் திருமொழியெனப்படாமல் முதல் திருமொழியில் ஆரம்பப் பாட்டுக்களாகவே எண்ணப்பட்டன.

பெரிய திருமொழி ஆறும்பத்து முதல் திருமொழியில் ஒவ்வொரு பாசுரத்தையும் மற்றத் திருமொழிகளில் போல் பாதி பாதியாகப் பிரித்து ஸேவியாததற்குக் காரணம் ஒவ்வொரு பாசுரத்திலும் அளவடி இரண்டு தனியே இருப்பது. முழுப் பாட்டை ஒரு பக்கமும் இந்த அளவடி இரண்டை மற்றொரு பக்கமும் ஸேவிப்பது என்ற இந்த க்ரமத்தை விட்டு வேறு விதமாகப் பிரித்து ஸேவித்தால் பல கோளாறுகள் உண்டாம். அவையில்லாத கடைசிப் பாட்டில் பாதியாகப் பிரித்து ஸேவை க்ரமமாய் நடக்கின்றது. இப்படிப் பாட்டுக்களின் ஸேவை ஒரு நியமத்தை அநுஸரித்தே இருக்கின்றது. ஆகையால் மடல்களின் ஸேவாக்ரமமும் ப்ராசீனமாயுள்ள ஒரு வ்யவஸ்தையை அநுஸரித்தே வந்திருக்கிறதென்பதை அபலபிக்க முடியாது. இங்கு ஒரு விசேஷம். கீழ்ச் சொன்ன பெரிய திருமொழி ஆறும் பத்து முதல் திருமொழியில் நான்கடி வஞ்சி விருத்தம் முடிந்த பிறகு அளவடி இரண்டு தனியே யிருக்கின்றனவாயினும் இவற்றையும் சேர்த்து ஒரு பாட்டென்று எண்ணிக்கை கொடுக்கப் பட்டிருக்கிறது. இது எப்படிப் பொருந்தும்? ஆறடியும் சேர்ந்து ஒரு பாட்டன்றே. "அத்யாபகர்கள் நான்கடிகளை இரண்டடியாகக்கொண்டு இயல் ஸேவித்து வருவது முன்னோர் முறை" எனப்பட்டிருக்கிறது. "இரண்டடியாகக்

கொண்டு" என்றால் ப்ரமித்து என்பது பொருளா? அல்லது அறிந்துவைத்தே அப்படி பாவித்து, அதாவது ஏறிட்டுக் கொண்டு என்பதா? முன்னோர் ப்ரமித்தார்கள் என்பது அபசாரமாகையால் முதல் பக்ஷம் கூடாது. இரண்டாவது பக்ஷத்தில் இலக்கண விரோதம். ஒன்றரைப் பாட்டு ஒரு பாட்டு எப்படியாகும்? இலக்கணப்படி ஒன்றரையானாலும் அந்வயம் அநுஸந்தான ஸௌகர்யம் முதலியவற்றை உத்தேசித்து ஒன்றென லக்ஷமிட்டார்கள். இது ஸாங்கேதிகம். அதனால் விரோதமில்லையெனவேண்டும். இப்படியே திருமடல் ஒவ்வொன்றும் இலக்கணப்படி ஒரே பாட்டாயினும் அத்யயன அநுஸந்தானாதி ஸௌகர்யங்களை உத்தேசித்துப் பிரிவு செய்து பாட்டின் ஒரு பாகத்தையே பாட்டென்று வைத்துக் கணக்கிட்டார்கள், என்று நேர்மதிகள் கொள்ள வேண்டும்.

இப்படி நாதமுனிகள் வ்யவஸ்தை செய்தருளிய அநுஸந்தான க்ரமத்தை அநுஸரித்தே பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானத்தில் மடல்களின் பிரிவு காணப் படுகின்றது. ஐந்தாறு இடங்களில் தவிர மற்ற இடங்களில் எல்லாம் மூல ஸ்ரீகோசங்களில் போலவே பாட்டுக்களின் முடிவின் அடையாளமான கோடுகளும் இடப்பட்டிருக்கின்றன. எண்ணிக்கை கொடுக்கப்படாமையால் சில இடங்களில் ஸந்தேஹம் ஏற்பட்டு கோடுகள் விடப்பட்டிருக்கின்றன. இந்த நிலையைத் தடுப்பதற்காகவே ஸ்வாமி நாற்பது என்று பாட்டின் லக்கத்தை ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறார். முதல் பாட்டு இரண்டாம் பாட்டு என்றிப்படி மற்றவிடங்களில்போல் இங்கு பெரியவாச்சான்பிள்ளை வ்யவஹரிக்காமையால் பாட்டுக்கள் பல என்று அவர் திருவுள்ள

மில்லை என்பது யுக்தமன்று. 'பாட்டு ஒன்றே. பல அல்ல. அநுஸந்தானத்திற்கேற்ற பிரிவு கிடையாது', என்று அவர் ஸாதிக்கவில்லை. கோடுகளுடன் பிரிவு அவர் உரை ஸ்ரீகோசங்களிலும் இருக்கிறது. ப்ரஸக்தி உண்டாகாமையால் முதல் பாட்டு இரண்டாம் பாட்டு என்றிப்படி வ்யவஹரிக்கவில்லை. மணவாளமாமுனிகள் வரையில் எவரும் இலக்கணத்திற்போலவே ஸம்ப்ரதாயத்திலும் பாட்டு ஒன்றே என்று கூறவில்லை. ஆகையால் ப்ரபந்தஸாரத்தில் ஸாதித்ததை ஸகல ஆசார்யர்களுடையவும் கருத்தென்று கொள்ள வேண்டியது ப்ராமாணிகர்களுக்கு ப்ராப்தம். "77½ பாட்டுக்கள் 148½ பாட்டுக்கள் என்று திருமடல்களைத் தென்கலை ஸம்ப்ரதாயத்தில் பிரித்திருப்பதும் தவறு, மிகந் தவறு என்று ஒப்புக்கொள்ளுகிறோம்" எனப்படுகிறது. இக்காலத்தவர் ஒப்புக்கொள்ளுகிறார்களா, இல்லையா ? என்பது கேள்வியே யன்று. ஒரே பாட்டு என்ற இலக்கண முறையை விட்டுப் பல பாட்டுக்களாகப் பிரிவு ஒன்று தென்கலை ஸம்ப்ரதாயத்திலும் இருந்தது என்பது இதனால் ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் விளங்குகின்றது. ஆகையால் பெரியவாச்சான்பிள்ளைக்கும் இவ்விதப் பிரிவு இஷ்டமென்றே இவர்களின் கருத்தென்பது புலனாகின்றது. ஆகவே பல பாட்டுக்களாகப் பிரித்து அநுஸந்திப்பது இரு ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் ஸம்மதமானது. ஆனால் ஒவ்வொரு திருமடலிலும் எத்தனை பாட்டுக்கள் என்பது ஸ்பஷ்டமாக உரைகளில் கூறப்படாமையால் சிலருக்கு ஸந்தேஹம் அல்லது கலக்கம் உண்டாகக்கூடுமென்று கருதி ஸ்வாமி பாட்டுக்களின் எண்ணிக்கைகளைக் கூறினார். நூற்றந்தாதியை வெளியே தள்ளினவர்கள் அந்த நூற்றெட்டு என்ற லக்கத்தைச் சரிக்கட்டுவதற்காகத்

திருமடல் பாட்டுக்களின் எண்ணிக்கையைப் பெருக்கினுர்கள் என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிகின்றது. தேசிகன் திருமடல் பாட்டுக்களின் எண்ணிக்கை இது என்றும், திவ்ய ப்ரபந்தங்களின் பாட்டுக்கள் மொத்தம் நாலாயிரமென்றும் ப்ரபந்தஸாரத்தில் ஸாதித்திராவிட்டால் அவற்றுக்குத் தாம் ஒரு எண்ணிக்கையைக் கொடுக்கவேண்டுமென்று பிறர் புத்தியில் தோன்றியேயிருக்காது.

"நூற்றந்தாதிக்கு திவ்ய ப்ரபந்தங்களில் சேர்க்கையைப் பொறுக்காத ஸம்ப்ரதாய குத்ருஷ்டிகள் இரண்டு மடல்களின் எண்ணிக்கையையும் பெருக்கினர்" என்ரேம். இதற்கு "அதை இயற்பா ஆயிரத்தில் சேர்த்து மற்ற ப்ரபந்தங்களுக்குள்ள எல்லா நியமங்களையும் இதன் விஷயத்திலும் அநுஷ்டித்து வருகிரேமாகையால் இந்த தூஷணம் எங்களைச் சாராது" என்று பதில் கூறப்படுகிறது. சிறிய திருமடலை 77½ பாட்டாகவும் பெரிய திருமடலை 148½ பாட்டாகவும் பிரித்து 'நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே' என்று நாதமுனிகள் காலத்திலேயே நாலாயிரமிருந்தாகக் கூறியவர் ஒருவர் இருந்தாரா இல்லையா ? அவர் தென்ஞசிரியரா அன்ரு ? அப்படி ஒருவர் இருக்கவே இல்லையென்றும் அவர் தென்ஞசிரியர் அன்று என்றும் அபலாபம் செய்ய முடியாது. அவ்வித எண்ணையும் வாழிச் செய்யுளையும் ப்ரத்யக்ஷமாகக் காண்கின்ரேமாகையால். ஆகவே ஒருவர் இருந்தாரென்னவேண்டும். அவரையும் அவரைப் பின்பற்றுமவர்களையும்பற்றியது நம் பேச்சு. இவ்வழியில் போகாமல் நாலாயிரத்தில் அடங்கியதே நூற்றந்தாதி என்னுமவர்களைப்பற்றி நாம் எதுவும் சொல்ல முன்வரவில்லை. இதுவேயன்ரே நம் ஸித்தாந்தம். தென்கலையார் அச்சிட்ட திவ்ய ப்ரபந்தகோசங்களில் ராமானுச

நூற்றந்தாதி இயற்பா பாகத்தில் சேர்க்கப்படாமல் திருவாய்மொழிக்குப் பிறகு முடிவில் தனியே வைக்கப்பட்டிருக்கிறது. அகராதியும் இதற்கு மட்டும் தனி. இது அச்சிட்டவர்களின் தவரு, அல்லது முன்னேயே இருந்த குத்ருஷ்டிகளின் வழியை அநுஸரித்ததா என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். முதலாயிரம், பெரிய திருமொழி ஆயிரம், திருவாய்மொழியாயிரம், இயற்பாவாயிரம் என்ற க்ரமந் தான் ப்ராசீனமானது. அச்சிட்ட ப்ராசீன புஸ்தகங்களில் இந்த வரிசையே கொள்ளப்பட்டிருக்கிறது. இவற்றில் நான்காவதான இயற்பாவாயிரத்தின் முடிவில் நூற்றந்தாதி இருந்தது. இதில் நூற்றந்தாதிக்கு மற்ற ப்ரபந்தங்களுடன் சேர்த்தியைப் பொறுக்காதவர்கள் நூற்றந்தாதியை மட்டும் இருந்த இடத்திலேயே விட்டுவிட்டு மற்ற இயற்பா பாகம் முழுவதையும் மூன்ருவது ஆயிரமாக மாற்றிவிட்டார்கள்.

திருமடல் இலக்கணப்படி ஒரு பாட்டாளுலும் அநுஸந்தானப்படி பல பாட்டுக்களாகக் கொள்ளப்பட்டிருக்கிறது என்பதற்கு ஒரே வாக்யத்தைப் பிரித்து ஒரு பாகத்தை முன் பஞ்சாதியிலும் மற்ளெரு பாகத்தைப் பின் பஞ்சாதியிலும் சேர்த்திருப்பதை உதாஹரணமாகக் காட்டினேம். இப்படியே சாந்தோக்யோபநிஷத்தில் ஒரு ச்லோகத்தின் முதல் பாதியை முன் கண்டத்திலும் பின்பாதியை அடுத்த கண்டத்திலும் சேர்த்துப் பிரித்திருப்பதைக் காட்டினேம். (விவேக பாரிஜாதம் 9-ம் பக்கம்). இதற்கு அத்புதமாய், அத்யத்புதமாய், அத்யந்தாத்புதமாய், பரமாத்புதமாய் ஸமாதானம் கூறப்பட்டிருக்கிறது. அதை அப்படியே எழுதுகிறோம்:—

வடமொழி வேதத்தில் என்று தொடங்கியும் சாந்தோக்யோபநிஷத்தில் என்று தொடங்கியும் எழுதப்பட்டுள்ள அக்கிலிபிககிலிஜ்ஞான பரீவாஹங்களான விஷயங்களை நாம் அலசி அலசித் தொலைப்போம்.

என்பது அது. காயிதம் நிற்கமாட்டேனென்றதா, பேனு எழுதமாட்டேனென்றதா, அச்சுயந்திரம் அசையமாட்டேனென்றதா. ஏன் உடனே அலசி அலசித் தொலைக்கவில்லையோ? சர்க்கரையைச் சர்க்கரை என்பவன் கூறும் விஷயங்களை இது மணல் என்பவன் எப்படி அலசி அலசித் தொலைப்பனே அப்படி இது தொலைக்கப்போகின்றது போலும். இந்த ஜந்துவினுல் இதுவரையில் வெளியிடப்பட்ட ஒவ்வொரு நூலிலும் முதல் அட்டை முதல் கடைசி அட்டைவரையிலுள்ளவை யாவும் அக்கிலிபிக்கிலிஜ்ஞான பரிவாஹங்களன்றி மற்ற எவையுமல்ல என்பது ஸர்வலோகப்ரஸித்தம். நமோ நிஜபூஜ்ஜாய ! ஏழேழ் பிறவியிலும் வாய்திறக்க முடியாது. திறந்தால் துர்நாற்றமன்றி வேறென்றும் வெளிவராது.

ப்ரபந்தஸாரம் பதினேழாம் பாட்டில் 'ஓரொருவர்' என்ற சொல் அபத்தம் என்பது தவறு. ஓரொன்றொன்று என்று வாய்பாடு ஓதவில்லையா? ஓரிரண்டு ஒருமூன்று என்றிப்படிச் சொல்வது எந்த இலக்கணத்திற்கு விருத்தம்? என்று பாரிஜாதத்தின் முடிவில் கூறினேம். இதை உள்ளபடி உணரமாட்டாமையினுலோ மறுப்புக் கூறமுடியாமையினுலோ மஹாகவியின் 'ஏகைக' என்கிற ப்ரயோகத்தையும் 'சீரொன்று தூப்புல்' என்ற தனியனிலுள்ள 'ஓரொன்று' என்ற இதையும் எடுத்துக்காட்டியிருக்கலாமே எனப்படுகிறது. ஓரொன்றொன்று என்று ஓதப்படுகின்ற வாய்

பாட்டின் பொருள் இன்னும் அறியப்படவில்லையென்பது இதனால் வெளியாகின்றது. மஹாகவியினுடைய ஏகைகவும் தனியனிலுள்ள ஓரொன்றும் வீப்ஸார்த்தமான த்விர்வசனம், இரட்டித்தமொழி. ஒவ்வொன்று என்பது அதன் பொருள். வாய்பாட்டில் அப்படியன்று. ஓர் ஒன்று. இதில் ஒரு என்பது ஓர் என்றாகியிருக்கிறது. இது ஒன்று என்பதற்கு விசேஷணம். ஓரிரண்டு ஈரிரண்டு என்றவிடங்களில் ஓர் இரு என்பவை எப்படியோ அப்படி. ஒரு ஒன்று ஒன்று என்றதாகிறது. இவ்விதமே பாட்டில் ஓரொருவர் என்பதற்கு ஒரு ஒருவர் என்பது பொருள். ஒருவர் ஒருவராகத்தான் இருப்பர், இருவர் ஆகார். ஆகையால் ஒரு என்ற விசேஷணம் ஒருவர் என்பதற்குத் தேவையில்லையெனில் 'ஓரைந்து' 'ஓரொன்பது' என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலும் இந்த சோத்யம் வரும். ஐந்து ஐந்தாகத்தான் இருக்கும். ஒன்பது ஒன்பதாகத்தானிருக்கும். அதற்கு ஒரு என்ற விசேஷணம் எதற்கு? அதற்கு ப்ரயோஜனம் உண்டெனில் இதற்கும் உண்டு. ஆகவே சொல் வழுவற்றது.

இப்படி ப்ரபந்தஸாரத்தில் எவ்விதக் குற்றமும் கூறவியலாது. இதைச் சுருக்கமாய் எடுத்துரைத்த விவேக பாரிஜாதத்தை எவரும் அபஹரிக்கவியலாது. அபஹரிக்க முயன்றவர்கள் 'நான் மூடன். ஒன்றுமறியாதவன்' என்று கூவிக்கொண்டு நகரத்தின் நாற்சந்திகளில் நிற்கவேண்டும் என்பது நிரூபிக்கப்பட்டது.

முதல் விகாஸம் முற்றிற்று.

---

## 2. நூல் சிறப்பு.

ப்ரபந்தஸாரம் யாரோ ஒரு ஸாதாரண கவி இயற்றியது என்று கூறமுடியாதபடி மிகச் சிறப்பு வாய்ந்தது என்ற விஷயத்தை முன்பே ப்ரஸ்தாவித்திருக்கிறோம். இதில் முதல் பாட்டு ப்ரதிஜ்ஞா ப்ரகரணம். இரண்டாம் பாட்டு முதல் பதினான்காம் பாட்டு வரையில் ஆழ்வார்களவதரித்த நாள் முதலானவற்றுடன் ஒவ்வொரு ப்ரபந்தத்திலுள்ள பாட்டுக்களின் மொத்த எண்ணிக்கையைக் கூறவந்த இரண்டாம் ப்ரகரணம். பதினைந்து பதினாறு ஆகிய இவ்விரண்டும் ஒவ்வொருவர் செய்த பாட்டுக்களின் மொத்த எண்ணிக்கையைக் குறிக்க வந்த மூன்றும் ப்ரகரணம். பதினேழாம் பாட்டு ஆழ்வார்களுடையவும் அவர்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களுடையவும் எண்ணிக்கையைக் கூறவந்த நான்காம் ப்ரகரணம். இப்படியுள்ள ப்ரகரண க்ரமத்தையும், இதில் யதீந்த்ரமிச்ரான் என்று பட்டர் ஸாதித்திருப்பதற்கு வ்யாக்யானமாகவும் அதற்கு உபபத்தி கூறுவதற்காகவும் கவிதார்க்கிக ஸிம்ஹமும் வேதாந்தாசார்யனுமான நம் ஸ்வாமி 'எதிராசர் தம்மோடு' என்று வெகு சமத்காரமாகவும் வெகு ஸாமர்த்யமாகவும் ஸாதித்திருப்பதையும், முன்பே கூறினோம். **அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ ராமாநுஜஸ்ய** என்ற கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர் பித்ருதாயமாகத்தான் பெற்ற பக்வத்ராமானுஜன் திருவடியிலுள்ள தன் பக்தியை **பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ரான்** என்று அவரை ஆழ்வார்களோடு ஒரு கோர்வையாகச் சேர்த்து வெளியிட்டார். இப்படியே ஸ்வாமி ஐயனருட்கலியனெதிராசர் தம்மோடு ஆறிருவர் ஓரொருவர் என்று சேர்த்து ஸாதிக்கும்போதே ஒரு விசேஷத்துடன் ஸாதித்திருக்கிறார்.

ஐயனருட் கலியனெதி ராச ரென்ற
அப்பதின்மூன் ருரியர்க ளவர்தாம் செய்த

என்றிப்படி வேறு ஏதோ ஒருவிதமாக ஸாதிக்காமல் பொய்கை பூதம் பேயாழ்வார் என்று முதல் வேற்றுமையில் ஆரம்பித்து அருட்கலியன் வரையில் அப்படியே சொல்லி வந்து எதிராசனுக்கு மட்டும் எதிராசர்தம்மோடு என்று மூன்ரும் வேற்றுமை இட்டார். மேலும் ஆறிருவர் என்று ஆழ்வார்கள் பன்னிருவரையும் ஒரு ராசியாகச் சேர்த்துக் கூறி ஒரொருவர் என்று எதிராசனைப் பிரித்துப் பேசினுர். இந்த சாதுர்யத்தை எத்தனைக் காலம் புகழ்ந்தாலும் பர்யாப்தமாகாது. ரஸிகவித்வான்கள் நினைத்து நினைத்துப் பார்த்து மகிழவேண்டும். 'பொய்கையாழ்வார் முதலான பன்னிரண்டு திருநாமங்களுக்கும் எதிராசனுக்கும் விசேஷமுண்டு. கீழ் அது காட்டப்பட்டிருக்கிறது. அதை மறக்காதீர்கள்' என்று ஸ்வாமி பதவிந்யாஸ விசேஷத்தால் போதிக்கின்ருர். அப்பன்னிருவரும் ப்ரபந்தங்களுக்கு ஸாக்ஷாத் கர்த்தாக்கள். எதிராசன் அப்படியன்று. மற்ருெருவர் மூலமாகக் கர்த்தா. அப்படியாகில் இவரை நிர்தேசிக்காமல் ஸாக்ஷாத் கர்த்தாவையே நிர்தேசிக்கலாமே எனில் 'ஓரொருவர்' என்கிருர். ஆழ்வார்களின் கோஷ்டியில் சேரத்தக்க தனி யோக்யதையை உடையவர் இவரேயன்ரே. மற்றவருக்கு அத்தகைய யோக்யதை இல்லையே என்பது கருத்து.

गाथामपारचातुर्यशालिनी गातुमीदृशीम् ।
देशिकादपरः को नु लोकेऽस्मिन् क्षमते कविः ॥

இந்தப் பாட்டுக்கு ப்ரமேயம் ஆழ்வார்களின் லக்கம், அவர்கள் இயற்றிய ப்ரபந்தங்களின் லக்கம், எல்லா ப்ரபந்தங்களிலுமுள்ள பாட்டுக்களின் மொத்த லக்கம் ஆகிய இவை.

இவற்றுக்குள் ப்ரதானமானது ப்ரபந்த லக்கம்; அவை இருபத்து நான்கு என்பது. இப்பாட்டு அகற்றப்பட்டால் ப்ரபந்தஸார நூல் கண்ணிழந்த பெண் போலாகும்.

இப்படி நான்கு ப்ரகரணங்களின் விசேஷங்களை அறிந்தோம். இனி ஐந்தாவதும் கடைசியுமான ப்ரகரணத்தைப் பரிசீலிப்போம். இது "அந்தமிலா வாரணங்கள் நாலாய் நின்ற" என்ற ஒரு பாட்டாலாகியது. இதில் பல விஷயங்கள் கூறப்படுகின்றன. இவற்றில் முதல் பாட்டில் செய்த ப்ரதிஜ்ஞை நிறைவேற்றப்பட்டது என்பது ஒன்று. ஆரம்பித்த நூல் இத்துடன் முடிகின்றது என்று நிகமனத்தைக் குறிப்பிட்டபடி. இரண்டாவது இந்நூலின் ப்ரயோஜனம். இது 'மேதினி மேல் விளங்க நாளும்' என்று முதல் பாட்டிலேயே கூறப்பட்டதாயினும் இங்குச் சிறப்பித்துக் கூறப்படுகின்றது. ப்ரபந்தங்கள் இத்தனை, பாட்டுக்கள் இத்தனை, என்ற நிஷ்கர்ஷம் இல்லாதபோது கலக்கம் உண்டாகி சிந்திப்போகும்; ஸ்வஸ்வரூபத்திலிருந்து மாறிவிடும். இது மாருமல் விளங்கி அதனுல் உலகங்கள் வாழ்வது ப்ரயோஜனம். வடமொழி வேதங்களுக்கு காண்ட ப்ரச்ன அநுவாக பதாதிகளை எண்ணி வைத்துக் காப்பாற்றுவது போல் தமிழ் வேதங்களையும் எண்ணி வைத்துக் காப்பதற்காக இந்த நூல் இயற்றப்பட்டதென்பது கருத்து.

மூன்ருவது விஷய வைலக்ஷண்யம். ஆழ்வார்களுடைய அருளிச் செயல்கள் இந்நூலுக்கு விஷயம் என்பது. நான்காவது வக்த்ரு வைலக்ஷண்யம். வேதாந்ததேசிகன் இதன் கர்த்தா என்பது. ஐந்தாவது இந்நூலே அநுஸந்தானம் செய்வதால் உண்டாகும் பலன். இதனுல் எம்பெருமானுடைய கருணையைப் பெற்று க்ஷேமம் அடைவர்.

ஆருவது இந்நூலுக்குப் ப்ரபந்தஸாரம் என்று பெயர் என்பது. இதன் பொருள் என்னவெனில் இதை 'அந்தமிலாவாரணங்கள்' என்று தொடங்கி 'ஆய்ந்தெடுத்து' என்ற இவ்வளவால் விளக்குகின்ருர். நமக்குப் ப்ரமாணமான வைதிக ப்ரபந்தங்கள் எத்தனே உண்டோ அவற்றையெல்லாம் விமர்சித்து அஸாரங்களே விட்டு ஸாராம்சங்களேயெடுத்து ஆழ்வார்கள் செந்தமிழால் அருளினுர்கள். ஆகையால் இவர்களுடைய செந்தமிழ் நூல்கள் புராதன ப்ரமாண ப்ரபந்தங்களின் ஸாரம். 'அருளினனவ்வருமறையின் பொருள்', 'சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த' என்றதெல்லாம் ஸ்வாமியின் திருவுள்ளத்தில் இருக்கின்றது. இப்ரபந்தஸாரத்தை விஷயமாகக்கொண்டிருப்பதால் இந்நூல் ப்ரபந்தஸாரம் என்றதாயிற்று.

நின்ற அது ; நிற்றல். அதன் கருத்தை எப்பொருளே உலகத்தோர்க்கு உபதேசம் செய்வதற்காக அவை நின்றனவோ அப்பொருளே.

எல்லாவற்றையும் கலந்து கூறுகின்ற ஸாமான்ய ப்ரபந்தங்களாய் மற்றவை இருக்க எம்பெருமானேயே சிறப்பித்துக் கூறுகின்ற ப்ரபந்தங்கள் திவ்ய ப்ரபந்தங்களாயின. இதே பொருளில் ப்ரபந்தஸாரமென்ற சொல்லும் வழங்குகின்றது. திவ்ய ப்ரபந்தம் என்பது கர்மதாரய ஸமாஸம். ப்ரபந்தஸாரம் என்பது ஷஷ்டிதத்புருஷன்.

இதுவரையில் ப்ரபந்தஸாரத்தில் பொருள் சுவையை அனுபவித்தோம். இனி சொற்சுவையை அநுபவித்தும் அதன் சிறப்பை உணரலாம். நினைத்த விஷயத்தை அப்படியே வெளியிடுவதற்கேற்றதாய் வழுவற்றதான சொல் ஸ்வாதீனமாக யாருக்கு இருக்கின்றதோ அவர் மஹாகவி.

ஸாதாரண மனிதருக்கு இச்சிறப்பு அமையாது. ஸம்ப்ரதாயாந்தரத்தில் அபிநிவேசம் உள்ள ஒருவர் இயற்றிய வாழிச் செய்யுட்களைக் கவனித்தால் அவர் எவ்வளவு திண்டாடியிருக்கிறார் என்பது தெரிகின்றது. கருதிய இலக்கத்தைக் கூற இயலாமல் வ்ருத்த பங்கம் வரும்படி பாட்டுக்களை எழுதியிருக்கிறார்.

ப்ரபந்தஸாரத்தில் சொற்கள் கவிக்கு எவ்வளவு வசப்பட்டிருக்கின்றன என்பதை அநுபவசாலிகளான ரஸிக வித்வான்கள் அறியக்கூடும். "கிங்குர்வதே தஸ்ய கிரோ யதார்ஹம்" என்று ஸ்வாமியே ஸாதித்தபடி சிறிதும் ச்ரமமில்லாமல் தானாகவே ஓடி வந்து அமைந்த சொற்கள் அவை. அதிகாரஸங்க்ரஹம் முதலானவற்றின் சைலி காம்பீர்யம் எல்லாம் இங்குப் பூர்ணமாயிருக்கின்றன.

भोजनं देहि राजेन्द्र घृतसूपसमन्वितम् ।
माहिषं च शरच्चन्द्रचन्द्रिकाधवलं दधि ॥

என்ற இந்த ச்லோகத்தில் முதல் பாதிக்கும் மேல்பாதிக்கும் உள்ள விசேஷத்தை க்ரஹிக்க யோக்யதை உள்ளவர்கள் ப்ரபந்தஸாரத்தின் சொற்சுவையை உள்ளபடி அறியக்கூடும். மற்றவர்கள் பிறவிக்குருடர் என உபேக்ஷணீயர்.

**இரண்டாம் விகாஸம் முற்றிற்று.**



## 3. அதத்த்வஸாரம்.

ப்ரபந்தஸாரதத்த்வஸாரம் என்ற பெயர் வைத்து முழுவதும் தத்த்வமல்லாததையே பேசி வைத்திருக்கின்றது குத்ஸிதம். அதில் ப்ரபந்தஸாரத்தைப்பற்றிய தூஷணங்கள் அநேகமாக யாவும் முன் இரண்டு விகாஸங்களில் நிரா

கரிக்கப்பட்டன. மிகுந்த சில விஷயங்களை இப்போது விமர்சிக்கின்ருேம். இதில் கொடுக்கப்பட்டிருக்கும் எண் அந்தச் சுவடியின் பாராக்களைக் குறிக்கின்றது.

13. திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமென்பதற்கு மிகச் சிறந்ததொரு நிதானமுண்டு. திருமங்கையாழ்வார் ஸர்வ ப்ரகாரங்களாலும் நம்மாழ்வாரை யடியொற்றியருளிச் செய்பவர் என்பது ஸம்ப்ரதிபன்னம்.

எனப்பட்டிருக்கிறது. நம்மாழ்வார் நான்கு ப்ரபந்தங்கள் செய்திருக்க பரகாலன் ஆறு ப்ரபந்தங்கள் செய்தார். அவர் அந்தாதியாய் பத்து பத்து இயற்றியிருக்க இவர் அந்தாதியில்லாமல் பதினொரு பத்து இயற்றினுர். ஆகையால் ஸர்வ ப்ரகாரங்களாலுமென்றது அபத்தம். விவக்ஷிதார்த்தத்தைச் சொல்லக்கூடியதன்று. (1)

"தோத்திரம் சொல்லினர், குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே" என்பதற்கு "வழியில் ஆதரிப்பவர்களெல்லாரும் என்னவென்று சொல்லி யாதரிக்கிருர்களென்னில், இவர்கள் திருக்குடந்தைப் பெருமாளிடத்திலே குடிகுடியாக அடிமைப்பட்டவர்களென்று சொல்லிக்கொண்டு ஆதரிக்கிருர்களாம்"

என்று விவரணம் செய்திருப்பது தவறு. எம் கோவலன் என்றவிதில் எம் என்பது நம்மாழ்வாரைக் குறிக்கின்றது. குடந்தையிலுள்ள எம் கோவலன் குடியடியார்களுக்கு மருதரும் வசுக்களும் தோத்திரம் சொல்லினர் என்று நம்மாழ்வார் பேசுகின்ருர். 'குடந்தை எங்கோவலன் குடியடியார்' **என்று** தோத்திரம் சொல்லினர் என்றிருந்தால் அப்பொருள் கிடைக்கும். ஆகையால் இது அவ்யுத்பத்தி விலஸிதம். (2)

நம்மாழ்வார் திருக்குடந்தையைச் சொன்ன பிறகு வேறு திருப்பதியைச் சொல்லாமல் பேறு பெற்ருர்

என்றதும் தவறு. பிறகு "வைகுந்தம் புகுவது", "வைகுந் தன்தமர்" என்று வைகுந்தத் திருப்பதியைச் சொல்லியிருக் கின்ருர். வைகுந்தமும் ஒரு திருப்பதியன்ரே. பூலோகத் திருப்பதி வேறென்றையும் சொல்லவில்லை யென்னில் அத ஞல் என்ன விசேஷம்? மேல் வைகுந்தத்தைக் கூறியபடி யால் குடந்தையை விட்டாயிற்று. சொல்லி இதை விட்ட தற்கும் சொல்லாமலே மற்றவைகளை விட்டதற்கும் வாசி ஒன்றுமில்லை. இங்குக் குடந்தையிலே மட்டும் தாத்பர்ய முமில்லை. 'திருப்பாற்கடல் திருக்குடந்தை தொடக்க மாகவுள்ள தேசங்களிலே' என்பது இங்கே திருவாரு யிரப்படி. (3)

"திருமங்கையாழ்வார் திருக்குடந்தையிலே தொடங்கித் திருக்குடந்தையிலே தலைக்கட்டினுர்"

என்பது எப்படி? சரம ப்ரபந்தம் என்பது ஸித்தமாஞ லன்ரே தலைக்கட்டினுரென்பது சேரும். இல்லாவிட்டால் "காரார் குடந்தை கடிகை கடன்மல்லை" இத்யாதிகளில் போல் ஸாதாரணமாகக் கூறப்பட்டதென்றே முடியும். "நினைந்திட்டேனே" என்றதஞல் பேறு பெருமை ஸ்பஷ்ட மாகச் சொல்லப்பட்டிருப்பதால் இதற்கு சரம ப்ரபந்தத்வம் கனவிலும் ஸித்திக்காதென்பது முன்பே ஸ்தாபிதம். (4)

14. "பேறுபெற்றுத் தலைக்கட்டின பிறகு மட லூர்வதற்கு ப்ரமேயமுண்டோ" என்னில் திவ்யமா யுண்டு. உடலைவிட்டுப் பிரிந்துபோயின பிறகன்ரே முக்யவ்ருத்தியில் பேறு பெறுவது. அதற்குமுன் பெறப்படும் பேறு ஒரு அநுபவ விசேஷம். அல்லது

15

பேறு பெறுவதில் உள்ள நிச்சயம். ஆகவே இங்குள்ள வரையில் உத்தர காலத்தில் அநுபவ பரிவாஹமாக வேறு ப்ரபந்தமியற்றுவதில் குற்றமென்ன? கவிதா சாதுர்யத்தைக் காட்டுவதாகுமென்று குறை கூறுவதானல் அது எல்லா ப்ரபந்தங்களுக்கும் வரும். அவரவர் தம் அனுபவத்தோடு நிற்காமல் ப்ரபந்தமேன் இயற்றவேண்டும்? லோகோபகாரார்த்தமென்பது உத்தர காலத்தில் இயற்றியவற்றிற்கும் துல்யம். "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை"யைப் பேசிய பிறகு "முனியே நான்முகனே" இயற்றிய நம்மாழ்வாரின் கருத்தைக் கூறும் உரைகளைக் கண்டு இங்கே தெளிவு பெறலாம்.

15. வெறும் பக்ஷபாதத்தினல் 'பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளத்தின் ஏற்றம்' சொல்லப்படுகிறது. இதைத் திருப்பி தேசிகன் விஷயத்தில் கூறவேண்டும். இது பக்ஷபாதமன்றோவெனில் அன்று. தேசிகனுக்கு அநவதானம், அதாவது, கவனக் குறைவு கிடையாது. 'நான் சொல்லுகின்ற எந்த விஷயத்தையும் ஏதோ சொன்னேனென்று அநாதரம் செய்யாதீர்கள். ஒவ்வொரு விஷயத்தையும் மிகமிகக்கவனித்து ஆராய்ந்து தீர்மானித்துச் சொல்லியிருக்கிறேன்' என்று சிஷ்யர்களுக்கு ஹிதம் சொல்லுவதற்காகத் தம்மை 'அப்ரமத்தாங்க மத்த:' என்று தத்த்வமுக்தாகலாப ச்லோகத்தில் அப்ரமத்தர் என்று கூறினர். இதையே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில்

**शिष्यः— भगवति प्रसेदुषि न कचित्प्रमाद्यामि। यतः—**
**गुरुप्रसदनस्फुरद्गुणगरिम्णि यन्मानसे**
**सकृत् स्फुरति वस्तु तन्न हि किमप्यपभ्रश्यति।**

ऋषिस्तदितरोऽपि वा यदि गृणाति गत्यन्तरं
विकल्प्य तदपि क्षणाद्विलयमभ्युपैति स्वयम् ॥

என்று விவரணம் செய்தருளினுர். ஸ்வாமி திருவுள்ளத்தில் உண்மைதான் படும். ஒன்று பட்டுவிட்டால் அது உண்மை யாகத்தான் இருக்கும். அது மாறவே மாருது. அதற்கு மாறுபாடாக யாராவது ஏதாவது சொன்னுல் சொன்னவர் ரிஷயாயிருந்தாலும் அவருக்கும் மேல்பட்டவரா யிருந் தாலும் சிறிது ஆராய்ந்து பார்க்கும்போது அது தானே ஒன்றுமில்லாமல் அற்றுப்போய்விடும் என்கிருர் ஸ்வாமி. ஆகையால் ஸ்வாமி ஒன்று ஸாதித்துவிட்டால் அது வேத வாக்கு. அதற்கு விருத்தமான மற்றதெல்லாம் அப்ர மாணம்.

தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்திருப்பதை அறிந்தும் வேறுவிதமாக ஸாதித்திருப்பதால் அது ப்ரா மாணிகமன்று என்று திருவுள்ளம்பற்றி யிருக்கிருர் என்று கொள்ளவேண்டும்.

'ப்ரஜாபதேர் ஹ்ருதயேந' என்பது ஒரு பதமென்பது பத பாடத்திலுல் அறியப்படும். அதற்குக் காரணம் ஒரே விதமாய் பத பாடம் ஓதப்பட்டு வருவதே. ப்ரக்ருதத்தில் விப்ரதிபத்தி இருப்பதால் நிர்ணயம் செய்ய வழி தேட வேண்டியிருக்கிறது. விச்வஸநீயர்களான ஆசார்யர்களில் தேசிகன் கடைசி: 'முநீநாமுத்தரோத்ரம் ப்ராமாண்யம்' என்ற கணக்கிலே ஸவாமி ஸாதித்தது தான் ஸித்தாந்தம். மற்றது வேறு தாத்பர்யமுள்ளதென்ருே அநாதரணீய மென்ருே கொள்ளப்படவேண்டும்.

'ப்ரஜாபதேர் ஹ்ருதயேந' என்பது ஒரே பதமென்று பத பாடத்திலுல் நிச்சயிக்கப்பட்டாலும் 'ப்ரஜாபதேராப்த்யை'

என்றவிடத்தில் பிரித்து ஓதின பதகாரர் இங்கு ஏன் ஒரே பதமாக ஓதினுரென்று புத்திமான்கள் கேட்காமலிருக்க மாட்டார்கள். அப்போது “ப்ரஜாபதியினுடைய நெஞ்சினுலே” என்ற பொருளில் அதுவரவில்லை. ப்ரஜாபதேர் ஹ்ருதயம் என்பது ஒரு ஸாமத்தின் பெயர். ஆகையினுல் சுநச்சேப: திவோதாஸ: என்றவைபோல் இது ஒரே பதம் என்பது புலப்படும். இவ்விதமாக ப்ரக்ருதத்திலும் பெரியவாச்சான் பிள்ளை ஏன் திருநெடுந்தாண்டகத்தைச் சரமப்ரபந்தமாக்கினுர் என்ற கேள்வி எழுந்தே தீரும். அப்போது “இவர் பேறு பெற்றது அப்ரபந்தத்தில். அதனுல் அது சரமம்” என்று காரணம் கூறியிருப்பதால் ஸம்ப்ரதாய க்ரமத்தை இவர் ஆதரிக்கவில்லை யென்பது தெளிவாகிறது. உண்மையில் பேறு பெறல் அதில் இல்லாமையால் அவர் கூறியது பொருந்தாமலிருக்கிறது.

16. ப்ரபத்தியின் உபாயத்வம் பிராட்டியின் உபாயத்வம் போன்ற மிகப்பெரிய விஷயங்களில் அபிப்ராயபேதம் இருக்கும்போது மற்றவைகளில் இருப்பது ஸஹஜமே. இருபத்துநாலாயிரப்படியில் ‘ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேயகல்யாணகுணகண:’ என்று ஆளவந்தார் ஸாதிக்காததை அவர் ஸாதித்ததாகச் சொல்லியிருப்பது ஸுப்ரஸித்தம். இப்படிக் கர்த்தாவையே மாறுபடச் சொன்னவர் ப்ரபந்த க்ரமத்தை ஏன் மாறுபடச் சொல்லமாட்டார் ?

17. ஒருதரம் பார்த்த க்ரந்தம் எதுவாயினும் அப்படியே தேசிகன் நினைவில் ப்ரதிஷ்டிதமாய்விடும். ஜைனம் பௌத்தம் உள்பட ஸர்வ க்ரந்தங்களும் ஸ்வாமிக்கு முகஸ்தமே. ஸ்ரீ வைஷ்ணவர்களின் க்ரந்தங்கள் அப்படியிருப்பதில் விசேஷமொன்றுமில்லை.

35. இங்குள்ள நிகமனம் நேர்விபரீதமாகக் கொள்ளப் படவேண்டும். "**முதல் பத்து** என்ற ஸம்ப்ரதிபன்ன வ்யவ ஹாரத்தினுல் பூர்வாசார்ய பரம்பரா ப்ராப்தமானதாக நிச்சயிக்கப்படுகின்ற அநவத்ய பத்ததிக்கு அவிருத்தமாகத் திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியோடு ஏக ப்ரபந்தமாக்கியும், உண்மையில் மூன்ரும் ப்ரபந்தமான திரு நெடுந்தாண்டகத்தை சரம ப்ரபந்தமென்றவர்கள் ப்ராந்தர் என்று காட்டிப் பெரிய திருமடலைச் சரம ப்ரபந்தமாக்கியும் இலக்கண முறையில் ஒரே பாட்டானுலும் ஸம்ப்ரதாய முறையில் அநுஸந்தானத்தின்படி மடல்களைப் பல பாட்டுக் களாக்கியும் வ்யவஸ்தை செய்துள்ள ப்ரபந்தஸாரமென்ற மஹாப்ரபந்தம் ஸாக்ஷாத் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்ததே."

"பரம ப்ரமாண வேத சாஸ்த்ர ரூபங்களான ப்ரபந்தங் களின் ஸாரமாகிய தமிழ் நூல்களைப்பற்றிப் பேசுவதனுல் ப்ரபந்தஸாரமென்றிப்படிப் பெயர் பொருத்தம் மிக உண்டா கையினுலும், 'ப்ர' என்று பதத்தின் முதலில் இருப்பது வழுவன்ருகையாலும், காரணமுள்ளபோது 'நிசாசரிதான் வந்தாளை கூரார்ந்த வாளால் கொடிமூக்கும் காதிரண்டும் ஈராவிடுத்து' என்று திருமங்கை மன்னனும் "கள்ள வரக்கியை மூக்கொடு காவலனைத் தலைகொண்டாய்" என்று பெரியாழ்வாரும் ஸ்ரீமத் கீதாபாஷ்யாரம்பத்தில் பூதநா சகட யமளார்ஜுநாரிஷ்ட **ப்ரலம்ப** என்று எதிராசனும் பேசியபடி திருவரங்கத்தமுதனுர் செய்த ப்ரபந்தத்திற்குக் கர்த்தாவாக எதிராசனை எடுத்தது மிகவும் யுக்தமென்பது மட்டுமல்லா மல் ஸம்ப்ரதாய முறையையும் கவித்திறமையையும் காட்டு கின்றதாகையாலும் மற்ற நூல்களுக்கு அவரவர் கர்த்தா

என்பதுபோல் இதற்கு இவர் கர்த்தா என்று இடையருது வந்துகொண்டிருக்கும் உபதேசத்திஞல் உண்டான ப்ரஸித்தியை எவரும் அழிக்கமுடியாது.''

36. ஒரு ஸாமான்ய அக்ரஹாரத்தில் வஸித்தவர்களுக்கு ஒரு ஸமயம் ஆவணியவிட்டம் இன்ரு நாளேக்கா என்ற ஸம்சயம் உண்டாயிற்று. அவர்கள் தம் ஊர் பண்ணேயாள் ஒருவனே ஐந்தாறு மைல்களுக்கு அப்பாலுள்ள அபிஜாத அக்ரஹாரத்திற்கு அனுப்பிக் கேட்டறிந்துவரச் சொன்ஞர்கள். அவன் அங்கே போகும்போது அங்குள்ளவர்கள் குளத்தில் வரிசையாக நின்று காண்டர்ஷி தர்ப்பணம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் யக்ஜோபவீதத்தை இப்படியும் அப்படியுமாக மாற்றிக்கொண்டிருப்பதைப் பார்த்த அவன் அவர்களே நெருங்கி எதுவும் கேட்காமல் திரும்பி வேகமாகப்போய் ''அவர்களும் இப்படித்தான் தடமாடிக்'கொண்டிருக்கிருர்கள்'' என்ருஞம். அந்தக் கதையாய் இருக்கிறது இங்கு சொல்லப்பட்ட விஷயம். சர்ச்சை நடந்துகொண்டிருக்கும்போது முடிவு இது என்பதையறியாமலே இதன் மூட சாரர்கள் வந்து உளறினதை இங்கே இது தானும் உளறுகின்றது.

45. பலதடவைக் கண்டுபிடித்து தண்டிக்கப்பட்ட வேலேக்காரி ஒருத்தி மறுபடியும் கையும் களவுமாகப் பிடிபட்டபோது கூறிஞள். ''நான் திருடவேணும்னுதானுங்க இருக்கேன். ஆஞ பொருளேப் பார்த்ததும் கை எடுத்துடுதுங்க'' என்று. இவ்விதத் தன்மை தனக்கிருப்பதைத் தான் இங்கு அரிஷ்டம் அறிவிக்கிறது. ஸ்ரீமான் வேங்கடவுக்கு உத்ஸவம் பண்ணிலானென்ன ? ராமானுஜதயாபாத்ரத்திற்குப் பண்ணிலென்ன ? இதற்கேன் அதைப்பற்றிக்

கவலே? குதிரையைப் பூசிக்காது கோவிற்கென்ன பூசை என்று ஓநாய் ஏன் கேட்கவேண்டும்? கானகம் புகுந்து கெட்டலேயாது ஊரகம் புகுந்து உறுமுவதேன்? ஸர்வ யோக்யமான வேதத்தின் சிறப்பைக் கொண்டாடும்போது அதற்கேற்ற தனியனுக்கு உத்ஸவம்.

47–57. வ்யுத்பன்னரும் ஸம்ப்ரதாய மறிந்தவருமான ஸர்வரும் சொல்லக்கூடிய, சொல்லிவந்த, அர்த்தங்களே இவைகள். 'அசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாந வைராக்ய ராசயே' என்றால் தத்புருஷனுமாகலாம் பஹுவ்ரீஹியுமாக லாம். ஜ்ஞானம் விஷய பேதத்தினால் பேதமுள்ளது என்ற இவ்விஷயங்கள் யாருக்குத் தோன்ற?

52. லோகே என்பதற்கு ஸ்ம்ருதி என்ற பொருள் ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது. அங்கு வேதமும்கூட எடுக்கப்பட்டிருப்பதால் ஸ்ம்ருதி என்று பொருள் கூறப்பட்டது. அவ்வித ஸங்கோசஹேது ஒன்று மில்லாமையால் ஸ்தோத்ர வ்யாக்யானத்தின் உரையில் பெரியவாச்சான்பிள்ளே லோகே என்பதற்கு 'சாஸ்திரத்தில்' என்று உரையிட்டார். சாஸ்த்ரம் என்று தான் ஏன் ஸங் கோசம் செய்யவேண்டும்? ப்ரமாணம் என்று பொதுவாகச் சொல்லலாமே யென்று தேசிகன் பரிஷ்கரித்தார். சாஸ்த்ரம் என்பது விசேஷம். ப்ரமாணம் என்பது ஸாமான்யம்.

55. இங்கு "திருவாய்மொழி (1-9) இவையும் பதிகத் தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத் மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாக (ஆருயிரப்படி யிலன்றிக்கே) பெரியவாச்சான்பிள்ளே அவதாரிகை யிட் டருளினர். அதையநுஸரித்து தேசிகன் **'सात्म्यभोगप्रदानात्'** என்றருளிச்செய்தார்". என்றது அஜ்ஞானந்தினுலா, வெறும்

வஞ்சனையைக் கருதியா என்பது விளங்கவில்லை. "ஆர்ஜவ குணனுஸந்தானம்பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவ ரஸத்தை அருளிச்செய்கிறார்". என்பது இங்கே ஆறுயிரப்படியிலுள்ள அவதாரிகை.

59. ஸ்வாமி ஸ்ரீபாஷ்ய விரோதம் மலிந்த, தாம் பரிஷ்கரிக்கவேண்டியதாயிருந்த, ஒரு நூலை காலக்ஷேப க்ரந்தமாகக்கொண்டாரென்பது சிறிது ப்ரஜ்ஞை உள்ளவன் சொல்லக்கூடிய வார்த்தையன்று.

60. ஓடும் புள்ளேறி, பொருமாநீள்படை, அணைவதரவணைமேல், இவ்விடங்களில் தாத்பர்ய ரத்னவளியில் தேசிகன் பல பரிஷ்காரங்களைச் செய்திருக்கிறார் என்பதை பல வருஷங்களுக்கு முன்பே விரிவாய் நிரூபித்திருக்கிறோம். இதைக் காட்டிக்கொள்ளாமல் இங்கு பேசியிருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம். பெரும் வஞ்சனை.

61. தாளதாமரையிலும் (10-1) ஸ்வாமி பிறரை சிக்ஷித்திருக்கிறார். அவர்கள் சொன்ன வர்த்தத்தைக் கொள்ளவேயில்லை. **மற்றொன்றிலம்கதியே** என்று பாசுரத்திலே இருக்கிறது. அந்த கதி பதத்தையே ஸாரம் தாத்பர்ய ரத்னவளி இரண்டிலும் ப்ரயோகித்தருளினார். **கதிம் வ்ய த்வக்லேசச் சிதம்** இத்யாதி ஸாரம். **ஏவம் ஸ்வாநாம் கதிம்** இத்யாதி தாத்பர்ய ரத்னவளி. 'ஸத்கதிஸ் ஸ்யாத்' என்றும் இங்குளது. ஆகவே இப்பதிகத்திற்கு 'எம்பெருமான் கதி' என்பது ப்ரதிபாத்யம். இனி கதி என்றால் என்னவென்று பார்க்கும்போது வழித்துணை என்னக்கூடாதென்பதை **ஸத்ஸரணிம்** என்று ஸாரத்திலும் **ஸத்பதவ்யாம் ஸஹாயம்** என்று தாத்பர்யரத்நாவளியிலும் ஸாதித்து

''அது பத்தாவது பத்தின் அர்த்தம். இத்திருவாய்மொழி யின் அர்த்தமன்று'' என்று கூறி விளக்கினர். இங்கு ப்ரக்ரமபங்கத்தில் ஆரம்பித்து ஸர்வபங்கமாய் முடிகின்ற மஹாவித்வான் திருவாய் மலர்ந்தருள்கிறார்:—

**ஸத்கதிஸ் ஸ்யாத்** என்பதற்கு வ்யாக்யானமிட்டவர்கள் ''காளமேகப் பெருமாளே வழித்துணையென்று'' என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக **''ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ''** என்றருளிச்செய்தார். **'ஸத்கதிஸ் ஸ்யாத்'** என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு **'ஸத்பதவ்யாம் ஸஹாயம்'** என்றவிது கைவிளக்காயிருக்கின்றது. ஆக்ரஹத்தைவிட்டு இதை நோக்கவேணும்.

என்று. அஹங்காரத்தை முதலில் விட்டுப் பிறகு ஆக்ரஹத்தையும் த்வேஷத்தையும் அடியோடு விட்டு நோக்கவேணுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகின்றோம். **'ஸத் பதவ்யாம் ஸஹாயம்'** என்றது ஸாரமா, தாத்பர்ய ரத்நாவளியா ? வ்ருத்த பேதங்கூடவா தெரியாது ? இரண்டாவதாக: **ஸத்பதவ்யாம் ஸஹாயம்** என்றது தசகார்த்தமா சதகார்த்தமா என்று ச்லோகம் முழுவதும் வாசித்துக் கூறவேண்டும். இத்தனை மூடமான ஒரு ஜந்து என்னென்ன ஆர்ப்பாட்டம் செய்கிறது ? என்னென்ன பேசுகிறது ! விந்தையிலும் விந்தை இது. மானியாயிருந்தால் ஆசார்ய சிகாமணியின் யசோஹத்தி மநோரதத்தை விட்டு உடனே ஆத்மஹத்தி பண்ணிக்கொள்ள வேண்டும். எம்பெருமான் **ஸத்பதவீ** எனப்பட்ட அர்ச்சிராதி மார்க்கத்தில் ஸஹாயன் என்பது பத்தாம் பத்தின்

பொருள். ஆகையால் இது தாளதாமரைப் பதிகத்தின் பொருளான கதியாயிருக்க முடியாது. ஆருயிரப்படியில் 'மற்ருெரு ப்ராப்யமில்லை யென்கிருர்' என்ற விவரணம் இருக்கிறது. இதனுல் ப்ராப்யத்வம் இத்திருவாய்மொழியின் விஷயமென்று தோன்றும். ஆனுல் இது முன்பே சொல்லப் பட்டதாகையால் இங்கு ஸங்கதமன்று. ஆகையால் வழிக் குத் துணையாக வேண்டுமென்று அடையத்தக்கவன் என் பது இங்கு கதி என்பதின் பொருளென்று கொள்ள வேண்டும். வழித்துணை என்ற பொருளே கொண்டாலும் அவனே வழித்துணை யென்று நிஷ்கர்ஷிப்பது அல்லது பற்றுவது இத்திருவாய்மொழியில். அவன் துணையா யிருந்து வழி நடத்துவது அதாவது ப்ராபகத்வம் சூழ் விசும்பின் விஷயம். வழித்துணையாகும் தன்மை சதகார்த் தம். இப்படி முன் க்ரந்தங்களில் அந்யதாவாக இருப்பதை ஸ்வாமி பரிஷ்கரிக்கின்ருர். சூழ்விசும்பில் ப்ராப்தியே கூறப் பட்டதாக உரைகாரர்கள் கூறுகின்றனர். அது உசித மன்று. பிள்ளான் ஸாதித்தபடி ப்ராபகத்வமே இத்திரு வாய்மொழி ப்ரதிபாத்ய மென்று ஸ்வாமி ஸாதிக்கின்ருர்.

62. தேசிகனுக்கு ஈடு கிடைத்திருந்தால் அதிலுள்ள விருத்தார்த்தங்களையும் அவர் பரிஷ்கரித்திருப்பர். அதற் காகத்தான் அதைப்பார்க்க அபேக்ஷித்தார்.

63. ஸுப்ரஸித்தமாய் வழங்கிவரும் க்ரந்தங்களையே ஸஹிக்காத துர்ஜனம் நஷ்டமான நிகமபரிமள க்ரந்தத்தை இருந்ததாக இசையுமா?

65-110. இதெல்லாம் பழங்கதை. திருடன் ஜனத் திரளில் கலந்து திருட்டின் கொடுமையையும் அறநெறியை

யும் உருகி உருகிப் பேசுவது போன்றது. ஸம்ப்ரதாய ப்ர தீபத்தைப் பார்ப்பது.

71-ல் 'கல்யப்தேஷு சதுஸ்ஸஹஸ்ர' என்கிற ச்லோகம் அவ்யுத்பன்ன கல்பித ச்லோகம் எனப்பட்டிருக்கிறது. அவ் யுத்பன்னருக்கு அந்வயிக்காத ச்லோகம் எனவேண்டும். 'ஸஹஸ்ராணி ச சதானி ச பங்க்தயச்ச ஸஹஸ்ர சதபங் க்தய: என்று முதலில் த்வந்த்வ ஸமாஸம். பிறகு 'சதுஸ் ஸங்க்யாகா: ஸஹஸ்ரசதபங்க்தய: யஸ்ய ஸ: சதுஸ் ஸஹஸ்ரசதபங்க்தி:' என்று பஹுவ்ரீஹி. சதுர்குணம் இத்யாதிபோல் **चतुश्शता रक्षन्ति** என்று வைதிக ப்ரயோக மிருக்கிறது. 'ஸ சாஸெள அப்தச்ச என்று கடைசியாக கர்மதாரய ஸமாஸம். நாலாயிரத்து நானூற்று நாற்பது என்கிற எண்ணை உடைய வர்ஷம் என்பது பொருள். நகரங்களில் வீடுகளுக்கு எண்ணிக்கையுண்டு. அங்கு உங்களுடையது எத்தனையாவது வீடு என்று கேட்ப தில்லை. உங்கள் வீட்டின் எண் என்ன? என்ன எண் உள்ளது உங்கள் வீடு என்றுதான் கேட்பார்கள். போலீஸ் காரர்களுக்கு எண் உண்டு. அவர்களை மேல் அதிகாரிகள் அழைக்கும்போது ஓய் ஐம்பது, அறுபத்தொன்று, என்று அழைப்பார்கள். ஐம்பதாவதவரே, என மாட்டார்கள். ஐம்பது என்றால் அந்த எண் உள்ளவர் என்பது பொருள். இப்படிப்பட்டது இங்கு ப்ரயோகம். நாலாயிரத்து நானூற்று நாற்பதாவது என்று சொல்லக்கூடுமாயினும் சொல்லியிருக்கும் ப்ரகாரத்தில் குற்றமொன்றுமில்லை. ஐந்து மணிக்கு வந்தான் என்பதுதான் சரியான பேச்சு. ஐந்தாவது மணிக்கு வந்தான் என்பது அபத்தம். வாய் சொல்லாது. செவி ஏற்காது. ஷட்தர்சனவித்தென்று

ப்ரஸித்தரும் நம் பாஷ்யகாரருக்கு முன்பட்டவருமான வாசஸ்பதிமிச்ரர் அவருடைய ந்யாயஸூசீ நிபந்தம் என்கிற க்ரந்தம் செய்யப்பட்ட வருஷத்தை 'வஸ்வங்கவஸுவத்ஸரே' என்று கூறியிருக்கிறார். 898-ம் வர்ஷம் என்பது அதன் பொருள். அதெப்படி என்பதை அறியுமா இந்தக் களிமண் ?

அவ்யுத்பன்னம் தானே ஒரு நியமத்தைக் கல்பித்துக் கொண்டு "இங்ஙனே ஸங்க்யாவாசக சப்தத்தை நேரே யிட்டு இயற்றப்படுவது கிடையாது. இதுகொண்டே ச்லோகம் பாத்திரத்தனியன்போலவே பச்சாத் கல்பிதமென்பது கல்வெட்டாம்" (73) என்கிறது. தான் பார்த்த நூல் எத்தனை ? "அரையும் குறையுமாக ஒன்றிரண்டு சுவடிகளைப் பார்த்துவிட்டுப் பெரிய ஒரு நியமம் கட்டி அதைக் கொண்டு பிறரை தூஷிக்கவும் புறப்படுகிறோமே. நாளைக்கு இது தவறு என்று நிரூபணம் செய்யப்பட்டால் நம் யோக்யதை என்னவாகும்" என்ற விவேகம் பயம் வெட்கம் எதுவும் சிறிதுமில்லாத பொல்லாத ஜந்து இது. மந்தாக்ராந்தா வ்ருத்தத்திற்கு லக்ஷணம் சொல்லும்போது 'ஜலதிஷடகை:' எனப்பட்டிருக்கிறது. இதில் ஸமுத்திரத்தின் பெயரால் 4 என்றும் பர்வதத்தின் பெயரால் 7 என்றும் எண்கள் குறிக்கப்பட்டிருக்க நடுவில் ஷட் என்று 6 என்ற எண் நேராகவே கூறப்பட்டிருக்கிறது. இன்னும் ப்ரஹர்ஷணீ வ்ருத்தத்தில் த்ரிதசயதி: என்று மூன்றும் பத்தும் ஸாக்ஷாத்தாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஸ்வாமி தேசிகன் பகவத் ஸன்னிதிகளில் திவ்யப்ரபந்த பாராயணத்திற்கு உண்டான ப்ரதிபந்தங்களை யெல்லாம் போக்கியது, விரிவான வ்யாக்யானம் செய்தருளியது முத

லாகச் செய்த ச்லாக்ய ப்ரவ்ருத்திகளால் ப்ரீதரான மஹான்கள் ராமானுஜதயாபாத்ரம் என்ற திவ்ய ப்ரபந்தத் தனியன் அவதரித்த நாள் நக்ஷத்திரங்களை யெல்லாம் அநுஸந்தித்து அதை விசேஷமாகக் கொண்டாடினுர்கள் என்ருல் அதைப் பற்றி இது பொருமைப்படுவானேன். யதீந்த்ரப்ரவணப்ர பாவகாரர் ஸ்ரீ சைலேசபத்யத்திற்கு ஸகல விவரங்களுடன் ஒரு ஜாதகம் எழுதிவைத்திருக்கிருர். அது ஒன்றே பர்யாப்த மன்ரு தேசிகபாத்ரபத்யத்திற்கு அவதார வர்ஷ மாஸ நக்ஷத்திராதிகள் முன்பே குறிக்கப்பட்டிருந்தன வென்ப தைக் காட்ட. தனியன் அவதாரகால மாத்ரமேயன்றி அதை வாழிதிருநாமத்தோடு அநுஸந்திக்க ஆரம்பித்த காலத்தையும்

''கலி 4450-வது ஸர்வதாரிஸூ மார்கழிமீ திருவத்ய யனோத்ஸவத்தில் அதை வாழிதிருநாமத்தோடு அநுஸந்திக்கும்படி அழகியமணவாளன் நியமித்துத் திருச் செவி சாத்தியருளினுன்''

என்று குறித்திருக்கின்றனர். திவ்ய ப்ரபந்தங்களில் உள்ள விசேஷ ஆஸ்தையினுலும் அவற்றைப் பலவிதமாக ப்ரதிஷ்டாபனம் பண்ணியருளின ஸ்வாமியினிடத்திலுள்ள க்ருதஜ்ஞதாபக்திகளாலும் அக்காலத்துப் பெரியோர்களுக்கு அதில் அவ்வளவு ஆதரம்.

**மூன்ரும் விகாஸம் முற்றிற்று.**

---

## 4. தூப்புல்.

**111-114.** தேசிகனுடைய பாத்ரத் தனியன் வாழிதிரு நாமங்கள், இவை இந்த ஆஸூரத்திற்குப் பிறவியிலிருந்தே

ஆகாதவை. மாந்துளிர் ஸர்வ வக்ரமான ஒட்டைக்குப் போலே. ஆனால் அந்த நான்கு கால் ஜந்து மாமரமே உலகில் இருக்கக்கூடாதென்று அபிநிவேசம் கொள்ளாத ஸாது ப்ராணி. இந்த இரண்டு கால் ஜந்து அவ்விதமானதன்று. அவற்றிலுள்ள த்வேஷம் முற்றி அவற்றின் விவரங்களை அறிவிக்கின்ற வடகலை குருபரம்பரைகளிலும் ப்ரபந்தாநுஸந்தான தீபிகையிலும் பாய்ந்தது. அதற்கு மேலும் வளர்ந்து கொழுந்துவிட்டெரிகின்ற அப்பகை இப்போது ப்ரபந்தஸாரத்தை எரிக்கப் பார்க்கிறது. என்னென்ன குற்றம் அதில் கூறலாமென்கிற சிந்தை நிரந்தரமாக இருந்துவருகின்றது. அதில் கடைசியில் தோன்றிய ஒரு குயுக்தி முடிவில் வைக்கப்பட்டிருக்கிறது.

'தூப்புல் தோன்றும் வேதாந்தகுரு' என்று ப்ரபந்தஸாரத்தின் முடிவிலிருக்கிறது. தேசிகனுக்கு வெகு காலம் பிற்பட்டவரான அப்பய்யதீக்ஷிதர் ப்ரதிஷ்டை செய்த ஒரு அக்ரஹாரம் தும்பைவனம் என்பது. இப்பெயர் காலக்ரமத்தில் மாறி தூப்புலாயிற்று. ஆழ்வார்கள் காலத்தில் அந்த இடத்திற்கு தண்கா என்று பெயர். இதை ஸம்ஸ்க்ருதத்தில் தேசிகன் ஹிமோபவனம் என்கிறார். ஆகவே தூப்புல் என்ற சொல் தீக்ஷிதர் காலத்திற்குப் பிற்பட்டது. இச்சொல் ப்ரபந்தஸாரத்தில் இருப்பதனால் இது தேசிகன் க்ருதியன்று. நவீனம்; இதுதான் கடைசியில் தோன்றிய புது யுக்தி. குமாரர் ஸாதித்த பிள்ளையந்தாதியில் தூப்புல் தேவே, தூப்புல் குலமணியே, என்றிப்படி பலகால் கூறப்பட்டிருக்கிறதேயென்று உடனே கேள்வி எழும். அதற்காக அந்தக் குயுக்தியினாலேயே அதுவும் யாரோ நவீனர் செய்ததே எனப்படுகிறது. பொய், தைவம் எதற்கும் அஞ்சாத இரும்பு நெஞ்சம் படைத்த துராத்மா எதைச்

சொல்லத்தயங்கும்? ப்ரபந்தஸாராஸ்வாதிநீகாரர் 'சீரொன்று தூப்புல் என்ற தனியன் வழங்கிவருகின்றதே' என்று எடுத்துக்காட்டியிருக்கிருர். இது பிள்ளைலோகாசாரியர் இயற்றியது. இதில் இது வெகு காலத்திற்கு முன்பே விப்ரதிபத்தி பண்ணியிருக்கிறது. ராமாயணம் வால்மீகி பண்ணியதன்று என்று ஒருவன் எழுதி அச்சிட்டு வெளிப்படுத்திஞல் அவனை யார் தடுக்கக்கூடும் ? 'சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்' என்று ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தின் கடைசிப் பாட்டையும் அவர் எடுத்துக்காட்டியிருக்கிருர். இதற்கும் பதில் எதுவும் சொல்லாமல் தும்பைவனக் கதையே உண்மையென்று சொல்லி முடித்திருக்கிறது.

கல்சட்டி வ்யாபாரம் பலமாய் நடந்துவந்தபடியால் பழைய காலத்தில் சல்சட்டிபுரமாயிருந்தது. கிருஷ்ணன் கிச்சுவானது போல் காலக்ரமத்தில் கச்சியாயிற்று. இதை வடமொழியாளர் காஞ்சியாக்கி அதன் விகாரம் கச்சியென்றனர். ஆகையால் காஞ்சியென்ற சொல் உள்ள நூல்கள் யாவும் அர்வாசீனங்கள் என்கிருன் ஒருவன். அவனை யார் என்ன செய்யக்கூடும் ?

ப்ரசாரத்தில் இராத புதிய நூல் ஒன்று அகப்பட்டு அதன் விவரங்களை ஆராயுங்காலத்தில் அதில் அப்ரஸித்தமான ஊர் பெயர் இருந்தால் அதன் மூலத்தை ஆராயலாம். ஊஹங்கள் பல செய்யப்படலாம். மணவாளமாமுனிகளின் க்ருதியென்று வெளியான கீதார்த்தஸங்க்ரஹதீபிகை போல் போலி நூல் என்னலாம். ஸ்வாமி திருவவதாரம் முதல் அவிச்சின்னமான வ்யவஹாரமும் அதையநுஸரித்த நூல்களும் இருக்க அவற்றைப் பாதிக்கும்படி என்ன ப்ரபல ப்ரமாணம் காட்டப்பட்டதென்பதை அறிவாளிகள் ஆராய வேண்டும். இப்பொய் மூர்த்தி எழுதுகின்றது:

"இதை நாம் ப்ராமாணிகர்களிடம் கேட்டு எழுதுகி றேமே யொழிய நாமாகவே கல்பித்து எழுதுவதன்று" என்று. இதற்கு உண்மைப் பொருள் என்னவெனில் "நாமே தான் கல்பித்து எழுதுகிறேம். உங்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கவேண்டியது தானே என் பிறவிப் பயன். அதை நான் இப்படி எழுதியும் செய்கிறேன். எனக்கு ஸமாதானம் எழுதுகின்றவர்கள் அநேகமாக இல்லை. ஒருவர் இருவர் இருந்தால் தாம் எழுதியதை அச்சிட ச்ரமப்படுவர். அச் சிட்டு வந்தால் மறுநாளே ஒன்பதாவது அஷ்டகம் நிறைந்த மறுப்பு நூல் வெளியிடுவேன். உங்களால் என்ன செய்ய முடியும்? சாகிற வரையில் நான் இப்படிச் செய்யக் கங் கணம் கட்டிக்கொண்டிருக்கிறேன்" என்பது. இந்த அப்ரா மாணிகம் "ப்ராமாணிகர்களிடம்" கேட்டு எழுதுவதனுல் தேசிகன் காலம் முதல் இதுவரையில் அவிச்சின்ன பரம்பரை யாய் வந்த ஸர்வமும் விவாதாஸ்பதமாயும் போலியாயும் தேறிவிடும் போலும். மத்யான்ன ஸூர்யனை ஒருவன் 'இது இயற்கை ஸூர்யனன்று. இயற்கை ஸூர்யனுகில் இதைப் போல் இன்னென்று காட்டு' என்றுல் நாம் என்ன செய்வது? நம் பக்ஷம் தோற்றது என்று தான் ஒப்புக்கொள்ளவேண் டும் போலும்.

இந்த 'ப்ராமாணிகர்கள்' அத்தைமார்களா, பாட்டி களா, மாமியார்களா, மைத்துனிகளா, அரசாங்கத்து அதிதி களா, வார்த்தாமாலை வம்பர்களா, எவர்? தும்பைவனம் என்று அதே இடத்திற்குப் பெயர் என்பதற்கு எழுத்துமூல ஆதாரம் உண்டா? தும்பைவனம் பாஷா சாஸ்திரப்படி தூப்புல் ஆகுமா? ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளில் தவிர வ்யவ ஹாரத்தில் தண்கா என்று இருந்து வந்தது உண்டா? தும்பைவனம் என்பதற்குமுன் அந்த இடத்திற்கு என்ன

பெயர் வழங்கிவந்தது ? சைவபக்ஷபாதியான தீக்ஷிதர் பெருமாள் ஸன்னிதியின் பக்கத்தில் வந்து அக்ரஹாரப்ரதிஷ்டை பண்ணக் காரணமென்ன ? அவர் ப்ரதிஷ்டை பண்ணுவதற்குமுன் அது காலியிடமாயிருந்ததா ? முன் அக்ரஹாரம் இல்லையா ? இப்படிச் சொல்ல ஆதாரமுண்டா ? இத்யாதி ப்ரச்ன பரம்பரைக்கு ஸமாதானம் கூறியன்றோ தும்பைவன மாயா வாதத்தைக் கிளப்பவேண்டும்.

இனி இங்குள்ள உண்மையை விளக்குவோம். தண்கா என்ற பெயர் இருந்திருந்தபோதிலும் ஆழ்வார்கள் அதையே கூறியபோதிலும் வ்யவஹாரத்தில் தூப்புல் என்ற பெயரே அந்த இடத்திற்கு இருந்து வந்தது. தண்கா என்றதன் பொருள் குளிர்ந்த உத்யானவனம். ஸம்ஸ்க்ருதத்தில் ஹிமோபவனம் சிசிரோபவனம் எனப்பட்டது. அந்த ஸ்தலமே பரிசுத்தமான புல்லை, புல் ப்ரதேசத்தை, அதவா, வைதிகர்களுக்கு வேண்டியதான தர்ப்பங்களை உடைத்தாயிருக்கையால் தூப்புல் எனப்பட்டது. திருநறையூர் என்று ஆழ்வார் பாடல்களில் கூறப்பட்ட திவ்யதேசம் நாச்சியார் கோவில் என்றே வ்யவஹரிக்கப்பட்டுவருகிறது. அதே போல் தண்காவுக்குத் தூப்புல் என்ற வ்யவஹாரம். தும்பைவனம் ஒன்று இருந்ததாகில் அந்த இடம் வேறு. தூப்புல் எனப்பட்ட இடமன்று. வ்யவஹாரத்திலுள்ள பெயரைச் சொன்னால் தான் எல்லோருக்கும் தெரியுமாதலால் 'தண்கா தோன்றும்' என்றிப்படிச் சொல்லாமல் **தூப்புல் தோன்று**மென்று சொல்லவேண்டியதாயிற்று. ஸாக்ஷாத் பெயரைச் சொல்வது வழக்கமில்லையாதலால் தூப்புல் பிள்ளையென்றே ஸ்வாமிக்கு அக்காலத்தில் வழங்கும் பெயருமாயிற்று. இதைப்பற்றிக் குமாரர் பிள்ளையந்தாதி என்றே

பெயரிட்டுத் தமிழ்த் துதி நூலை இயற்றினர். இந்தப் பெயரே இந்நூல் ப்ராசீனமென்பதற்கு அடையாளம். ஐந்நூறு வருஷங்களுக்கு முன் வரையில்தான் ப்ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்கள் பிள்ளை யென்று வழங்கப்பட்டார்கள். அதற்குப் பிறகு தாண்டவராயப் பிள்ளை கந்தசாமிப் பிள்ளை என்றிப்படி அப்ராஹ்மணர்களுக்கே பிள்ளை என்ற வ்யவஹாரம் வ்யவஸ்திதமாகிவிட்டது. இதைப் பிற்காலத்தியவர் இழிவாகவே கொள்ளுவராகையால் பரமாசார்யருக்கு இச்சொல்லைப் பெயராக்கியிருக்கமாட்டார்கள். ஆகவே தூப்புல் என்ற சொல்லைக் கொண்டு செய்த துராக்ஷேபங்களும் இங்கு சிறிதும் இடம்பெரு என்பது ஸித்தம். சைவர் எவராகிலும் தும்பைவனம் தான் தூப்புலாயிற்று என்றால் ப்ரபந்தஸாரம் பிள்ளையந்தாதிகளை எடுத்துக் காட்டி "தூப்புல் என்பதுதான் பழைய பெயர். திருப்பிச் சொல்வது ப்ரமத்தினால்" என்று நிரூபணம் செய்யவேண்டியிருக்க இந்தத் தாமஸ ப்ரக்ருதி விபரீதமாகப் பேசுவது வருந்தத்தக்க விஷயம்.

पापिष्ठात्मविनिग्रहार्थघटनानिष्ठैरनुष्ठीयते
यत्तु तत्सर्वमुदाहरन्ति सुकृतं श्रेष्ठं वरिष्ठा बुधाः ।
यद्यप्येवमथापि वागमधुरा प्रोक्ता न नः प्रीतिदा
रुन्धामीदृशमञ्जनाचलशिरस्सङ्गी प्रसङ्गं पुनः ॥

---

நான்காம் விகாஸம் முற்றிற்று.



## 5. ஸம்ப்ரதாயப் பித்து.

### 1. பகை

ஸுபாஷித கவிகள் தமது நூலில் க்ல (खल) பத்ததி அல்லது துர்ஜன பத்ததி என்ற ஒரு பாகத்தை அவச்யம் வைப்பார்கள். இவ்வுலகில் பிறந்த யாவரும் பரம ஸாதுக்களாகிலும் துக்கம் அனுபவிக்கவேண்டியது அவச்யமாகையால் அதற்காக பகவான் துர்ஜனர்களைப் படைக்கத் தவறுவதில்லை. எக்காலத்திலும் எத்தேசத்திலும் மூர்க்கர்களின் தொல்லைக்கு ஆளாகாத ஸாத்விகர் எவருமிருந்ததில்லை. சிறந்த கவி ஒருவர் இப்படி ஒரு போக்கிரியினுல் துன்புற்ருர். நான்கு உபாயங்களாலும் அவனைத் திருத்த முடியவில்லை. அவனுடைய சேஷ்டைகள் பல பல. பலவகைப் பட்டவை. தொடர்ந்து நடந்தன. அவர் என்ன செய்ய முடியும். பேசாமல் இருந்தார். ஆனுல் அவர் மனஸ்ஸில் அவனைப்பற்றி உண்டான எண்ணங்கள் பொங்கி எழுந்து ஒரு ச்லோக உருவில் வெளிவந்தன. முதலில் **'कपि:'** என்ருர். வானரம் என்பது அதன் பொருள். இது ஒரே சொல்லாயினும் வாக்யம்போல் பாவித்து வானரத்திற்கு இயற்கையாயுள்ள ஸகல சேஷ்டைகளையும் நினைத்து மனஸ்ஸில் தரிப்பதற்காகக் கேட்போருக்கு அவகாசம் கொடுத்து நின்ருர். 'மனப்படம் பிடித்துக்கொண்டோம். அதன் சேஷ்டை எல்லாம் மனக்கண்முன்னே நிற்கின்றது. மேலே சொல்லவேண்டு'மென்ருர்கள் கேட்போர்கள். அதன் பிறகு அவர் **अपि च कापिशायनमदमत्तः** என்ருர். கள்ளுக்கடைக்காரன் சிறிது வெளியே நின்று பேசிக்கொண்டிருந்தான். கூரையைப் பிய்த்துக்கொண்டு உள்ளே இறங்கிய குரங்கு காடியாய்ப் புளித்த சாராயத்தை வயிறு நிறையக் குடித்து விட்டு அவன் உள்ளே நுழைந்ததும் கூரைமேல் ஏறி உட்

கார்ந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அதற்குண்டான விகாரத்தைப் பார்க்கவேண்டுமே. வாயினுல் வர்ணிக்க முடியாது. மனஸ்ஸினுல்தான் பாவிக்கவேண்டும். சிறிது காலம் சென்றது. அதற்குமேல் சொல்லுகிருர் கவி **वृश्चिकेन सन्दष्टः.** கூரையிலிருந்து திடீரென்று வெகுதூரம் உயரக்கிளம்பி குதித்தது குரங்கு. விஷயமென்னவெனில் கூரையின்மேல் இதன் சேஷ்டைகளால் பீடிக்கப்பட்ட ஒரு பெரிய கறுந்தேள் இதை அழுத்திக் கொட்டிவிட்டது. தேள் கொட்டினுல் உண்டாகும் துரவஸ்தை அநுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். எவ்வளவு காம்பீர்யமிருந்தாலும் சாந்தியிருந்தாலும் அப்போது ஒன்றும் நிற்காது. விஷவேகம் ஓடச்செய்யும். கத்தச்செய்யும். இன்னும் பல பல செய்யச் செய்யும். இந்த அவஸ்தைகளெல்லாம் அந்தக் குரங்குக்கு உண்டாயின. அதற்குமேல் ஒன்று சொல்லுகிருர் கவி. **अपि च पिशाचग्रस्तः** அதைப் பிசாசு பிடித்துக்கொண்டதாம். பிசாசு பிடித்தால் என்னென்ன ஆட்டம் ஆடுவர் மனிதர் என்பதை அநுபவமுள்ளவர் அறிவர். இந்தக் குரங்கு என்னென்ன செய்தது. கொஞ்சம் சொல்லுமய்யா் என்று சிலர் கவியைக் கேட்டனர். அதற்கு அவர் பதில் கூறினுர் **किं ब्रूमो वैकृतं तस्य.** அது படும்பாட்டை நான் என்னவென்று கூறுவேன். நான் கவிதான். ஆயினும் அதை வர்ணிக்கும் ஸாமர்த்யம் எனக்கு இல்லை. எனக்குமட்டுந்தானில்லையென்பதில்லை. வ்யாஸ வால்மீகி காளிதாஸ ப்ரப்ருதிகளில் எவருக்குமில்லை யென்ருர். இப்படி மஹா கவிகளுக்கும் வாசாமகோசரமான துச்சேஷ்டிதங்களையுடைய வ்யக்தி ஒன்று ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்காகப் பரம காருணிகனுன பகவானுல் ஸ்ருஷ்டிக்கப்பட்டு துஸ்ஸஹ துர்வ்யாபாரங்களைச் செய்து வருகிறது. இதன்

பிறவியே ஆஸுரம். "பிறர் ப்ரமிப்பதற்காக வேஷம் போடுவது. சாஸ்த்ர வரம்பைக் கடக்கச்செய்யும் கொழுப்பு. பிறரை அவமதிக்கச் செய்யும் கர்வம். பிறருக்குத் துன்பம் விளைவிப்பதிலேயே ஈடுபடுத்தும் மனோவ்ருத்தி. ஸாதுக்கள் வெறுக்கும்படியான தன்மை. இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்ற விவேகமில்லாமை" ஆகிய இவை அஸுரப்ரக்ருதியின் லக்ஷணமென்று பகவான் கூறுகின்றார். இது ஒவ்வொன்றும் வேறு எங்கும் காணமுடியாதபடி இதனிடத்தில் நிறைந்திருப்பது யாவரும் ப்ரத்யக்ஷமாகக் காணும் விஷயம்.

**दम्भो दर्पोऽतिमानश्च क्रोधः पारुष्यमेव च ।**
**अज्ञानं चाभिजातस्य पार्थ सम्पदमासुरीम् ॥**

என்பது கீதா ச்லோகம். இதற்கு மேல் குரங்கு கள் குடித்தது போல் இது ஸம்ப்ரதாயப் பற்று கொண்டது. ஸம்ப்ரதாயாந்தரப் பகையாகிற தேள் பலமாகக் கொட்டிவிட்டது. நம்பிள்ளை சிஷ்யபரம்பரையிலும் அவர்களின் க்ரந்தங்களிலுமுள்ள அபிமானமாகிற பிசாசு பிடித்துக்கொண்டது. இக்காரணங்களால் இது ஸ்ரீவைஷ்ணவன் மனோ வாக் காயங்களால் எதைச் செய்யக் கூடாதோ அதையே புருஷார்த்தமாகச் செய்துவருகின்றது. ஸம்ப்ரதாய வெறி கொண்டதாகிவிட்டது. எவ்வித சிகித்ஸையினாலும் மாறாத வெறியாகிவிட்டது. பிறருக்கு உபத்ரவமில்லாத வெறியானால் அதை எவரும் பொருள்படுத்தவேண்டியதில்லை. ஆனால் இந்த வெறி பிறர் மேல் கல்லெறிந்து களிக்கும் கொடும் வெறியாயிருக்கிறது. ஆகையால் அவரவர்கள் இதன் மேல் கல்லெறிந்து விரட்டியடிக்கிறார்கள். எல்லா அடிகளையும் பெற்றுக்கொண்டும் உடம்பெல்லாம் ரக்தம் பெருகிக்கொண்டிருக்கும்போதும் என் மேல் எங்கே பட்டது என்று சொல்

விச் சிரித்துக்கொண்டு மேல்மேலும் வைது கல்லெறிந்து கொண்டேயிருக்கிறது. அமாவாஸ்யை பௌர்ணமாஸீ காலங்களில் பைத்தியம் அதிகமாகும். வடகலையார் ஏதாவது உத்ஸவம் கொண்டாடுகிறார்களென்றால் அந்த ஸமயத்தில் இதன் வெறி ஓங்கி நிற்கும்.

ஸ்ரீ ராமானுஜன் 132ல் 18-ம் கண்டத்தில் "ஸம்ப்ரதாய விஷயமாக நாமெழுதும் நூல்களுக்கு ஜீவநாடியான விஷயங்கள் இரண்டே.

1. தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிக்கும் மேலாகக் கண்ட பாடம் செய்திருந்தவர். அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக்கோடாகக் கொண்டு எழுதுமவர் தேசிகன்—என்கிறவிது ஒரு விஷயம்.

2. இவ்வுண்மையை யறியகில்லாதவர்களாய் அல்லது அறிந்தும் அபலபிப்பிவர்களான நவீனர்கள் தேசிகனை பெரியவாச்சான்பிள்ளைக்கு விரோதியாக எழுதுவதும் அந்த தேசிகனோடு தங்களுக்கொரு தொடர்பு இருப்பதாக அபிநயிப்பதும் மிகத் தவறு, என்கிறவிது மற்றொரு விஷயம்".

என்று தன் மூளைக் கலக்கத்திற்குக் காரணமான தன் அபிநிவேசத்தைத் தானே காட்டியிருக்கிறது. இது எழுதும் நூல்களுக்கெல்லாம் இதுதான் ஜீவநாடி என்று தானே இங்குச் சொல்லுகிறது. இதனால் இதை அடிப்படையாகக் கொண்டுதான் இது ப்ரபந்தஸாரத்தை தேசிகன் ஸாதிக்கவில்லை என்று காட்டவும் முயல்கின்றது என்பது ஸ்பஷ்டம். ஆனால் இதுவே 64-ம் கண்டத்தின் முடிவில் "இதிலுள்ள நிருபணங்களைச் சிலர் மேலெழப் பார்த்துவிட்டுப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாயிருக்கிற

தென்கிற காரணத்திஞல் இவர் ப்ரபந்தஸாரத்தைக் கல்பித மென்கிருர் என்று விப்ரலம்பமாகச் சொல்லப் புறப்படுவார் கள். அதுவன்று விஷயம். **பல ஹேதுக்களில் இதுவு மொரு ஹேது வென்று கொள்வது**" என்று மற்ற ஹேதுக் கள் போன்றதே இது என்றது.

15-வது கண்டத்திற்கு 'பெரியவாச்சான் பிள்ளை திரு வுள்ளத்தின் ஏற்றம்' என்ற தலைப்புக் கொடுத்து முடிவில் "ஆக இதற்கு மாருகச் சொல்லிப் ப்ரபந்தசாரமென்று ஒன் றெழுத முன் வருபவர் வேதாந்ததேசிகனுக இருக்க முடி யாது என்பது சபதம் செய்து சொல்லத் தக்கது: மற்றும் பல ஹேதுக்களில் **இது தலையான ஹேது** என்றது. இப் படி முன்னுக்குப் பின் விருத்தமாக உளறும் இந்த உந் மத்தம் இத்தகைய ஆக்ரஹத்திஞலேயே உந்மத்தமாய் அதற்குத் தக்கபடி பேசுகின்றது என்பது ஸ்பஷ்டம். இதன் உந்மாதத்தைச் சிறிது விளங்கவைக்கின்ருேம்.

கேள்வி: முதல் திருவந்தாதி முதலான ப்ரபந்தங்களை பொய்கையார் முதலானவர்கள் இயற்றிஞரென்பதில் என்ன ஸ்வாமின் ப்ரமாணம்.

பதில்: முன்னேர்கள் பரம்பரையாகக் கூறிவருவது தான் ப்ரமாணம்.

கே: பெரியாழ்வார் திருமொழியில் பெரியாழ்வார் கர்த்தா என்பதற்கு என்ன ப்ரமாணம் ?

ப: முன்சொன்ன ப்ரமாணத்துடன் ஒவ்வொரு திரு மொழியின் முடிவிலும் அவர் தம்மைக் கர்த்தாவாகக் கூறி யிருப்பதும் ப்ரமாணம்.

கே: இருபத்து நாலாயிரம் பெரியவாச்சான் பிள்ளை செய்தது என்பதற்கு என்ன ப்ரமாணம் ?

ப: பரம்பரையாக வந்த உபதேசந்தான்.

கே: ஒருவன் இவர்கள் இவற்றின் கர்த்தாக்களல்லர் என்கிறான். அவனுக்கு என்ன பதில் சொல்வது ?

ப: அபிப்ராய பேதமின்றி பரம்பரையாகச் சொல்லி வருவது ஒரு ப்ரபல ப்ரமாணம். அதனால் கர்த்ருத்வம் நிச்சயமாய் அறியப்படுகின்றது. அதற்கு விபரீதமாக அவர்கள் கர்த்தாக்கள் அல்லர் என்பதற்குப் ப்ரமாணம் எதுவுமில்லை. ஆகையால் அல்லர் என்பவன் உபேக்ஷணீயன்.

கே: நூல்களில் குற்றங்கள் இருக்கின்றன. ஆகையால் அறிவுக் கடல்களான பெரியோர்கள் இவற்றைச் செய்திருக்க முடியாது என்று ப்ரமாணபூர்வமாக அவன் பேசுகிறான்.

ப: அவர்கள் நூற்களில் குற்றம் காட்ட முடியாது.

கே: ஏன் காட்ட முடியாது. பரமாத்மன் சித்ரகூடம் என்ற இவை செய்யுளில் ஆரியச் சொல்லாகவே வரக்கூடாதென்று இலக்கணம் கூறுகின்றது. சூர்ப்பணகா என்பது தவறு. முடிவில் ஐ வரவேண்டும்.

ஒரு பத்துப் பாட்டுப் பாடப்போய் அதற்குத் தக்க பதங்கள் கிடைக்காமல் திண்டாடி அமலன் விமலன் நிமலன் நின்மலன் என்று திருப்பித் திருப்பி நான்கு தடவை கூறியவர் பெரிய கவியாயிருக்க முடியவே முடியாது.

சந்தோகன் பௌழியன் தைத்திரியன் சாமவேதி என்று சந்தோகன் வேறு சாமவேதி வேறு என்று அறிந்தவர்கள் பேசும் பேச்சா இது.

அரியை அயனை அரனை என்று மூன்று பேரையும் ஒருவராக அல்லது சமராகப் பரமைகாந்தி ஒருவர் கூறுவாரா ? திவ்யப்ரபந்த உரைகள் ஸகலவித குற்றங்களும் நிறைந்தவை என்பதுதான் யாவரும் ஒப்புக்கொண்ட விஷயம். ஸர்வ ப்ரஸித்தம்.

ப: இவையெல்லாம் குற்றமாகமாட்டா.

கே: இவையாகாவிடில் வேறு குற்றங்களைக் காட்டுகிறோம். அல்லது இவை குற்றங்களே என்று ஸ்தாபிக்கிறோம். இதைப்பற்றிய விசாரத்தைப் பிறகு வைத்துக் கொள்வோம். குற்றமிருப்பதாக வைத்துப் பேசுவோம். குற்றமிருப்பதால் "இவர் இந்நூலுக்குக் கர்த்தா" என்று இடைவிடாது பரம்பரையாய் வந்த ப்ரஸித்தியைப் பாதிக்கலாமா என்பது கேள்வி.

ப: தயக்கம்.(பிறகு)நீர் யாரய்யா என்னைக் கேட்பதற்கு? உமக்கு நான் ஏன் பதில் சொல்லவேண்டும்? (குனிந்து கையில் கல் எடுக்கிறது)

ஸங்கடமான கேள்வி கேட்கப்பட்டவுடன் வெறிக்குக் கோபம் வந்துவிட்டது. நஞ்சீயருக்குப் பின்பட்ட திருவாய்மொழி உரைகளில் ஸ்ரீபாஷ்யாதி விரோதமேயன்றி மற்றும் எல்லாவிதக் குற்றங்களும் யாரும் அபலபிக்க முடியாதபடி மலிந்திருப்பது ஸ்பஷ்டம், கண்டாகுஷ்டம். ஆகையால் இவ்வுரைகளை இயற்றியவர்கள் யாரோ அநபிஜ்ஞர். பெரியவாச்சான்பிள்ளை முதலான மஹான்கள் அல்லர் என்று ஒப்புக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது. இதனால் கோபம் வந்துவிட்டது. ப்ரபந்தஸாரத்தில் மட்டும் குற்றமிருப்பதாகக் காட்டி யாரோ பிற்காலத்தொருவர் செய்தது என்று ஸ்தாபனம் செய்யத் துடிக்கின்றது. இது வெறி பிடித்தவன் தவிர மற்ற யார் செய்யக் கூடியது? ப்ரபந்தஸாரம் ஸ்வாமியின் கிரந்தங்களில் ஒன்று என்பது ஸ்வாமி காலம் முதல் அவிச்சின்ன பரம்பரையாய் வந்துகொண்டிருக்கும் உண்மை விஷயம். இதை இன்றைக்கு நாம் ஆக்ஷேபிக்க முடியுமா? உள்ள ப்ரஸித்தியை மறுக்கப்

புகுந்தால் நமக்கு அபிமதமான நூல்களிலும் இது வருமே என்று உணரமாட்டாத பெரும் பைத்யமாயிருக்கின்றது. இவர் இதைச் செய்தார் என்ற ப்ரஸித்தி பெரியவாச்சான் பிள்ளை தேசிகன் இருவர் நூல்களுக்கும் ஸமானம். அவற் றுக்குள் விரோதம் தோன்றினால் அதற்குப் பரிஹார முண்டா என்று பார்க்கவேண்டும். இல்லையாகில் விரோத மிருக்கின்றது என்பதை ஒப்புக்கொண்டு அத்துடன் நிற்க வேண்டும். அப்படியன்றி 'அவர் செய்ததற்கு விருத்த மாகையால் இதைச்செய்தது இவர் அன்று' என்றால் இதற்கு விருத்தமாகையால் அதைச் செய்தது அவரன்று என்று ஏன் சொல்லக்கூடாதென்று வருகின்றது. "அது எங் களைச் சேர்ந்ததாகையால் அதைப் போலி எனமாட்டோம். இது உங்களைச் சேர்ந்ததாகையால் போலி என்போம்" என் பதுதான் இப்பித்தின் உள்ளத்தில் உள்ளது. இதுதான் இந்த விவாதத்தில் உள்ள உண்மை. இதுதான் உந்மாத லக்ஷணம்.

தேசிகன், அவருடைய க்ரந்தங்கள், அவருடைய சிஷ்ய பரம்பரை; இவர்களுடைய ஜ்ஞாநாநுஷ்டானங்கள்; இவற்றையெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய வைபவங்களைக் கம்ஸன்போல் இது ஒரு க்ஷணம்கூட விடாமல் ஸர்வகால மும் நினைத்துக்கொண்டேயிருக்கிறது. ஒரு நொடிப்பொழு தும் அவை இதன் மனஸ்ஸைவிட்டு நீங்குவதில்லை. அவற்றை நினைக்க நினைக்க அஸூயை அதிகமாகிறது. அஸூயை எதைத்தான் செய்யத் தூண்டாது.

சாஸ்த்ர மார்க்கத்தில் சிக்ஷை சிறிதுமில்லையாகையால் எந்த விஷயமும் புத்தியில் கோணலாகவே படுகின்றது. ஒரு விஷயம் மிகப் பெரிதென்றும் தனக்கே தோன்றும

தென்றும், எவரும் அதை மறுத்துக் கூறமுடியாதென்றும் எண்ணம் உண்டாகிவிடுகின்றது. உடனே ஸம்பந்த முள்ளது இல்லாதது எல்லாவற்றையும் சேர்த்து ஆத்ம ஸ்துதி பரங்நிந்தை எல்லாம் நிறைந்த சுவடி ஒன்று வெளி யிடப்படுகின்றது. கோலாஹலந்தான். இது ஒருவாறு அடங்கினுல் அதற்குள் தோன்றிய மற்றொரு விஷயமாக நூல், சண்டை, சச்சரவு எல்லாம் கிளம்புகின்றது. இப்படி ஓயாமல் காலம் கழிகிறது.

(2)

பலன் ஏதாவது உண்டா? தனக்கும் உலகத்திற்கும் விபரீத பலனன்றி அநுகூலம் எதுவுமில்லை. நம்பிள்ளை முதல், சாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்யத்திலும் பரிசயமில்லா மற் போக ஆரம்பித்தது. இதிஹாஸ புராணங்கள் திவ்ய ப்ரபந்தம் இவற்றிலேயே ஆழ்ந்தார்கள். ஸ்ரீபாஷ்யாதி பரிசயக் குறைவினுல் அவர்கள் சொன்ன அர்த்தங்களில் பல விருத்தங்களாயிருந்தன. ஸ்வாமி தேசிகன் அவற்றுக் கெல்லாம் ஒருவிதமாக நயனம் பண்ணியும் தாத்பர்யம் ஸாதித்தும் இது கூடாத விடத்தில் உண்மையை உரைத் தும் பரிஷ்காரம் செய்தருளினுர். பெரியவாச்சான்பிள்ளை, ஸ்வாமி பரிஷ்கரித்ததெல்லாம் யுக்தமென்று அங்கீகரித்து ஆமோதித்து ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு முக்யமான ப்ரபத்தி விஷயத்தில் தமக்கு நிஷ்கர்ஷம் உண்டாம்படி ஒரு க்ரந்தம் ஸாதிக்கும்படி ஸ்வாமியை ப்ரார்த்தித்தார். இதை அநு ஸரித்து ஸ்வாமி ந்யாஸவிம்சதியையும் சுருக்கமாக அதற்கு ஒரு வ்யாக்யானத்தையும் ஸாதித்தருளினுர். வ்யாக்யானத் தில் 'ஸதிச்சயா' என்று பெரியவாச்சான்பிள்ளையை 'ஸத்' என்று நிர்தேசித்து அவர் விருப்பப்படி இதைச் செய்கிறேன் என்றுர். ரஹஸ்ய க்ரந்தங்களை ஸாதித்த பிள்ளைலோகா

சார்யரும் விப்ரதிபத்தி உள்ள இடங்களில் தான் கருதியதை விட்டு ஸ்வாமி ஸாதித்ததே யுக்தமென்றிசைந்து ஸ்வாமி திருவடிகளை ஆச்ரயித்து காலக்ஷேபம் பண்ணி 'சீரொன்று தூப்புல்' என்கிற தமிழ்த் தனியனையும் ஸாதித்தார்.

மணவாள மாமுனிகள் முதலில் திருவாய்மொழிப் பிள்ளை ஸன்னிதியில் பகவத்விஷயத்தையும் ரஹஸ்யங்களையும் அதிகரித்து சிலவற்றுக்கு வ்யாக்யானமிட்டுப் பிறகு தேசிகன் ப்ரசிஷ்யரும் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமியின் சிஷ்யருமான கிடாம்பியாச்சான் திருவடிகளை யாச்ரயித்து ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் செய்தருளினார். இவர் எழுந்தருளியிருந்த ஸமயம் இந்த ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீபாஷ்யம் பகவத்விஷயம் இரண்டிலும் ப்ரபல வித்வான்கள் மிக மிகக் குறைவாகவே இருந்தனர். இவரிடத்தில் காலக்ஷேபம் செய்த சிலர் தவிரப் பொதுவாக ஜனங்கள் ஆசாரம் வித்யை எதுவுமில்லாத வெறும் பாமரராயிருந்தனர். அவர்களையெல்லாம் நல்ல வழியில் திருத்துவதற்காக உபதேச ரத்னமாலையைச் செய்து எல்லோரும் கற்கும்படி செய்தார்.

தர்க்கம் வ்யாகரணம் மீமாம்ஸை முதலான ஸாமான்ய சாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்யாதிகளிலும் ப்ரவேசம் அவர்களுக்கு துர்லபமாகையால் திவ்யப்ரபந்தத்திலாவது ச்ரத்தை ருசிகளை உண்டாக்குவோமென்று கருதி அதைப் பற்றியே உபதேசம் செய்தார். திவ்யப்ரபந்தங்களைப்பற்றிய விஷயங்களையெல்லாம் ப்ரபந்தஸாரத்தில் ஸ்வாமி ஸாதித்திருப்பதால் ஸாமான்ய ஜனங்களுக்கு உபயுக்தமாகும்படி சொல்லவேண்டியதைமட்டும் ஸாதித்து உபதேசம் செய்தார்.

திவ்யப்ரபந்தத்தில் நமக்கு ஆசார்யனான திருவாய் மொழிப் பிள்ளையை யநுஸந்திக்கும் முதற்பாட்டில் 'வெண் பாவில் வைத்து' என்பதன் கருத்து தேசிகன் எண்சீர்கழி நெடிலாசிரிய வ்ருத்தத்தில் ஸாதித்திருக்க நான் சிறிய வெண்பாவில் கூறுகின்றேன் என்பது. சொல்லாமலே வெண்பா என்பது தெரியுமாகையால் இதற்கு ஒரு கருத்து இருக்கவேண்டும். அது இதுவே.

இனி ஆழ்வார்கள் அவதரித்த க்ரமத்தை ஸ்வாமி பாட்டுக்களின் வரிசையிலுலும் பதினேழாம் பாட்டில் நிர்தேச க்ரமத்தாலும் குறிப்பாக உணர்த்தினர். மாமுனிகள் மாஸ நக்ஷத்ரப் பாட்டுக்களை மாஸ வரிசையில் அமைக்கின்றாராகையால் அவதார க்ரமம் அதனல் குறிக்கப்படாது. ஆகையால் அதற்காகத் தனிப் பாட்டு ஒன்று அமைத்தார்:

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
அய்ய னருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நற்கலியன்
ஈதவர்தோற் றத்தடைவா மிங்கு.

என்பது அந்தப் பாட்டு. இதில் வையகமெண் என்கிற ப்ரபந்தஸாரப் பாட்டிலுள்ள அய்யன் அருள் புகழ் என்ற பதங்கள் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன. பொய்கை முனி பூதத்தார் பேயாழ்வார், துய்ய குலசேகரன், என்ற அதிகார ஸங்க்ரஹப் பாட்டின் நினைவும் வருகிறது. இங்கே மாமுனிகள் பதின்மரையே எடுத்திருக்கிறார். ஆண்டாள் மதுரகவி எதிராசன் மூவரையும் பிறகு தனியே கூறுகிறார். இதனுல்''பூதம் ஸரச்ச என்றபட்டர்தனியனில்ஆண்டாளும் மதுரகவிகளும் கருதப்பட்டனர். அதை விளக்கிக் காட்டினார் தேசிகன் தம் ப்ரபந்தஸாரத்தில்'' என்பதை அறிவிக்கிறார். ஆகவே ''அங்காங்கி பாவம் அந்த ச்லோகத்தில் விவக்ஷி

தம். ஔசித்யமில்லாமையால் ஆண்டாளை எடுக்கவில்லை. எதிராசன் திருவடியாக எடுக்கப்பட்டபடியால் மதுரகவி கள் விடப்பட்டார்'' என்பதெல்லாம் தான்தோன்றிக் கல் பனை. மணவாளமாமுனிகள் அளவாகவுள்ள ஆசிரியர் களில் எவரும் அப்படிக் கருதவில்லை யென்பது ஸ்பஷ்டம். திருவடியிரண்டாகையால் மதுரகவிகளை விடாமலே எதி ராசனை எடுக்கக்கூடுமாகையால் அது வெறும் பொய்க் கல்பனையே.

ஐந்தாவதான அடுத்த பாட்டில் ஆழ்வார்கள் அவத ரித்த மாஸங்களையும் நக்ஷத்ரங்களையும் கூறுகின்றே னென்று ப்ரதிஜ்ஞை செய்கின்ருர். இதில் ''அந்தமிழால் நற் கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்'' என்றவிது, ''அதன் கருத்தை ஆழ்வார்களாய்ந்தெடுத்து செந்தமிழால்'' என்ற ப்ரபந்தஸாரஸூக்தியை அநுஸரித்தது என்பது ஸ்பஷ்டம். ஆருவது முதல் பதினைந்து பாட்டுக்களில் ஐப்பிசியில் முத லாழ்வார்கள் மூவரும், கார்த்திகையில் திருமங்கை மன்ன னும் பாணரும், மார்கழியில் தொண்டரடிப்பொடியும், தையில் திருமழிசைப்பிரானும், மாசியில் குலசேகரனும், வைகாசியில் நம்மாழ்வாரும், ஆனியில் பெரியாழ்வாரும் அவதரித்தாரென்கிருர். இதற்குமேல் ஒன்பது பாட்டுக்களில் ஆண்டாள் ஆடியிலும், மதுரகவிகளும் எதிராசனும் சித்தி ரையிலும் அவதரித்தார்களென்று சொல்லி அவர்களைப் புகழ்கின்ருர். இம் மூவர் விஷயத்தில் மாஸ க்ரமத்தைப் பின்பற்றினுல் எதிராசனை ஆண்டாளுக்கு முன் கூறவேண் டியதாகின்றது அது உசிதமன்று. சித்திரையில் மதுர கவிகளெனச் சொல்லி ஆடியில் ஆண்டாளென்ருல் மறுபடி யும் எதிராசருக்காகச் சித்திரையைச் சொல்லவேண்டும். இதில் க்ரமபங்கம் வந்தே தீருகின்றது. ஆகையால் முதலில்

ஆடியில் ஆண்டாளென்று சொல்லிப் பிறகு சித்திரையில் இரண்டு பேரும் என்ருர். பிறகு நான்கு பாட்டுக்களால் இப்பதின்மூன்று பேரும் அவதரித்த ஊர்களைச் சொல்லு கிருர்.

இங்கே 'பொய்கையார்' என்று ஆரம்பிக்கும் நான்காம் பாட்டு முதல் முப்பத்து மூன்ரும் பாட்டு வரையில் ஆழ் வார்களைப்பற்றின ப்ரகரணமென்பதில் எவரும் ஸந்தேஹப் பட இடமில்லை. இந்த ப்ரகரணத்தில் எம்பெருமானுரைச் சேர்த்து அவருடைய நாளுர் திங்கள் கூறியதற்குக் காரண மென்னவென்று பார்க்கவேண்டும். ஆழ்வார்களுக்குச் சம மான கௌரவத்தைப் பெற்றவராகையாலும் திவ்யப்ரபந் தங்களில் ஒன்ருன நூற்றந்தாதியின் ப்ரயோஜக கர்த்தா வாகையாலும் அவர் சேர்க்கப்பட்டார் என்பது தத்த்வம். இதை மறுக்கப் புகுந்த குத்ஸிதம் பலபடி பிதற்றுகிறது. முதலில் நூற்றந்தாதியின் கர்த்தாவான அமுதஞர் ஏன் இங்குக் கூறப்படவில்லை யென்பதற்குக் காரணம் சொல்ல வேண்டும். குத்ஸிதம் ஒரு காரணம் சொல்லுகின்றது. அந் தந்த திருநக்ஷத்ர தினத்தில் அந்தந்த ஆழ்வார் ஸன்னிதியில் கூடி அநுஸந்திப்பதற்காக மாமுனிகள் நாள் பாட்டு அமைக்கின்ருர். அமுதனுருக்கு ஸன்னிதி கட்டவில்லை. ஆகையால் அவர் விஷயமான பாட்டுக்கு அநுஸந்தானமே இல்லாமற்போய்விடும். ஆகையால் அவருக்குப் பாட் டில்லை— என்று. இது சரியன்று. இது உபதேசமாலை. அநுபவமாலையோ அநுஸந்தானமாலையோ அன்று. திவ்ய ப்ரபந்தங்களில் அத்யந்த விமுகராயும் த்வேஷிகளாயுமிருப் பவருக்கு நல்ல புத்தியை உண்டாக்குவதற்காக இயற் றப்பட்ட நூல். உலகத்தாரைக் கூவிக் கூவியழைத்து இதற்குச் சமமான நாள் உண்டா, இதன் பெருமையை

அறிய வேண்டாமா, இதில் அவதரித்த மஹாபுருஷனை யும் அவர் அருளிய நூலையும்பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா என்று உபதேசம் செய்யப்படுகிறது. இது பாட்டுக்களின் நோக்கம். ப்ரஸங்காத் ஸன்னிதிகளில் உப யோகப்படக்கூடியவை உபயோகப்படலாம். அல்லாதவற் றுக்கு வைபல்யமில்லை. மற்ற கர்த்தாக்களைக் கூறுமிடத் தில் அமுதனாரைக் கூறாதபோது ப்ரபல ப்ரத்யவாய ஹேது வான க்ருதக்னதை வரும். உபகாரகர்களாயும் உரையாசிரி யர்களாயும் இருக்கிற பிறர் பலரைக் கூறும்போது ஸாக்ஷாத் கர்த்தாவான அமுதனாரைக் கூறாதது க்ரந்தகர்த்தா செய்த பெருந்தவறாகும். நாளூர் திங்களைக் கூறாவிட்டாலும் 'அவர் செய்த நூற்றந்தாதிக்கு ஒப்புண்டோ, நூற்றந்தாதியைச் செய்த அவருக்கு ஒப்புண்டோ' என்றிப்படி ஏதோ ஒன்று சொல்லவேண்டியது மிக அவச்யம்.

இனி இரண்டாவதாக இராமானுசனைக் கூறுவதற்குக் காரணம் கூறவேண்டும். இராமானுசன் ஸன்னிதியில் திரு வாதிரையன்று அநுஸந்திப்பதற்காகவெனில் அவருக்கு முன்பட்டவர்களாய் விக்ரஹப்ரதிஷ்டை உள்ளவர்களான நாதமுனிக்கும் ஆளவந்தாருக்கும் நாள் பாட்டுப் பாடி யிருக்க வேண்டும். பாடினரா? இராமானுசன் திவ்யப்ரபந்த விஷயத்தில் செய்தருளின மஹோபகாரங்களை நினைத்து அவருக்குப் பாட்டு எனில் அது நிமித்தமாக 37, 38 ஆக இரண்டு பாட்டுக்கள் மேலே பாடப்படுகின்றன. இங்கு ஆழ்வார்கள் போலவே நாளூர் திங்களுடன் பாடப்படுவதற் குக் காரணம் அது ஆகமாட்டாது. ஆண்டாளையும் சேர்த்து ஒரு ராசியாக எடுத்திருப்பதால் அங்காங்கிபாவ கல்பனம் மாமுனிகளின் கனவிலுமில்லை யென்பது அசைக்க முடியாத உண்மை. ஆகையால் இங்கு இவருடைய கருத்தென்ன

வெனில் பட்டர்போலவே நானும் எம்பெருமானுரை நிர்தே சம் பண்ணியிருக்கிறேன். இதன் கருத்தை தூப்புல்பிள்ளை யின் ப்ரபந்தஸாரத் திருவாக்கால் தெளிக என்பதே. பன்னி ரண்டு கர்த்தாக்களைக் கூறி உடனே பதின்மூன்ருவதாக ஒருவரைக் கூறினுல் அவரும் கர்த்தாவாகவே கருதப்பட் டிருக்கவேண்டுமென்பதும் ஸாக்ஷாத் கர்த்தா மற்றொருவர் இருக்கும்போது மற்றொருவரை எப்படிக் கர்த்தாவாகக் கூறலாம் என்ற அநுபபத்தி தோன்றும்போது ப்ரயோஜக கர்த்தாவாகக் கூறப்பட்டிருக்கிருர் என்று கொள்ளவேண்டு மென்பதும் புத்திமான்கள் வெகு எளிதாக அறியக்கூடிய விஷயம். ஆனுல் குமதிகளுக்கு மண்டையில் ஏற்றிக் கொள்ள முடியாதபடி வெகு கம்பீரமான விஷயம்.

(3)

பூர்வர்களுடைய சில அதிவாதங்களை அப்படியே க்ரஹித்து 'வியர்த்தபோது குளித்து பசித்தபோது புசித்து இராமானுசா வென்று கிடக்க ப்ராப்தம்' என்ற நிச்சயம் பிறந்து அனேகமாக எல்லோரும் வேத சாஸ்த்ராதி வித்யை களை யெல்லாம் விட்டொழித்து ஆசாரமும் கர்மானுஷ்டான மும் சிறிதுமில்லாமல் காலங் கழித்து வந்தனர். இதனுல் மேலிட்ட தமோகுணம் ஸ்ரீவைஷ்ணவ ஸ்வபாவத்தை அறவே ஒழித்துவிட்டது. நாஸ்திகராயினர். தயா தாக்ஷிண்யமற்றவராயினர். திவ்யப்ரபந்தத்தில்கூட அவ மதிப்பு உண்டாயிற்று. மிகவும் வருந்தத்தக்க இந்நிலையைப் போக்க மாமுனிகள் முயன்ருர். ஒவ்வொரு மாஸமும் அந்தந்த ஆழ்வார் திருநக்ஷத்திரத் தினத்தில் ஜனங் களைக் கூட்டி அவர்களுடையவும் ப்ரபந்தங்களுடையவும் பெருமையைப் பேசித் தாமாகவும் பிறரைக்கொண்டும் உப

தேசம் செய்து வந்தார். ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும் தாழ்வாக நினைப்பவர் நரகம் சேர்வர். ஆகையால் அப்படிப்பட்டவர்களோடு சேரக்கூடாது என்றூர். நினைப்பவர்களோடு சேரக்கூடாது என்றூல் தாம் நினைக்கக் கூடாது என்பது தானே தோன்றும். நாஸ்திகர் ஆஸ்திக நாஸ்திகர் இவர்களோடு பழகக் கூடாதென்றூர். (ஆஸ்திக வேஷம் போட்டு தம் ஆசரணத்தில் நாஸ்திகராயிருப்பவர் ஆஸ்திக நாஸ்திகர்.) ஆஸ்திகரோடு பழகி அவர் வார்த்தையைக் கேட்டு ஆஸ்திகராயிருங்கள் என்று உபதேசித்தார். பூர்வர்களுடைய ஜ்ஞானம் அனுஷ்டானம் இரண்டையும் விடாமல் பற்றிக்கொண்டு நல்ல ஆசார்யனை அடைந்து வாழுங்கள் என்றூர்.

"பரஸ்பரம் பகையை உண்டாக்குகின்ற பொருமை மேல் தோற்றத்தில் மட்டும் சாந்தியையுடையவரான நம்மவர்களை விட்டொழியவேண்டும்" என்று தேசிகனுடைய ஆசாஸனம் போலவே மாமுனிகளுடைய உபதேசமும் பலனற்றதாயிற்று. அஸூயையும் அதனுல் அவிநயமும் பகையும் முரட்டுத்தனமும் வளர்ந்து வந்தன. மாமுனிகள் பரமபதித்த பிறகு 100, 200 வருஷங்கள் சென்றபின் தேசிகத்வேஷம் உச்சநிலையை அடைந்தது. அதுவரையில் ஒரே விதமாயிருந்த விஷயங்களில் எதில் எதில் பேதம் உண்டாக்கக் கூடுமோ அதை யெல்லாம் உண்டாக்கினுர்கள். திருமண் பேதத்தில் முகத்தில் ஒருவிதம் மற்றவிடங்களில் ஒருவிதமென்று கொண்டனர். இதுவே அது புதியது என்பதைக் காட்டுவதற்குப் போதுமான சான்று. தேசிகன் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் திருமண் பேதமிருந்திருந்தாலும் நெற்றியில் ஒருவிதம் மற்றவிடங்களில் ஒருவிதம் என்ற பேதம் இருந்திருந்தாலும் ஸச்சரித்ரரக்ஷையில்

அதைப்பற்றி ஸ்வாமி அவச்யம் ஸாதித்திருப்பர். ஸாதிக்காமையால் தென்கலைத் திருமண் வெகு நவீநமென்பது மறுக்கவொண்ணுத உண்மை.

(4)

திவ்யப்ரபந்த அநுஸந்தான க்ரமம் தேசிகன் நியமனத்தினுல் கடைசியாக வ்யவஸ்தை செய்யப்பட்டது. அது அப்படியே மாமுனிகள் காலத்திற்குப் பிறகும் வெகுநாள் அனுஸரிக்கப்பட்டு வந்தது. பிறகு திருமண் காப்பில் போலவே இதிலும் புதிய மாறுதல் செய்யப்பட்டது. ராமானுஜதயாபாத்ரம் என்ற ஸ்தானத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்றவிதை வைத்தார்கள். தேசிகனிடத்தில் த்வேஷமின்றி மாமுனிகளிடத்திலுள்ள பக்தியினுல் மட்டும் இதைச் செய்திருந்தால் அதை விடாமலே இதையும் வைத்திருப்பார்கள். அந்த த்வேஷமே முக்ய காரணமாகையால் அதை விட்டுவிட்டு அதன் ஸ்தானத்தில் இதை வைத்தனர். இந்த ச்லோகத்தை ஸ்ரீரங்கநாதன் தானே செய்தான் என்ற ஒரு பெரும் புளுகு புளுகினுர்கள். மணவாளமாமுனிகள் சிஷ்யர் அழகிய மணவாள ஜீயர் என்ற ஒருவர் இருந்தார். அவர் இந்த ச்லோகத்தை இயற்றினுர் என்பது மாமுனிகளின் மற்ருெரு சிஷ்யரான எறும்பியப்பா என்பவர் செய்த வரவரமுனிசதகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறதாகையால் ரங்கநாதன் செய்ததாகச் சொல்வது கலப்பில்லாத பொய் என்பதை எவரும் மறுக்கவியலாது. ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்ற இந்த ச்லோகம் தேசிகனுடைய பகவத் விஷயத் தனியனை ராமானுஜதயாபாத்ரம் என்ற ச்லோகத்தைப் பார்த்து அதுபோலவே செய்யப்பட்டது. இது காலக்ஷேப காலத்தில் தனியனுக அநுஸந்திக்கப்படுவதற்காகவே முதலில் செய்யப்பட்டது.

பிற்காலத்தவர் தேசிக த்வேஷத்தினுல் ஸன்னிதிகளில் திவ்யப்ரபந்த ஸேவா காலத்திலும் இதை நுழைக்க ஆரம் பித்தனர். வரவரமுனிசதகத்தில் **'மந்த்ரரத்னம் த்வதீயம்'** என்றவித்தால் ஸ்ரீசைலேசபத்யம்தான் விவக்ஷிதமென்று வைத்து இது சொன்னேம். அங்கு வேறு ஏதோ ஒன்று கருதப்பட்டிருக்குமாகில் இப்பத்யம் வெறும் கலஹத்திற் காகவே செய்யப்பட்டதென்று தேறும். 'துலாயாமதுலே மூலே' என்று அப்பிள்ளை இயற்றிய தனியன்தான் முன் இருந்தது. பிறகு தேசிகன் பாத்ரத்தனியனைப் பார்த்து போட்டியாக ஸ்ரீசைலேசபாத்ரத் தனியன் கலஹக்காரர் களால் இயற்றி வைக்கப்பட்டதென்பர்.

ஸ்ரீமான் ஸ்ரீரங்கநாதார்யோ வேதாந்தத்வயகேஸரீ
முநி: காந்தோபயந்தா மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி

என்று ஸ்ரீமான் வேங்கடநாதார்ய ச்லோகத்தைப்போல் ஒரு ச்லோகம் கட்டியிருக்கிறுர்கள். இப்படிப்பட்டதுதான் ஸ்ரீசைலேச ச்லோகம் முதலானது எல்லாம். அவஸாநத்தில் நமோ ராமானுஜார்யாய முதலானவற்றின் ஸ்தானத்தில் வெவ்வேறு ச்லோகத்தையும் பாட்டுக்களையும் செய்து நுழைத்தனர்.

ஜீயர் ஒருவர் யதீந்த்ரப்ரவணப்ரபாவம் என்ற தன் நூலில் ஸ்ரீரங்கநாதன் ஐந்து வயது குழந்தையாகத் தோன்றி ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்ற ச்லோகத்தைச் சொன்ன பிறகு அங்குள்ளவர்கள் 'வாழிதிருநாமம் சொல்' என்று கேட்க அக்குழந்தை "வாழிதிருவாய்மொழிப்பிள்ளை, செய்ய தாமரை, அடியார்கள் வாழ" என்ற இவற்றைச்சொல்லிற்று என்று கூறியிருக்கின்றுர். ரங்கநாதன் தானே சொன்ன தற்கு மேல் 'வாழிதிருநாமம்சொல்' என்று அங்குள்ளவர்கள்

கேட்பதற்கு ப்ரஸக்தி என்ன ? தேசிகனுக்கு வாழி திருநாமம் இருப்பது மனஸ்ஸில் ஊறிக்கொண்டிருப்பதனாலன்றோ இப்படி எழுத ப்ரவ்ருத்தி உண்டாயிற்று. இதனால் இந்த யதீந்த்ரப்ரவணப்ரபாவம் ஜீயரேயோ அவர் போன்ற ஒருவரோ இயற்றியவை இவை என்பது ஸுஸ்பஷ்டம்.

1704 முதல் 1714 வரையில் மைஸூர் ராஜ்யத்தை ஆண்ட கண்டீரவ நரஸிம்ஹராஜ ஒடையார் என்ற அரசன் திருநாராயணபுரம் ஸன்னிதியில் ராமானுஜதயாபாத்ர பத்யம் சொல்லக்கூடாது என்று பிறர் கொண்டுவந்த வ்யவஹாரத்தில் "ராஜ ஒடையார் காலத்திலிருந்து (1578-1617) என் தகப்பனார் காலம் வரையில் ராமானுஜதயாபாத்ரபத்யம் எப்படி ஓதப்பட்டு வந்ததோ அப்படியே இனியும் ஓதப்பட்டு வரவேண்டு"மென்று தீர்ப்புக் கூறினான். இந்தத் தீர்ப்பு 1940-ம் வருஷத்து மைஸூர் கவர்ன்மெண்டு கெஜட்டில் பிரசுரமாகியிருக்கிறது. இதனால் தேசிகன் நியமித்த காலம் முதல் அநுஸந்திக்கப்பட்டுவரும் நம் பாத்ரபத்யத்தைத் தடுக்க முயன்றார்கள் தேசிக த்வேஷிகள் என்பது வெளிப்படை. இதையெல்லாம் நாம் விரிவாக ஸம்ப்ரதாய ப்ரதீபத்தில் கூறியிருக்கிறோம்.

திருநாராயணபுரத்தில் போலவேதான் மற்ற ஸ்தலங்களிலும் கலஹம் செய்து பீடித்து ப்ராசீன முறைக்கு க்ஷோபம் விளைவித்தனர். தேசிகன் திருவடியை ஆச்ரயித்தவர்கள் ஜ்ஞானநுஷ்டானசாலிகளாய் சாந்தராய் ஸாத்த்விகராய் இருந்தபடியால் லௌகிக வழியில் அவர்கள்போல் அவ்வளவு அபிநிவேசமின்றியே இருந்துவிட்டனர். அவர்கள் புகாத ஸன்னிதிகளில் அவிச்சின்ன பரம்பரையாக தேசிகன் நியமனப்படி ப்ரபந்தாநுஸந்தானம் நடந்து வருகிறது.

(5)

தேசிக த்வேஷிகளாய் தம்முடையது வேறு ஸம்ப்ரதாய மென்று கொண்டு அதில் ஆக்ரஹிகளாய் இருந்தவர்கள் அனேகமாக எழுத்து வாஸனையே இல்லாத பாமரர்கள். அரை குறை அறிவு பெற்றவர்களும் அவர்களையே பின் பற்றி நடந்தனர். பூர்வஜன்ம ஸுக்ருதத்தினுல் சாஸ்த்ரங் கற்கும் பாக்யம் பெற்றவர்கள் ஒன்றிரண்டு பேர் தோன்றினர். அவர்கள் தேசிகன் ஸ்ரீஸூக்திகளை ஸேவித்து விவேகம் பெற்று ஸங்கேதத்திற்கு உள்படாமல் தைரிய மாய் அந்த ஸம்ப்ரதாயத்தை உதறித் தள்ளிவிட்டு தேசிக ஸம்ப்ரதாயத்தைப் பற்றினுர்கள். ஸ்ரீ தொட்டையாசார்யர் தாம் அருளிச் செய்த வைபவப்ரகாசிகையில்

> ஸம்ப்ரதாயத்தை உள்ளபடி அறியாதவர்களும் ஸ்ரீபாஷ்யத்தின் கருத்துக்களை உணராதவர்களும் ஸித்தாந்த விரோதிகளின் கொழுப்பை அடக்க மாட்டாதவர்களுமான மற்றவர்கள் எனக்கு வேண்டவே வேண்டாம். வேதாந்த தேசிகன் ஒருவர்தான் வேண்டும்.

என்று கதறுகின்ருர். பாரத்வாஜம் ஸ்ரீநிவாஸாசார்யர் என் பவர் ஒருவர். இவர் ந்யாயபரிசுத்திக்கு ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கின்ருர். இது காசியில் அச்சாகியிருக்கின்றது. அதன் ஆரம்பத்தில் அவர் கூறுகின்ருர்—"இத்தனை காலம் நான் மதிகெட்டு ஆத்ம வஞ்சனை செய்து போந்தேன். அத்ருஷ்டவசமாக இப்போது நிகமாந்த மஹாதேசிக னுடைய க்ரந்தங்களை ஸேவித்து விழித்துக்கொண்டேன்" என்று. இதனுல் தேசிக விரோதிகளின் ஸம்ப்ரதாயம் வித்வான்கள் ஆதரிக்கமுடியாததொன்று என்றவிது வெகு காலமாகப் பறைசாற்றப்பட்டிருக்கிறதென்பது விளங்கு கின்றது.

இங்கு குத்ஸிதம் கூறுகின்றது. தொட்டயாசார்யர் தென்கலே. இவர் சததூஷணிக்கு வ்யாக்யானம் செய்திருக்கிருர். இவரைச் சேர்ந்தவர் ந்ருஸிம்ஹராஜன். இவர் சததூஷணி முதலானவற்றுக்கு வ்யாக்யானம் செய்திருக்கிருர். இப்படித் தென்கலேயார் தேசிக க்ரந்தங்களே ஆதரித்தார்களேயன்றி வடகலேயார் என்ன செய்தார்கள்? இவர்களுக்கு தேசிக ஸம்பந்தமே கிடையாது. கோபால தேசிகனுக்குப் பிறகுப் புதிதாக தேசிக ஸம்பந்தம் வைத்துக்கொண்டார்கள் என்கிறது. முழுப் பைத்யம் என்பதைக் காட்டுகின்ற மற்ருெரு பிதற்றல் இது. தொட்டயாசார்யருக்கு ஸமகாலிகர் ரங்கராமானுஜ ஸ்வாமி. அவர் ந்யாயஸித்தாஞ்ஜனத்திற்கு வ்யாக்யானம் செய்திருக்கிருர். கோபாலதேசிகனுக்கு முன்பட்டவர். இவர் ஆசார்யன் ஸாக்ஷாத் ஸ்வாமி. அவர் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய வ்யாக்யானம் முதலானவற்றைச் செய்திருக்கிருர். இவர்களுக்கெல்லாம் முன்பட்டவர் ஷஷ்ட பராங்குச ஸ்வாமியின் திருவடிகளில் ஆச்ரயித்த அஹோபலாசார்யர். இவர் ஸங்கல்பஸூர்யோதயத்திற்கு வ்யாக்யானம் செய்திருக்கிருர். இப்படிப் பல. இனி வ்யாக்யானம் செய்வதுதாஞ ஸம்பந்தத்திற்கு அடையாளம்? யாதவாப்யுதயத்திற்கு வ்யாக்யானம் செய்ததனுல் அப்பய்ய தீக்ஷிதர் தேசிக ஸம்பந்தம் பெற்றுவிட்டாரா? அந்த ஸம்ப்ரதாயத்தைக் காப்பாற்றினவராஞரா? உபதேசித்த மார்க்கத்தில் நிஷ்டையுடையவராயிருப்பதும் சிஷ்யாசார்ய பரம்பரையாய் க்ரந்தங்களே ப்ரவசனம் செய்வதும் அதிகரிப்பதும் ஸ்ரீகோசங்களே லுப்தமாகாமல் பாதுகாப்பது மன்ருே ஸம்பந்த லக்ஷணம். இப்படிச் செய்துவந்தவர்கள் யார்? தொட்டயாசார்யர் சததூஷணீ ஸ்ரீகோசத்தை உபதேசரத்னமாலே அதிகாரிகள் திருமாளிகையிலிருந்தா பெற்ருர்? அதுவரையில் அதைக் காப்பாற்றிவந்தவர்கள் யார்?

ஸ்ருஸிம்ஹராஜர் ஸர்வார்த்தஸித்தியைப் புஸ்தக்க் கடைகளி லிருந்தா வாங்கினுர் ? ஸ்வாமி தேசிகன் க்ரந்தங்களினுல் ப்ரசாரம் குன்றிய பல பூர்வ க்ரந்தங்கள் லுப்தமாயின. அவற்றில் பட்டர் அருளிச்செய்த அத்யாத்ம கண்டத்வய விவரணமும் தத்த்வரத்னுகரமும் சேர்ந்தவை. நம்பிள்ளை முதலானவர்கள் அவற்றை ரக்ஷித்து வைத்திருக்கலாமே. வைத்தார்களா ? ஸ்தோத்ரங்களைக் காப்பாற்றினுர்களே அதுவே பெரும் கார்யம். அதுவரையில்தான் அவர்களு டைய ஆற்றல்.

இனி மற்றென்றும் கவனிக்கவேண்டும். ஸம்ப்ரதா யாந்தர அபிநிவேசத்தினுல் தேசிகன் விஷயத்தில் அபசாரப்பட்டவர்கள் தமது தவறை உணர்ந்தபோது முன் பட்ட அபசாரத்திற்கு ப்ராயச்சித்தமாக ஒரு கைங்கர்யம் செய்யவேண்டுமென்று ஆர்வம் கொண்டு ஸ்வாமி க்ரந்தங் களுக்கு வ்யாக்யானம் செய்து க்ருதக்ருத்யராகிருர்கள். அபசாரப்படாதவர்களுக்கு இவ்வித நிர்ப்பந்தமில்லை. பாவம் செய்து ப்ராயச்சித்தம் செய்துகொண்டவர்கள்தான் தர்ம சாஸ்த்ர பரிபாலனம் செய்கிறவர்கள். ப்ராயச்சித்தப்ரஸக்தி யில்லாமல் நித்யகர்மாநுஷ்டான நிரதர்களுக்கு தர்மசாஸ்த்ர ஸம்பந்தமோ அதைச் செய்த மஹர்ஷிகளிடத்தில் பக்தியோ இல்லையென்பாருண்டோ ? இப்படித் திருந்தின இவர்கள் யாவரும் கொழுத்த வடகலைகள். இவர்களுடைய வம்சஸ்தர் கள் இப்போது தென்கலையாயிருக்கின்ருர்கள் என்ருல் பல நிர்ப்பந்தங்களால் மறுபடியும் மாறிவிட்டார்கள் என்பது தான் அதற்குக் காரணம். இதுவன்றி அவர்கள் தென்கலை யாகவே இருந்தார்கள் என்பது வெறியர் வார்த்தை. தேசி கனைத் தவிர மற்றவர்கள் எனக்கு வேண்டவே வேண்டாம் என்றவரும் இத்தனை காலம் நான் மதிகெட்டு வேறு ஸம்ப்ர

தாயத்திலிருந்தேனென்றவரும் தென்கலையென்றால் தென் கலை என்ற சொல் வடகலை என்ற பொருளிலேயே உபயோ கப்படுத்தப்படுகிறது என்றுதான் கொள்ளப்படும். அப் போது மற்றது நிஷ்கலை அல்லது விகலையென்னவேண்டும். இனி ரங்கராமானுஜ ஸ்வாமி முதலானோர் எதற்காக க்ரந்தமெழுதினார் என்றால் ஆராதனரூபமாகவும் சிஷ்யா நுக்ரஹார்த்தமும் என்க. மற்றவர் க்ரந்தங்களிலும் இப் ப்ரயோஜனமுண்டேயென்னில் யார் இல்லை யென்கிறார்கள். அவற்றில் இப்ரயோஜனம் ஆநுஷங்கிகம். அபசார நிவ்ருத்தி முக்ய ப்ரயோஜனம்.

(6)

இப்படி தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்த பிறகு அவற்றுக்கு விருத்தமாக நாம் சொன்னது யாவும் அப்ராமாணிகமே யென்று தெளிவு பெற்ற பெரியோர்கள் தம்மாலேயே உபேக்ஷிக்கப்பட்ட அந்த விருத்தார்த்தங் களடங்கிய க்ரந்தங்களையே அடிப்படையாகக்கொண்டதும் பிற்காலத்திலும் வித்வான்களால் வெறுத்து உதறித்தள்ளப் பட்டதுமான ஸம்ப்ரதாயத்தில் மூர்க்காபிநிவேசங்கொண்டு அதனால் வெறிபிடித்தலைகின்ற இந்தக் குத்ஸிதம் வெட்கம் ஸத்யம் பரலோகபயம் எதுவும் எள்ளளவுமில்லாமல் அதி பால்யம் முதல் தேசிகனையும் தத்ஸம்பந்தியான ஸர்வத் தையும் தூஷித்து வருகிறது. க்ரந்தங்களைப்பற்றியோ விஷயங்களைப்பற்றியோ இது முன்சொன்னதற்கெல்லாம் பரிஹாரம் சொல்லப்பட்டே இருக்கிறது. ஆகிலும் இதன் வழக்கமென்னவென்றால் அந்தப் பரிஹாரங்களை விட்டு விட்டு முன்பு தான் சொன்னதையே மறுபடியும் புதிதாகச் சொல்வதுபோல அச்சிட்டு வெளியிடுவதுதான். ஸ்ரீ ராமா னுஜன் 132-ல் ப்ரபந்தஸாரத்தைப்பற்றிய சில தூஷணங்

களைத் தவிர மற்றதெல்லாம் இது முன் சொன்னதும் நாம் பரிஹரித்ததும்தான். உதாஹரணமாக ஒன்றே ஒன்று கூறுகின்றோம். ராமாநுஜதயாபாத்ரம் என்ற தேசிகன் தனியன், ப்ராசீனமோ நவீனமோ எந்தத் தாள பத்ரகோசத்திலும் கிடையாதென்று வெகு ஸம்ப்ரமத்துடன் அழுத்தம் திருத்தமாக பன்முறை கோஷிக்கப்படுகிறது. 77 முதல் 82 வரையிலுள்ள பாராக்களைப் பார்க்க. இதெல்லாம் முன்பே 'ராமாநுஜதயாபாத்ர சரித்ரம்' என்ற ஒரு ஆபாஸச் சுவடியில் இது எழுதியதே. இதற்கு விரிவாக ஸமாதானம் சொல்லும்போது நமது ஸம்ப்ரதாயப்ரதீபம் 42-ம் பக்கத்தில் திருப்பதி ஸ்ரீவேங்கடேச்வர ஓரியண்டல் இன்ஸ்டிட்யூட் லைப்ரெரியிலுள்ள பல ஓலைச் சுவடிகளில் இத்தனியன் காணப்படுகிறதென்று சுவடிகளின் எண்ணிக்கையுடன் கூறியிருக்கின்றோம். தென்கலையாரிடமிருந்து வந்த சுவடிகளில் ஸ்ரீசைலேசத்தனியன் காணப்படவில்லையென்றும் கூறியிருக்கின்றோம். இப்படி நாம் ஸந்தேஹத்திற்கிடமில்லாமல் காட்டியிருக்கும்போது அந்த ஸம்ப்ரதாய ப்ரதீபத்தை நித்யபாராயணம் செய்து வருகின்ற குத்ஸிதம் ஐந்து வருஷங்களுக்குப் பிறகு பழம்பாட்டையே பாடிப் புஸ்தகம் வெளியிடுவது எத்தனை அயோக்யதையை அதவா உன்மாதத்தைக் காட்டுகின்றதென்பதை தடஸ்தர்கள் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும்.

(7)

பொய் சொல்வதற்கு அஞ்சாமல் தைவபயமில்லாமல் பிறர் மனம் புண்படுவதே தனக்குப் புருஷார்த்தமென்று கொண்ட இந்தப் பைத்யம் ஸ்ரீசைலேச முதலானவற்றைப் பார்த்து ராமாநுஜதயாபாத்ரம் முதலானவைப் போட்டியாகச் செய்யப்பட்டவையென்று உலகத்தார்க்கு ப்ரமத்தை

உண்டாக்கமுயன்று வருகின்றது. அது விணென்று ஸம்ப்ரதாய ப்ரதீபத்தில் விளக்கியிருக்கின்றோம். ஒரே ஒரு விஷயம் மட்டும் இங்கே கூறுகின்றோம். தேசிகன் நூறு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். அவருடைய அந்த்ய காலத்தில் 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று பாடியது பொருந்துகின்றது. மாமுனிகள் 73 திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவருக்கும் 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று பாடுகின்றார்கள். இவ்விரண்டுக்குள் எது முந்தியதாயிருக்குமென்பதை அல்ப புத்திகளுமறியலாம். ஒரு நூற்றாண்டு இருந்தாயிற்று இன்னுமொரு நூற்றாண்டு இரும் என்பது இதன் பொருள். நூற்றாண்டிருந்தவர் விஷயத்தில்தானே இப்படிச் சொல்லத் தோன்றும். எழுபது வயது இருந்தவரைப்பற்றி இன்னுமொரு எழுபதாண்டிரும் என்னத் தோன்றும் அல்லது இன்னும் பல்லாண்டிரும் என்னத் தோன்றும். இன்னுமொரு நூறு என்று சொல்ல ஒருகாலும் தோன்றாது. ஆகையால் தேசிகன் பாட்டைப் பார்த்து மற்றவர்களுக்கும் இப்படிப் பாட்டு இயற்றப்பட்டது என்பதை மறைத்து வேறு விதமாகக் காட்டச் செய்யும் முயற்சி தலைகீழாக நின்றாலும் பலிக்காது.

(8)

பொய் ஐதிஹ்யங்களையும் ஆபாஸ யுக்திகளையும் கொண்டு மாமுனிகள் வரையில் மாறுபடாமல் வந்த ஆசார அநுஷ்டானங்களை 'யதசனம்' என்று அரசாணிபாலை வேங்கடாத்வரி உபாலம்பிக்கும்படி அறவே ஒழித்துப் புது வைஷ்ணவம் உண்டாக்கின பாமரர்கள், 'ஸ்ரீமந்நிகமாந்தமஹா தேசிகன் நிஷ்கர்ஷித்து நிலைநாட்டிய ஸம்ப்ரதாயத்திற்கு விருத்தமாக ராமாநுஜ ஸம்ப்ரதாயமொன்று இருக்கிறதென்று எவரும் நம்பமாட்டார்களே' என்று பார்த்து

தேசிகன் உத்தராவஸ்தையில் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்ரயித்து விவேகம் பெற்ருர் என்று வெகு ஆச்சர்யமான ஒரு கல்பனை செய்தார்கள். இவர்கள் தம் ஸம்ப்ரதாய நூல் களேயே படிக்காதவர்கள். தேசிகன் க்ரந்தங்களைத் தொட வும் யோக்யதையற்றவர்கள். ஆகவே இவர்கள் கல்பனை யெல்லாம் அவர்களுக்கே மேலும் பரிஹாஸ்யதாஹேதுவாய் முடிந்தது. ஒருவன் பிறப்பினுல் உண்டான ஜாதி மாறி அப் பிறப்பிலேயே வேறு ஜாதியாகிவிடலாமென்று சிலர் கூறி யதை மறுத்து தேசிகன் ஜந்மாந்தரமெடுத்தாலன்றி அது மாருதென ஸ்தாபித்திருக்கிருர். உலக வஞ்சனையினுலேயே பிழைக்கவேண்டியவரான பாமர புது வைஷ்ணவர்கள் ஒரு பிறவியிலேயே ஜாதி மாறும் என்ற பக்ஷத்தையே பற்றிக் கொண்டு இதற்கு முரணுகப் பேசிய தேசிகன் பெரியவாச் சான்பிள்ளையால் சிக்ஷிக்கப்பட்டு திருந்திஞர் என்று சொல்லி இதில் திருப்பாணுழ்வாரையும் ஸம்பந்தப்படுத்தி ஞர்கள். இங்கு உண்மையென்னவெனில் ஜாதி மாறு மென்ற பக்ஷம் பெரியவாச்சான்பிள்ளைக்கு ஸம்மதமன்று. இவர் அமலனுதிபிரானுக்கு இட்ட உரையில் திருப்பாணுழ் வாரின் ஜாதியை அப்படியே வைத்து அதற்கேற்ற கருத் தைக் கூறி உரையிடுகிருர்:— "அமலனுதிபிரான்: ஜந்ம வ்ருத்தாதிகளால் குறைய நின்ற தம்மை விஷயீகரித்த பின்பு தன் பக்கல் தோஷம் தட்டாதே 'அநச்நந்யோ அபி சாகசீதி' என்கிறபடியே விளங்குகிறபடி." என்பது அங் குள்ள பங்க்தி. ஜந்ம வ்ருத்தாதிகளால் குறைய நின்ற ஆழ்வார் அவரை எம்பெருமான் விஷயீகரித்த பிறகும் அப்படியே இருந்தார். ஆகிலும் எம்பெருமான் அமலனு கவே இருந்தான். அவர் ஸம்பந்தத்திஞல் மலமுண்டாகப் பெறவில்லை என்பது இப்பங்க்திகளின் கருத்தென்பது

ஸ்பஷ்டம். தேசிகன் இவ்வுரை அநுசிதமென்று கருதி ஆழ்வாருடைய ஜாதி வ்ருத்தாதிகளைச் சிறிதும் ஸ்பர் சிக்காமல் 'ஸம்ஸார மலங் கழியும்படி' செய்து நம்மை நிர் மலனுக்குகின்றதைப்பற்றி எம்பெருமான் அமலனென்னப் பட்டான். ஆகவே இங்கு மோக்ஷப்ரதத்வம் கூறப்பட்ட தென்கிருர். ஜாதி மாருது என்பது இருவருக்கும் ஸித்தாந் தம். ஆனல் அதைப்பற்றி வரும் சங்கைக்குப் பரிஹார மாகப் பெரியவாச்சான்பிள்ளை உரையிட்டார். திருவஷ்டா க்ஷரார்த்தத்தைச் சொல்ல வந்த இவ்விடத்தில் அதை யெல்லாம் வைத்துப் பொருளும் கருத்தும் கூறுவது உசித மன்று என்ருர் தேசிகன். வேதார்த்தங்களை வெளியிடவந்த ஸ்ரீஸூக்தியில் ஆழ்வாருடைய தாழ்வை நினைக்கும்படி ஏன் உரையிடவேண்டுமென்று கருதினர். ஆகையால் யாரால் யார் திருந்துவது என்பது இங்கே ஸ்பஷ்டமாயிருக்கின் றது. இதையெல்லாம் பராமர்சிக்கச் சக்தியற்ற மூடர்கள் தைவத்துக்கஞ்சாமல் பொய்க் கதைகளைக் கட்டினர்.

ப்ரக்ருதப் பைத்யமும் அதே நிலையில் நின்று பெரிய வாச்சான்பிள்ளையை மிகப் பெரியவராகவும் தேசிகனை அவ ருக்கு ஒரு கண்ணிநுண் சிறுத்தாம்பு பாடுகின்றவராகவும் உலகிற்குக் காட்ட ஆக்ரஹம் கொண்டு பல பிதற்றி அவ ருக்குப் பெரும் இழிவையே உண்டாக்கிக்கொண்டிருக் கிறது. பகவத் ராமாநுஜதர்சனத்தில் பிறகு எக்காலத்திலும் எவரும் குறைகூற இடமில்லாதபடி ஆபாதசூடம் அதைப் பரிஷ்கரித்து ப்ரதிஷ்டாபனம் செய்யஅவதரித்தவர் ஸ்வாமி. இதற்காக வேதாந்ததேசிகன் என்ற பிருதத்தை வழங்கி ஸ்ரீ ரங்கநாதனுல் அநுக்ரஹிக்கப் பெற்றவர். "இப்படிப் பிற்பட்டவர்கள் யாரோ எழுதிவைத்தார்கள். ரங்கநாதன் அப்படி ஒரு பிருதம் கொடுக்கவில்லை"யென்று இதுவரை

யில் இந்த அவ்யவஸ்திதம் சொல்லவில்லை. இனி ஒரு நாள் இப்பொழுதுதான் ஆராய்ச்சி செய்து தெளிவு பெற்றேன். அவர் வேதாந்ததேசிகன் என்ற பிருதம் பெற்றவரன்று என்று சொல்லக்கூடும். ஆகிலும் இப்போது அவர் அந்த பிருதம் பெற்றவர் என்றே அங்கீகரித்திருப்பதை அநுஸரித்துப் பேசுவோம். பகவத்ராமாநுஜ ஸித்தாந்தத்தில் அத்வைதிகள் சொல்லக்கூடிய குற்றங்களுக்கு இடமிராமல் பரிஷ்காரம் செய்தது போலவே ஸ்வாமி இந்த ஸித்தாந்தத்தைச் சேர்ந்தவர்களாலேயே வரக்கூடிய க்ஷேபங்களுக்கும் இடமிராமல் பரிஷ்கரித்தார் என்பது பல க்ரந்தங்களால் ஸந்தேஹமின்றி அறியக்கிடக்கின்றது. இந்த க்ரமத்தில் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த பல விஷயங்களை அங்கீகரிக்காமல் ஸ்வாமி வேறு விதமாக யோஜித்தும் கண்டித்தும் இருக்கிறார். ப்ரபத்திக்கு உபாயத்வம் உண்டா, இல்லையா? பிராட்டிக்கு புருஷகாரத்வம் தவிர உபாய கோஷ்டியில் ப்ரவேசமுண்டா இல்லையா? என்றவித்யாதி விஷயங்கள் மிக மிக ப்ரதானமானவை. இவற்றில் பெரியவாச்சான்பிள்ளை அவலம்பித்த பக்ஷத்தை ஸ்வாமி மறுக்கிறார். இவற்றிலேயே அபிப்ராயபேதம் இருக்கும்போது திருக்குறுந்தாண்டகம் எத்தனையாவது ப்ரபந்தம் என்பதில் அபிப்ராயபேதம் ஏன் இருக்கக்கூடாது? ஸம்ப்ரதாய க்ரமமாய் உபதேசம் வரும்போது எப்படி பேதம் ஏற்படுமென்னில் ப்ரபத்தி ஸ்வரூபாத்யுபதேசம் பரம்பரையாய் வந்ததன்றோ? அதில் எப்படி பேதம் உண்டாயிற்று? ஆகையால் பெரியவாச்சான்பிள்ளை ஒரு பாகவதர் என்ற ப்ரதிபத்தி ஸ்வாமிக்கு உண்டு என்ற அவ்வளவுதான் உண்மை. ஸ்ரீபாஷ்யாதிகளுக்கோ ஸம்ப்ரதாயத்திற்கோ விருத்தமானவிடங்களில் ஸ்வாமி தம் திருவுள்ளத்தை நிச்சங்கமாய் வெளியிட்டே தீருவர். வெளியிட்டே

யிருக்கிறுர். சிலவிடங்களில் மறுப்பில்லாமல் கூறினுல் அப்படி ஒரு பொருளுண்டு என்று காட்டினதாகும். அந்த இடங்களில் ஆசார்யர் என்றதற்குப் பெரியோர்கள் என்பது பொருள். அப்பெரியோர் பெரியவாச்சான்பிள்ளேயாயு மிருக்கலாம், பிறராகவுமிருக்கலாம். ஆருயிரப்படியில் கூறப்படாத விசேஷார்த்தங்களும் ஸம்ப்ரதாயமாக வந்து கொண்டிருக்கின்றனவென்பது இருபத்து நாலாயிரப்படியி ணுலேயே தெரிகின்றது. ஆளவந்தார் இப்படி ஸாதிப்பர் எம்பெருமானுர் இப்படி ஸாதிப்பர் என்று அங்கங்கே கூறப் படுகின்றது. அப்படி முன்னேர்கள் கூறின கருத்துக் களேப் பெரியவாச்சான்பிள்ளே அறிந்ததுபோலவே ஸ்வாமி யும் தம் குருபரம்பராமுகமாக அறிந்திருக்கலாம். ஆகவே மறுப்பில்லாமல் ஸ்வாமி அநுவதித்த சில அர்த்தங்கள் பெரியவாச்சான்பிள்ளே க்ரந்தங்களில் காணப்படுவதைக் கொண்டு பெருங் கோட்டை ஒன்று கட்ட முயல்வது கேவ லம் மூளேக் கோளாறின் விளேவே. மேலும் அமரகோசத் தையும் வைத்ய நூல்களேயும் ஸ்வாமி எடுக்கிறுர். அதற் கும் இதற்கும் வாசியில்லே.

ஸ்ரீபாஷ்யகாரர் நியமித்த ஐந்து கார்யங்களில் ஸ்ரீபாஷ் யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல் முதலாவது. இதில் பூர்ணமான பாண்டித்யம் இருந்தாலன்றி மற்ற எந்தப் படிப்பும் பயன்படாது. அதுமட்டுமன்றி விபரீதப்போக்கை உண்டாக்கும். அது நிறைந்திருந்துவிட்டால் மற்ற க்ரந் தங்களில் அல்லது சாஸ்த்ரங்களில் உள்ள அறிவு சிறந்து விளங்கும். ஸ்ரீபாஷ்யத்தில் அதிகாரமில்லாதவர்கள் திவ்ய ப்ரபந்தங்களே அதிகரிப்பது இரண்டாவது கைங்கர்யம். ஆகவே ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரராய் உபயவேதாந்தாசார்ய ராய் 'நீதச்ச தத்பௌத்ரஜாநாசார்யாந்' "யதிப்ரவரபாரதீ

ரஸபரேண நீதம் வய:” “நிர்விஷ்டம் யதிஸார்வபௌம வசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவனம்” என்று தன் வாழ் நாள் கழிந்த விதத்தை பரமஸந்தோஷத்தோடு ஸாதித் தவரான ஸ்வாமியை அவராலே கண்டிக்கப்பட்ட விஷயங்க ளடங்கிய நூல்களை இயற்றியவரும் அவராலே திருந்தின வரும் முதல் கைங்கர்யத்தில் அர்ஹதை பெருமையாலே இரண்டாம் கைங்கர்யத்தில் நின்றவருமான ஒருவரிடம் ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணினவராகக் கூறத் துணிந்தவர் ஹ்ருதயமேயில்லாத ஒருவராயிருக்கவேண்டும். அல்லது முழுப் பைத்யமாயிருக்கவேண்டும். உப்பு ஜலமுள்ள ஒரு கிணற்றின் பக்கத்திலுள்ள ஒரு பூச்சி க்ஷீரஸாகரத்தின் நீர் முழுவதும் இக்கிணற்றிலிருந்துதான் கொண்டு போகப் பட்டது என்றதாம். அது போலிருக்கிறது இக்கூற்று.

ஒரு பொய்யை நூறு தடவை சொன்னால் மெய்யாய் விடும் என்று மேல் நாட்டார் யாரோ சொல்லிக்கொண்டி ருந்ததாகக் கேள்வி. அந்தக் கொள்கையைப் பின்பற்றி திருப்பித் திருப்பி இந்தப் பெரும் பொய் அடிக்கடி வெளியி டப்படுகின்றது போலும். அது ஒருகாலும் பலிக்காது. இதன் ஸ்வரூப ஸ்வபாவங்களை யறியாதார் இங்கு எவரு மிலர். இப்படி இது உத்தேசிக்கும் பலன் கிட்டாது என் பதுமட்டுமன்று. மிகப் பெரிய விபரீத பலன் உண்டு. ‘ஸ மூலோ வா ஏஷ சுஷ்யதி யோऽந்ருதம் வததி’ என்று உபநிஷத்துக் கூறிய ஆமுஷ்மிக அநர்த்தம் ஒருபுறமிருக்க இது யாரைப் பெருமைப்படுத்த இப்பாடு படுகின்றதோ அவருக்குப் பெரும் இழிவையே இது விளைவிக்கின்றது. நம்பிள்ளை சிஷ்யர்களின் உரையெல்லாம் ஸ்ரீபாஷ்யவிருத்த மென்று ப்ரஸித்தமென்றார் பெரிய பரகால ஸ்வாமி. இப் படி இது பொதுவாகச் சொல்லப்பட்டதேயன்றி இதற்கு

உதாஹரணமொன்று ஒருவரால் காட்டப்பட்டிருப்பதை நாம் அறியோம். இப்பைத்யத்தின் ஈனச் சொற்களால் சீற்ற மடைந்த ப்ரபந்தஸாராஸ்வாதிநீகாரர் சிலவிடங்களில் பெரிய வாச்சான்பிள்ளை எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளை அநுஸரிக்காமல் சங்கரர் கூறிய பொருளையேவைத்து வ்யாக்யானித்திருப்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். மேலும் பெரிய கத்ய வ்யாக்யானத்தில் தேசிகன் "முக்தர்கள் ஜகத்வ்யாபாரங்களில் சக்தராகிலும் உதாஸீனராயிருப்பர் என்கிற ஆபாதாஸ்திக பக்ஷமும் நிரஸ்தமாயிற்று" என்று ஸாதித்திருக்கிறார். ஆபாதாஸ்திகர்: மேல் தோற்றத்தில் மட்டும் ஆஸ்திகர். உண்மையில் நாஸ்திகர். இப்படி தேசிகன் வெறுத்துக் கூறிய ஆபாதாஸ்திக பக்ஷம் யார் கொண்டது எனில் ஸாக்ஷாத் பெரியவாச்சான்பிள்ளை கொண்டதென்றும் ப்ரபந்தஸாராஸ்வாதிநீகாரர் ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் **த்வதாச்ரிதாநாம்** என்ற ச்லோகத்தின் உரையில் பெரியவாச்சான்பிள்ளை கூறியிருப்பதை எடுத்துக்காட்டி நிரூபித்திருக்கிறார். ஸ்ரீபாஷ்யத்திற்கு அத்யந்தம் விருத்தமான விஷயம் இது. இதை எவரும் மறுக்கமுடியாது. இதைப் படித்தவுடனே நாம் மிக வருந்தினோம். ப்ரபந்தஸாராஸ்வாதிநிக்கு "ப்ரபந்தஸாராஸ்வாதிநீ ப்ரஹரணம்" என்று பெயரிட்டு ஒரு மறுப்பெழுதிய அசடு இதற்கு எதுவும் பதில் கூறமுடியாதாகையால் வாய் திறவாமல் மௌனமே ஸாதித்து விட்டு மற்ற சில விஷயங்களுக்கு மட்டும் ஆபாஸ ஸமாதானங்களை உளறிக்கொட்டிவிட்டு நின்றிருக்கிறது. பெரியவாச்சான்பிள்ளை க்ரந்தத்தில் இத்தனை விருத்தமாக ஒரு விஷயம் கூறப்பட்டிருப்பதாக யாரோ ஒருவர் இருவர் அறிந்திருப்பார்களோ, அதுவுமில்லையோ. இப்போது உலகமெல்லாம் அறியும்படி இந்த உன்மத்தம்

செய்துவிட்டது. ப்ரபந்தஸாரதத்வஸாரம் முதலிய நூல்களால் ப்ரபந்தஸாரம் தேசிகன் செய்தருளினதன்று என்று எவரும் கொள்ளப்போவதில்லை. அநுஸந்தானத்தை நிறுத்தப்போவதில்லை. வேறு எதுவும் நடக்கப்போவதில்லை. பெரியவாச்சான்பிள்ளை நூலிலுள்ள இந்த ப்ரபல ஸ்ரீபாஷ்ய விரோதத்தை உலகறியவைத்தது ஒன்றுதான் இந்தக் குமதி கண்ட பலன். ஸாராஸ்வாதிநீப்ரஹரணம் என்பதற்கு ஸாராஸ்வாதிநீ பெற்ற அடி என்றும் அது கொடுத்த அடி என்றும் இரண்டு பொருள் உண்டு. அவற்றில் முதல் பொருளை அசடு கருதிற்று. இரண்டாவது பொருள்தான் உண்மையில் உள்ளது. இப்படி ஸ்வஸம்ப்ரதாயத்திற்கே தீங்கை விளைவித்துவருகின்றவிது உந்மத்தம் என்பதில் ஸந்தேஹமுண்டோ?

(9)

விப்ரதிபத்தி லவலேசமுமின்றி இன்னார் செய்த க்ரந்தமிது என்று ப்ரஸித்தமான விஷயத்தில் ஏதோ தவறு இருப்பதாகக் காட்டி ஒரு ஆக்ஷேபம் செய்வது பைத்தியக்காரத்தனமன்றி வேறன்று. பிறர் நூலைப்பற்றி நாம் இப்படிக் கூறினால் நம் நூலைப்பற்றியும் பிறர் இப்படிக் கூறுவார்களே என்று தோன்றாமலிருப்பது பைத்தியம் என்பதற்கு மற்றொரு அடையாளம். இந்த ஜடப்பொருள் பரிஹரிக்கமுடியாத ஒரு விரோதத்தைக் காட்டி உபதேசரத்னமாலை மணவாளமாமுனி ஸாதித்ததன்று என்று ஸாராஸ்வாதிநீகாரர் ப்ரதிபந்தி கூறியிருக்கிறார். இதற்கு ருஜுமார்க்கத்தில் என்ன பதில் சொல்லமுடியும்? "ககநாரவிந்தம் அஸத் என்றால் ஸாரஸாரவிந்தம் அஸத் என்று அடுத்தபடி சொல்லவேண்டியதுதானே" என்று கம்பீரமாக எழுதுகிறது. ககநாரவிந்தம் ஆகாசத்தாமரை. ஸாரஸார

விந்தம் குளத்தாமரை. ப்ரபந்தஸாரம் ஆகாசத் தாமரை யாம். உபதேசரத்னமாலை குளத் தாமரையாம். பைத்யக் காரன் தவிர வேறு யாராவது இப்படிச் சொல்வார்களா? ப்ரபந்தஸாரம் உலகில் இல்லையா, அநுஸந்தானம் செய்யப் படவில்லையா, ஒன்று ஆகாசத் தாமரையாவானேன், மற் ருென்று உண்மைத் தாமரையாவானேன்? புத்தி ஸ்வாதீன மாயிருப்பவர் பேசும் பேச்சா இது? இதற்கு மேல் "ஸர்வ தந்த்ரஸ்வதந்த்ரர் என்ற பட்டம் ஸ்ரீ ரங்கநாயகி கொடுத்த தாக எழுதிவைத்திருக்கிருர்கள். ஆனுல் ஸ்தோத்ரரத்ன பாஷ்யத்தின் முடிவில் ஸ்வாமி ஸதஸ்ஸில் வித்வான்கள் அப்படி மதித்ததாகக் கூறியிருக்கிருர். இந்த விரோதத் தைப் பரிஹரித்துக்கொண்டு உபதேசரத்னமாலையிலுள்ள விரோதத்திற்கு வரட்டும்" என்று ஒரு பிதற்றல் காண்கி றது. குற்றங்களைக் காட்டிப் போலி நூல் என்பதானுல் உப தேசரத்னமாலையும் அவ்விதமானதுதான் என்று இசைய வேணும். இல்லாவிட்டால் ப்ரபந்தஸாரமும் அப்படியில்லை. சொன்னது தவறுதான் என்று கபோலதாடனம் பண் ணிக்கொள்ளவேண்டும். இரண்டையும் விட்டு மற்ருெரு நூலில் மற்ருெரு குற்றம் இருப்பதாகக் கூறுவது எதற்கு? உந்மாதத்தின் உச்சநிலை இது. வழக்கம்போல் ஸ்வாமி ஸ்ரீஸூக்திக்கு உள்ள அர்த்தத்தை க்ரஹிக்கமாட்டாமை யால் இங்கு விரோதம் கூறப்படுகிறது.

கவிதார்க்கிகஸிம்ஹமும் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரருமான எவர் ஸதஸ்ஸில் வித்வான்களாலே ஆயிரம் ஸமஸ் யையைப் பூர்த்தி செய்தவரென்று கொண்டாடப் பெற் ருரோ அவர் இந்த ஸ்தோத்ரபாஷ்யத்தைச் செய்தார்

என்பது அங்குள்ள ஸ்வாமி ஸூக்தியின் பொருள். ஸ்வா மிக்கு முன்னுே பின்னுே யாராவது சொன்னது ஸ்வாமி

திருவுள்ளத்திற்கு விருத்தமாயிருந்தால் அது எம்பெருமானுர் தர்சனத்திற்கு ஒவ்வாதது என்று உலகத்தோர்க்கு அறிவிக்க ஸ்ரீ ரங்கநாதன் வேதாந்தாசார்யன் என்ற பட்டத்தை ப்ரஸாதித்தான். இதனுல் வேதாந்தத்தில் மட்டும் ஸ்வாமிக்குச் சிறப்பு என்று சிலர் கருதிவிடக்கூடுமென்று பார்த்துப் பிராட்டி எம்பெருமான் திருவுள்ளத்தை அநுஸரித்து ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர் என்று பஹுமானித்தாள்.

(10)

இப்படித் தானெறிந்த அம்பு தன்னையே பீடிக்க அதிலிருந்து தப்பமுடியாமல் எதையோ உளறுகின்றது உந்மத்தமென்று பார்த்தோம். தேசிகன் பெருமையென்ன, அவருடைய ஸ்ரீ ஸூக்திகளின் பெருமையென்ன ? இவையிரண்டையும் போற்றிவந்த எண்ணிறந்த மஹான்களின் பெருமையென்ன ? இவற்றையெல்லாம் சிறிதும் எண்ணிப்பாராமல் அதற்கேற்ற பெருந்தன்மை சிறிதுமின்றி அச்வசாகடிக ப்ரப்ருதிகளான அதமாதம பாமரரைப்போல் அவலீலையாக எதையும் பேசிவரும் பரமநீச ப்ரக்ருதிக்கு தன்னைப்பற்றிச் சிறிது சிந்திக்கும்படியான மனோநிலையை உண்டாக்க வேறு வழியில்லாமையால் நாமும் உண்மையில் விருப்பமில்லாமலே மிகுந்த வருத்தத்துடன் உபதேசரத்னமாலையிலுள்ள சில குற்றங்களைக் கூறுகின்றோம்.

ஆரம்பம் முதல் "இந்த உபதேசரத்தனமாலை தன்னை" என்ற வரையில் எல்லாம் ஒரு மஹாகவியியற்றியது என்று சொல்வதற்கேற்ற காம்பீர்யமும் அழகுமின்றி ஸாமான்யமாக எல்லோரும் பேசும் பேச்சுப் போலவே இருக்கிறதென்பது வெளிப்படை. ஒரு பேராசிரியரின் நூல் இப்படி இருக்காது. ஐந்தாம் பாட்டில் 'மாதங்கள் நாள்கள் தன்னை

ஈதென்று சொல்லுவோம்' என்றவிடத்தில் 'மாதங்கள் நாள்கள் தம்மை இவையென்று சொல்லுவோம்' என்றிருக்க வேண்டும். மாதங்களையும் நாள்களையும் மட்டும் கூறும் ப்ரகரணத்திலுள்ள பதினைந்தாம் பாட்டில் குருகையைப் புகழ்ந்தது அஸங்கதம். பாட்டைப் பூர்த்திசெய்வதற்காகச் சொன்னது. இது கவனஸாமர்த்யமில்லாமையைக் காட்டுகின்றது. இப்பாட்டில் நான்காமடியில் 'ஒரு பார்' என்றவிடத்தில் ஒரு என்பது வ்யர்த்தவிசேஷணம். பார் ஒன்றேயாதலின். ஒரு ஊர் என்றங்வயமாகில் விசேஷணம் எங்கேயோ தனித்திருப்பது குற்றமாம். இப்ரகரணத்தில் திருமழிசைப்பிரானை முன்னும் குலசேகரனைப் பின்னும் கூறி, ஊர்களைச் சொல்லும் அடுத்த ப்ரகரணத்தில் இந்த க்ரமத்தை மாற்றி ஊர்கள் கூறப்பட்டிருக்கின்றன. இதில் க்ரமபங்கம் தோஷம். க்ரமத்தையே விவக்ஷிக்காத ப்ரகரணமன்று இது.

முப்பத்தாறும் பாட்டில் "தேசிகரையல்லால் சீர்மையறிவார் ஆர். அருளிச்செயலையறிவார் ஆர்" என்று அங்வயித்து வாக்யம் முடிந்துவிட்டது. பிறகு நான்காம் அடியில் 'உண்டோ பேசு' என்பது அநாவச்யகம். கஷ்டப்பட்டு அங்வயம் சொல்லவேண்டும். ஸமாப்தபுநராத்தம் (முடிந்து போனதை மறுபடியும் இழுப்பது) என்ற தோஷம் இதிலுளது. நாற்பதாம் பாட்டில் 'செய்தருளும்' என்பது தவறு. 'செய்தருளின' என்றிருக்கவேண்டும். இப்படியிருந்தால் யாப்பு வழுவாம். இதனால் கவி அஸமர்த்தர் என்பது தெளிவு. இங்கு இரண்டாமடியில் 'அன்றுகில்' என்பது தவறு. 'இன்றுகில்' என்றிருக்கவேண்டும். இப்படியிருந்தால் மோனை கெடும். இங்கும் அஸாமர்த்ய ப்ரகாசந்தான். ஐம்பதாம் பாட்டில் திருநாமங்களைக் கீழே நிர்த்தேசித்துப்

பிறகு 'அதனை' என்றது தவறு. 'அவற்றை' என வேண்டும். ஐம்பத்து மூன்றும் பாட்டில் 'இப்போது' என்ற கடைசி பதம் வ்யர்த்தம். வேண்டாத பொருளையும் தருகின்றது. 'இப்போது மெய்' என்ருல் காலாந்தரத்தில் பொய் என்று கிடைக்கின்றது. இப்பாட்டு முதல் வசன பூஷணத்தைப்பற்றின ஏழு பாட்டுக்களும் இந்நூலில் ஸங்கதியற்றவை. அருளிச்செயல்கள் அவற்றின் வ்யாக்யானங்கள் இவையே இங்கு விஷயங்கள். அப்படியன்ருகில் ஆசார்ய ஹ்ருதயத்தையும் இங்குக் கூறியிருக்கவேண்டும். அறுபத்தைந்தாம் பாட்டில் சிச்சன் என்றது தவறு. இலக்கணப்படி சீடன் என்றுதான் வரும். கண்ணுடி வீட்டுக்காரன் கல் வீட்டுக்காரன் மேல் கல் எறிவது போன்றது இந்த அஸமஞ்ஜஸம் செய்வது என்பதை விளக்குவதற்காக நாம் இப்படி வழியல்லா வழியில் அடி வைத்தோம். இவற்றுக்கு ஸமாதானம் கூற நாமே ஸமயம் வந்தபோது முன் வருவோம். ஸ்ரீ கிருஷ்ணுய நம:.

## (11)

நான்தான் பைத்தியமாயிற்றே. என்னைப்பற்றி ஏன் பிறர் ஆரவாரம் செய்யவேண்டுமென்று இது கேட்கிறது. வெறும் பைத்தியமாயிராமல் கல்லெறியும் பைத்தியமாயிருப்பதால் தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கிறதென்று முன்பே அறிவித்தோம். பாமரரை மயக்கி அவர்களுடைய பொருளைப் பறித்து சில அல்ல, பல வயிறு காலிகளுக்கு அசநாச்சாதனம் வழங்கி வேவு பார்த்து, நடந்தது மிகக் கொஞ்சம், நடக்காதது அதிகம், எல்லாவற்றையும் திரித்து எழுதி ஆபாஸ நூல்களை வெளியிட்டுவருகிறது. இதற்கு த்ருஷ்டபலன் எதுவுமில்லை. அத்ருஷ்டபலன் உண்டு.

அது எது என்பது யாவருமறிந்த ஒன்ருகையால் நாம் கூற வேண்டிய அவச்யமில்லை.

ஸம்ப்ரதாய வைஷம்யத்தைச் சிறிதும் பாராட்டாமல் பரமகம்பீரமான ரீதியில் ப்ரவசனம் செய்துகொண்டு சம தமநிதிகளான பல வித்வான்கள் இருக்கின்ருர்கள். பொருமையினுல் அவர்களைப் பலபடியாக தூஷித்து நூல்களை வெளியிடுகின்றது. அவர்கள் நிக்ரஹம் பண்ண ஆரம்பித்தால் பலரிடம் சென்று கெஞ்சிக் கூத்தாடி அவர்களுடைய புருஷகாரத்தினுல் தப்பித்துக்கொள்கிறது. ஆனுல் மறு க்ஷணம் முதல் முன்போலவே எல்லாம் செய்கிறது. யாரோ திவ்யப்ரபந்தம் அச்சிட்டால் இதற்கென்னவந்தது. அதைப் பற்றி விமர்சம் செய்ய இதற்கென்ன ப்ராப்தி. பரகீயாம் த்ராக்ஷாம் என்று திவ்யப்ரபந்தத்திற்கும் தனக்கும் யாதொருஸம்பந்தமுமில்லையென்று தானே கூறிவிட்டது. இது அச்சிட்ட க்ரந்தங்களில் பழைய பிழைகள் தவிர எத்தனை புதிய பிழைகள் இருக்கவில்லை. யாராவது இதுபோல் தூஷிக்க முன் வருகின்ருர்களா ?

(12)

இதையெல்லாம் விரிவாக நாம் இங்குச் சொல்வதன் நோக்கமென்னவெனில் இதன் உளறல்களை எவரும் பொருள் படுத்தவேண்டாமென்று கலாபேதமின்றி ஸ்ரீவைஷ்ணவர் ஒவ்வொருவரிடமும் அறிவிப்பதுதான். ஸாரம் எள்ளளவும் இருக்காது. எல்லாம் அஸாரம். ஒன்றிரண்டு வஸ்துக்களையே வைத்துக்கொண்டிருக்கிற சில அங்காடிக்காரிகள் ஐம்பது கறிகாய்களின் பெயர்களை அடுக்கிக் கூவுவார்கள். அருகே போய்க் கூடையைப் பார்த்த பிறகு எல்லாரும் ஏமாந்துபோவார்கள். அப்படி வெறும் சொற்ருெடர்கள்தான் இதன் நூல்களில் இருக்கும். சிறிது ஆழ்ந்து

பார்த்தால் விஷயம் ஒன்றும் இராது. இதன் அஜ்ஞானமும் விபரீத ஜ்ஞானமும் இறுமாப்பும் வஞ்சனைக் கருத்துக்களும் தான் புலனாகும்.

இதன் அட்டஹாஸச் சொற்களைக் கேட்டு எவரும் கலங்கவேண்டாமென்று விவேகபாரிஜாதத்தில் கூறினோம். இது மரித்தவர் விஷயத்தில் பந்துக்களுக்குச் சொல்லப் பட்ட உபசார வார்த்தையேயாகும் என்கிறது துர்மதி. ப்ரபந்தஸாரத்தை இது கொன்றுவிட்டதாம். இனி அதற்கு உயிரே வராதாம். ஆகவே நாம் கலங்கவேண்டாமென்றது உபசார வார்த்தையேயன்றி சிகித்ஸையன்று என்றுகிற தாம். லங்காதஹனம் ஆனவுடன் லங்கைக் கொசு ஒன்று நான் போய் அநுமானைக் கொன்றுவிட்டு வருகிறேன் என்று சொல்லிப் புறப்பட்டுப் போய் அவர் வாலின் அடியில் தன் மூக்கு முள்ளைத் தனக்கு வலியுண்டாகும்வரை அழுத்தி விட்டுத் திரும்பிப் பறந்து போய் 'நான் அநுமானைக் கொன்றுவிட்டேன். இனி உலகில் அநுமான் இல்லை'யென்று கூவிற்றும். வஜ்ராயுதம் விழுந்தாலும் அழுந்தாத அநு மான் உடலில் கொசுவின் மூக்கு என்ன செய்யும்? அது போல் தேசிகன் திருநாமம் உலகில் வழங்கும் வரையில் நிராபாதமாய் விளங்கக்கூடிய ப்ரபந்தஸாரத்திற்கு இந்த அவஸ்து என்ன அவத்யம் விளைவிக்கமுடியும்? ஆனால் அந்தக் கொசு அநுமானைக் கொல்ல நினைத்ததுபோல் இது ப்ரபந்தஸாரத்தை அதாவது ஸ்வாமி தேசிகனுடைய புகழு டம்பைக் கொல்ல நினைத்து அதற்காக முயன்றது உண்மை. கொலை பாதகம் அதாவது ப்ரஹ்மஹத்யை செய்ய இந்த ஜடம் ஸித்தமாயிருந்தது. அதற்காக முயன்றது என்பது தத்த்வம். தான் ஒரு கொலை பாதகி. ப்ரஹ்மஹத்யாகாரன் என்றதைத் தானே ஒப்புக்கொள்கின்றது.

(13)

हस्त इव भूतिमलिनो यथा यथा लङ्घयति खलः सुजनम् ।
दर्पणमिव तं कुरुते तथा तथा निर्मलच्छायम् ॥

என்றான் ஸுபந்து என்ற ஒரு ப்ராசீன கவி. முன் காலத்தில் வெண்கலக் கண்ணாடிதான் உண்டு. அதைத் தினந் தோறும் சாம்பல் கொண்டு தேய்த்துத் தேய்த்து பளபளப்பாக்குவார்கள். இதை உபமானமாக்கிக் கவி ஒன்று கூறுகின்றான். அழுக்குக் கை கண்ணாடியை இப்படியும் அப்படியும் கடக்கக் கடக்க அதன் ஒளி அதிகமாகின்றது. அது போல் ஒரு போக்கிரி ஸாதுவான ஒருவரைப் பீடிக்கப் பீடிக்க அவருடைய சிறப்பு மிக விளங்குகின்றது என்கிறான். இந்த துர்மதி தூஷிக்க தூஷிக்க ஆசார்யரும் ஸ்ரீஸூக்திகளும் மிக மிக விளங்கும் நிலை உண்டாகின்றது.

திவ்யப்ரபந்தங்களைப்பற்றியும் ப்ரபந்தஸாரத்தைப் பற்றியும் பகவத் பாகவத ஆசார்ய தேசிக அநுக்ரஹங்களினால் அறியப்பட்டவையும் இந்த ப்ரஹ்மஹா எத்தனை ஜந்மமெடுத்தாலும் அறியக்கூடாதவையுமான பல அரிய விஷயங்களை ப்ரகாசப்படுத்தவும் இவற்றால் அறியப்படுகின்றதான ஸ்வாமி தேசிகனுடைய அபார வைபவத்தை மற்றொரு முறை அநுஸந்திக்கவும் ஒரு ப்ரஸக்தி உண்டானதைப்பற்றி மிக மகிழ்கிறோம்.

ஐந்தாம் விகாஸம் முற்றிற்று.

பாரிஜாத புஷ்பம் என்கிற
ப்ரபந்தஸார வைபவம் முற்றிற்று.

॥ धर्मो जयतु ॥

29

ஸ்ரீ:

# அனுபந்தம்.

## பரிமளம்.



பாரிஜாதபுஷ்பம் அச்சாகும் ஸமயத்தில் அச்சுக்கூடத்தில் கையெழுத்து ப்ரதியோடு ஒத்துப் பார்ப்பதற்காக சில பக்கங்களின் 'ப்ரூப்' அங்குள்ளவர்களால் படிக்கப்பட்ட போது அங்கே சென்று அதைக் கேட்ட ஒரு தென்கலை புருஷர் முகமாகச் சில விஷயங்களைச் சோர வ்ருத்தியால் அறிந்த ப்ரபல அரிஷ்டம் உடனே அவர் பேரால் தன்னை ஒளித்துக்கொண்டு ஒரு போலி மறுப்பு எழுதி வெளியிட்டிருக்கிறது. அச்சுக்கூடக்காரர்களால் கண்டிக்கப்பட்ட அந்த நம்பிக்கைத் துரோஹி

"நன்னிலம் அனுப்பப்பட்ட ராமானுஜன் 1–12–60ல் கிடைத்தது. மனக்லேசத்தினால் டாக்டர் எவ்வளவு தடுத்தபோதிலும் அவைகளை மீறி அன்றே காஞ்சீபுரம் போய் அங்கு நிலைமை திருப்திகரமில்லாமல் மன சமாதானமின்றி நேற்று 7—12—60 இரவு திரும்ப தேவரீர் 1—12—60 ஸ்ரீமுகம் நன்னிலமிருந்து அனுப்பப்பட்டு ஸேவிக்க ப்ராப்தம்.

தேவரீர் மனது நோக காரணபூதனைத் தோற்றும் அடியேன் சரணாகதி செய்து உஜ்ஜீவிப்பது தவிர வேறு எந்த முறையும் அனுஷ்டிக்க அநர்ஹனன்றோ..."

என்று அவர்களுக்கு எழுதி தன்னைக் காத்துக்கொண்டார். ப்ரபல அரிஷ்டத்தின் எல்லா வேவுக்காரர்களும் இப்படி அனுசயித்துக் கடைத்தேற ப்ராப்தம்.

இனி 'துர்க்கந்த தூரீகரணம்' என்ற அந்தப் போலி மறுப்பின் விமர்சம். 'பாரிஜாதபுஷ்பமானால் துர்நாற்றம் வீசுமோ' என்று முதலில் ஒரு கேள்வி கேட்கப்படுகிறது. ஒரு நாளும் வீசாது. 'எனக்கு வீசுகிறதே' என்னில் மூக்கு, ஏன், உடம்பு முழுவதும் அமேத்ய வஸ்துவினாலேயே படைக்கப்பட்டிருப்பதால் பரிமளங்களையெல்லாம் அடக்கி துர்நாற்றமே எப்பொழுதும் க்ரஹிக்கப்பட்டு வருவது ஸஹஜம். (1)

"ராமானுஜர் செய்தபடியாலே ராமானுச நூற்றந்தாதியென்கிறதென்று மருண்ட ஒருவர் எழுதி நுழைத்த பாட்டே **வையகமெண்** என்கிற பாட்டு என்று வெகு விரிவாகவும் உள்ளபடியாகவும் எழுதிய ஸ்வாமி" (அசடு) **"एकैव मूर्तिर्बिभिदे त्रिधा सा सामान्यमेषां प्रथमावरत्वम्** என்றவன் போல் மும்மூர்த்திகளும் ஒருவரே என்று மருண்ட ஒருவர் எழுதி நுழைத்த பாட்டுக்களே முனியே நான்முகனே முக்கண்ணப்பா, மூவராகிய ஒருவனை என்றவை" என்றும் **வெகு விரிவாகவும் உள்ளபடியாகவும்** எழுதி, பதிலெழுதக் கிளர்ந்தவர்களை பங்கமடைந்து ஓய்ந்துபோம்படி செய்து விட்டார் என்று கேள்விப்படுகின்றோம். (2)

ப்ரேரணை என்கிற ஆஜ்ஞைக்கும் அநுஜ்ஞைக்கும் வாசியறியாத ஜந்து ஒன்றிருக்குமாகில் அது இந்த ஜடந்தான். "ஸம்பந்தம் தோற்றும்படி ஒரு ப்ரபந்தம் செய்யும் என்று நியமித்தருள, இவரும் அப்படியே செய்கிறேன் என்று அந்த ஆஜ்ஞையை சிரஸா வஹித்து ... ... அருளிச் செய்து" என்பது பிறர் எழுதிய திருவரங்கத்தமுதனார் வைபவத்தில் உள்ள சொற்றொடர். (3)

சதுர்முகனுல் கட்டளேயிடப்பட்ட வால்மீகி இயற்றிய ராமாயணத்தை சதுர்முகப்ரோக்தமென்று சொல்லுவாரில்லே என்கிறது அரிஷ்டம். அப்படிச் சொல்லியே ஆக வேண்டுமென்று நிர்ப்பந்திப்பாரில்லே. சொன்னுல் தவறில்லே. (4)

"நீராடி போஜனம் செய்" என்ருல் அது எப்படி போஜனக் கட்டளேயிட்டதாக ஆகாதோ, என்கிறது ஜடம். இது போஜன அநுஜ்ஞையுமாகாது என்பதை இது அறியாது. போஜனம் செய்யட்டுமா என்று ஒருவர் கேட்க, செய் என்று மற்றவர் சொன்னுல் இது போஜன அநுஜ்ஞை. (5)

புஷ்பம் 33-ம் பக்கத்தில் "பாஷ்யகாரருடைய நியமனம் இல்லாவிட்டால்" என்ருரம்பித்து நாம் சொல்லியிருப்பதன் கருத்தை உணராமல் க்ருஹப்ரவேசம் செய்துவைத்த புரோஹிதரை க்ருஹநிர்மாதா எனலாமா என்கிறது அரிஷ்டம். வாஸார்ஹ க்ருஹமாக்கினவர் புரோஹிதர் எனலாமா, கூடாதா என்பதை இது ஆலோசிக்கவேண்டும். "ஆறிருவர் ஓரொருவர் அவர் தாம் செய்த துய்ய தமிழ்" என்பது பாட்டு. துய்ய தமிழ் திவ்யப்ரபந்தம். வெறும் தமிழ் ஆக்கினவர் அமுதனர். துய்ய தமிழாக்கினவர் யதிராசன். கண்ணிநுண் சிறுத்தாம்பு நாதமுனிகளுக்கு முன்பே மற்றவைபோல் திவ்யப்ரபந்தமாயிருந்தது. பிரிவும் வரிசையும் இவர் ஏற்படுத்தினரேயன்றி எதையும் அவ்விதச் சிறப்புள்ளதாகத் தாமே செய்யவில்லே. (6)

ஸுத்த்யுபாஸ்ய: மத்த்வரி: என்ற உதாஹரணங்களேக் கண்டு பதங்களின் நடுவிலும் முடிவிலும் இருக்கும் இகரத்திற்கு யகரம் வருமேயன்றி ஆதியில் உள்ள

தற்கு வராது. அது 'இகோ யணசி' என்ற வ்யாகரண ஸூத்ரத்திற்கு விருத்தம் என்றது ஒரு அசடு. ஸூத்ரத்தில் இவ்வித விசேஷம் கூறப்படவில்லையே என்று ஒரு புத்திமான் கேட்கிறார். அசடு விழிக்கிறது. திட்டுகிறது. இப்படிப் பரிபவமடைந்த இது தன் ஆக்ஷேபத்தையும் பிறர் கேள்வியையும் திரித்துக் கூறுகின்றது.

ஆதி இடை முடிவுகளுக்குப் பொதுவான ஒன்றை ப்ரமாணமாக எடுத்து அதற்கு விருத்தமென்னுமல் ஸம்ஸ்க்ருதத்தில் **க்ய** என்ற ஸம்யுக்தாக்ஷரம் சொல்லின் ஆதியில் வராது, என்று ஒரு "பெரியவர்" சொன்னால் எந்த மூடனும் பாக்யம் முதலான சொற்களில் வரவில்லையா என்று கேட்கமாட்டான். கிரி: இத்யாதி **க்யாதி** பதங்கள் பாகீத்யாதி **க்யந்த** பதங்கள். பாக்யமித்யாதி **க்யாந்த பதங்கள்** என்று ஏன் ஐயா ஆதியில் வராதென்று கேட்டுப் பெரியவராகப் போடும் வேஷத்தை பிய்த்தெறிந்து உள்ள சிறுமையை வெளிப்படுத்துவான். அப்பொழுது பார்க்க வேண்டுமே இதன் திருமுகமண்டல சோபையை. (7)

"இணைந்தியல் காலை யரலக்கிகரமும்' என்ற நன்னூல் ஸூத்ரம் வடமொழியாக்கம் என்ற தலைப்பின் கீழ் அச்சிடப் பட்டிருக்கிறது" என்று (இந்நூல் 36-ம் பக்கம்) நாம் எழுதி யிருப்பதில் ஏதோ பெருந் தவறு இருப்பதுபோல் பேசிக் குதிக்கின்றது குத்ஸிதம். இதம் ஸூத்ரம் காரகப்ரகரணே வ்யாக்யாதம் த்ருச்யதே என்று ஸூத்ரத்தைப்பற்றி வ்யாக் யாதாவின் கருத்தைக் குறிப்பதற்காக எழுதுவதில் இந்த ஜடம் குற்றமொன்றும் கூறமுடியாது. அதேபோல் அச் சிட்டவர்களின் கருத்தைக் குறிப்பதற்காக அந்தத் தலைப் பின் கீழ் இந்த நன்னூல் ஸூத்ரம் அச்சிடப்பட்டிருக்கிற

தென்றோம். அச்சிட்ட புலவர்கள் இந்த ஸூத்ரம் வட மொழியாக்கத்திற்காக வந்ததென்று கருதியிருக்கின்றார்கள் என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது. அச்சுப் புஸ்த கத்தை ப்ரமாணமாகக் காட்டக் கருதியபோது அச்சிடப் பட்டிருக்கிறதென்று எழுதுவதோ பேசுவதோ யுக்தமே. அல்லாதபோது அது இல்லையென்ற விவேகத்தைப் பெற வேண்டும் (8)

"நடுவுக்கும் ஆதிக்கும் வாசியில்லையென்னுமிவர் ஆதியிலே ஒருதாரணமெடுத்துக்காட்ட இன்னுமொரு பிறவி பிறக்கட்டும் ... ... மெய்யெழுத்தை முதலிலே கொண்ட சொல் செய்யுளில் தலை காட்டவே மாட்டா தென்று "நாம்" எழுதியான பின்பு வாய் திறக்க இவ ரார் ?"

என்று கோபுரத்தின் மேலேறி கோஷித்த குமதி நாம் அரு ணகிரிநாதரின் திருப்புகழிலிருந்து பல உதாரணங்களை எடுத்துக் காட்டிய பிறகு இந்தக் கவிக்கும் நூலுக்கும் அநி தரஸாதாரணமாகத் தான் கற்ற ஒன்பதாம் அஷ்டக மந்த் ரங்களால் ஸம்பாவனை செய்து "அபத்த சைவ ப்ரயோ கத்தை விட்டுத்தொலைத்து ஸுபத்த வைஷ்ணவ ப்ரயோ கம் காட்ட வழியில்லையே" என்கிறது. சைவ ப்ரயோகமா கையால் இது அபத்தமென்றது, ஆஹா! எவ்வளவு ஆணித்தரமான பேச்சு, அவிசால்யமான யுக்தி! அபத்தமா, இல்லையா என்பதைப் பிறகு விசாரிப்போம். "மெய் யெழுத்தை முதலிற்கொண்ட சொல்வடிவம் செய்யுட்களில் ப்ரயோகிக்கப்படுவதை இங்குதான் கண்டோம்" "ஒருதார ணம் காட்ட இன்னொரு பிறவி பிறக்கட்டும்" என்றும் செய்யுளில் தலை காட்டவே மாட்டாதென்றும் ஸர்வஜ்ஞும் போல் வெகு கம்பீரமாகச் செய்த ப்ரதிஜ்ஞை இப்போது என்னவாயிற்று ?

அருணகிரிநாதர் "அபத்தமான சொற்களை உபயோகித்தே எழுதுவதென்று ஒரு ஸங்கல்பம் செய்துகொண்டே எழுதினர்" என்று ஜ்ஞான த்ருஷ்டியினல் இது அறிந்தது போலும். இதன் இந்தப் பிதற்றல்களைப் படிப்பவர்கள் சிலரிருந்தால் அவர்கள் தாமாகவே இவ்விஷயத்திலுள்ள உண்மையறிவார்களாகையால் நாம் வீண் விஸ்தரம் செய்ய விரும்புகின்றேமல்லோம். மெய்யெழுத்தைமுதலிற்கொண்ட தமிழ்ச் சொல் கிடையாதாயினும் அவ்வித வடமொழிச் சொல்லை அப்படியே ப்ரயோகிப்பதில் வழுவொன்றுமில்லையென்று கருதியே அவர் அச்சொற்களை உபயோகித்தார் என்று நேர்மதிகள் இங்குக் கொள்ளாமலிருக்க முடியாது. இதுவே நம் ஆழ்வாராசார்யர்களுக்கும் கருத்து.

இந்த விஷயத்தில் ஸாராம்சத்தைச் சுருக்கமாக எழுதுகின்றேம். (1) நன்னூல் ஸூத்ரப்படி பிரபந்தமென்றுதான் இருக்கவேண்டுமெனில் ஆழ்வார்களின் சித்ர புண்ய இத்யாதி ப்ரயோகங்கள் குற்றமுள்ளவையாம். இவை குற்றமற்றவை எனில் 'ப்ரபந்த' என்பதும் அப்படியே. விசேஷம் எதுவும் கூறமுடியாது. (2) இனி அந்த ஸூத்ரத்தைவிட்டு விட்டு ப்ராசீன ப்ரயோகங்களையனுஸரித்து மெய்யெழுத்தை முதலிற்கொண்ட சொல் செய்யுளில் வரக்கூடாதென்ற நியமம் ஸித்திக்கிறது. அதற்கு விருத்தமாகையால் 'ப்ரபந்த' என்பது அபத்தமெனில் ப்ராசீன ப்ரயோகங்களை அனுஸரித்து சித்ர புண்ய ஆத்ம என்று இப்படியும் ப்ரயோகிக்கக்கூடாது என்ற நியமமும் ஸித்திக்கக்கூடுமாதலால் இவையும் அபத்தங்களென வேண்டும். இவற்றை உபயோகித்த ஆழ்வார்களுக்கு முற்பட்ட பெரியோர்கள் இயற்றிய நூல்களில் இத்தகைய ப்ரயோகங்களைக் கண்டாலன்றி இவை குற்றமற்றவை ஆகா. இவ்வித ப்ரயோக

மொன்று முதல் மூன்று திருவந்தாதிகளில் அல்லது வேறு பழைய தமிழ் நூல்களில் காணமுடியுமா? (3) 'சித்திர, புண்ணிய' என்ற சொல்வடிவம் தமிழில் விளங்கா நிற்க 'சித்ர, புண்ய' என்றும் ப்ரயோகித்தவர்களின் கருத்து வடமொழிச் சொல்லை அப்படியேயும் ப்ரயோகிக்கலாம் என்பதே. இதற்குமேல் "நடுவில் அப்படியே இருக்கலாம், முதலில் மாற்றியேயாகவேண்டுமென்று அவர்கள் கருதினர்கள் என்று கல்பிக்க ப்ரமாணமில்லை. ஆகையால் 'ப்ரபந்த' என்பதும் வழுவற்றதே என்று ஸ்ரீ தேசிகனுடையவும் அருணகிரிநாதருடையவும் கருத்து. 'சங்கர பாக்கர பாட்ட ப்ரபாகர' என்ற வைஷ்ணவ ஆசார்யரின் கருத்தும் இதே. (9)

'ப்ரபந்த' என்று மெய்யெழுத்தை முதலிற்கொண்ட சொல்வடிவம் செய்யுளில் அமைந்திருப்பது அஸாது என்றவிதற்கு 'நாநா வ்யாகரணுபிஜ்ஞ' என்ற தேசிகன் ஸ்ரீஸூக்தி ஸித்த ந்யாயத்தை எடுத்துக் காட்டினேம். இப்போது "இது அஸாது என்ற ப்ரஸ்தாவமே கிடையாது" என்கிறது ஜடம். ஸம்ஸ்க்ருதத்தில் இந்த சொல் அஸாது என்று இது சொன்னதாக வைத்தா நாம் கண்டனம் செய்கின்றோம்? ஹா ஹந்த கௌஶலம் ரேகே! (10)

சங்கர பாக்கர என்கிற பாட்டில் **ப்ரபாகர** என்றிருப்பதை விவேகிகள் எடுத்துக்காட்டிய பிறகு அஞ்ஜலி பண்ணி நிற்கவேண்டும். "அதைவிட்டு இந்தவிடத்தில் **ப்ர** என்றது ஆதியன்று. ஸமாஸ பதத்தின் இடையிலுள்ளது" என்று கூறப்பட்ட ஸமாதானம் அஸங்கதமென்று விளக்கியிருக்கின்றோம். இப்போது அந்த ஸமாஸப் பேச்சையே விட்டொழித்து "பிரபாகரர் என்றே பாடம் என்றும் 'ப்ரபாகர'

என்றிருந்தாலும் குற்றமில்லை யென்றது குற்றமற்றதே'' என்றும் அசடுவழிய எழுதுகின்றது. 'பிரபாகரர்' என்ற பாடத்தில் வ்ருத்தபங்கம் துஷ்பரிஹரம். இதுபோன்ற ஜ்ஞானலவ துர்விதக்தர் கல்பித்ததே அது. 'ப்ரபாகர' என்றே பாட்டின் கர்த்தாவான மாமுனிகளோ ஆண்டானோ ப்ரயோகித்த சொல்வடிவம் இருந்திருக்கவேண்டும். ஆகவே இதுபோலவே 'ப்ரபந்த' என்பதும் குற்றமற்ற ப்ரயோகம். ஆண்டான் ப்ரயோகமாகில் அது ஸாதுவென்று திருவுள்ளம்பற்றியே தேசிகன் 'ப்ர'வை ப்ரயோகித்தார் என்றும் மாமுனிகள் ப்ரயோகமாகில் தேசிகன் ப்ரயோகத்தை ப்ரமாணமாகக்கொண்டே இவர் ப்ரயோகித்தார் என்றும் கொள்ளவேண்டும். ''மாமுனிகள் அருளியது இந்நாள் பாட்டு என்ற உண்மை''ப் பக்ஷத்தில் 'ப்ரபாகர' என்றது போல் ஸமாஸத்தின் நடுவில் ப்ராசீன நூல்களில் மெய்யை முதலெழுத்தாகக்கொண்ட சொல்வடிவம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறதென்று காட்டவேண்டியது இந்த அஸமஞ்சஸத்தின் பொறுப்பு. அதைப்பற்றி வாய் திறவாமல் ''குற்றமில்லை'' என்று வெறும் ப்ரதிஜ்ஞை செய்கிறது. ஸூத்ரம் போயிற்று, ஸமாஸ வார்த்தை போயிற்று, பூர்வப்ரயோகப் பேச்சு போயிற்று. இதெல்லாம் திண்டாட்டமில்லையென்றால் எது திண்டாட்டம்? திண்டாட்டம் நிறைய இருக்கிறது. வெட்கந்தானில்லை.

''**பிரபந்த** என்றுதானுள்ளது என்று சொல்லிவிட்டால் சனி விட்டது. அதில் என்ன குடி கெட்டுப்போகும்'' என்கிறது குத்ஸிதம். அப்பொழுதும்கூட விடமாட்டேனென்கிறது இந்த சனி. எழுத்தை விட்டாலும் அதன் ஓசையைப் பிடித்துக்கொள்கிறது. ''ஓசை இன்பம் குன்றும் என்னும்

31

இத்தனையேயுள்ளது'' என்றல்லவோ தானே கூறுகின்றது. பாட்டுக்களில் ஓசை ப்ரதானம். அதற்கேற்றபடி எழுத்துக்களை குறுக்கியும் நீட்டியும் உச்சரிப்பார்கள். வட சொல் எழுத்து விஷயத்தில் ஒரு ப்ரமாணமுமின்றித் தானே ஒரு நியமத்தைக் கட்டிக்கொண்டு அதற்காக மிக ப்ரதான மான ஓசை கெடுவதை இசைந்து வெகு அலக்ஷ்யமாக இதென்ன ப்ரமாதமென்கிறது மஹா மூடம். ''புசித்தால் பலருக்கு வயிற்று வலி வரக் காண்கையாலே நாம் புசிக்கக் கூடாது. புசிக்காமலிருந்தால் உயிர் போய்விடப்போகிற தென்னுமித்தனையேயுள்ளது. இதென்ன ப்ரமாதம்'' என்பவனுக்கும் இதற்கும் வாசி ஒன்றுமில்லை. 'பிரபந்த' என்றே எழுதினாலும் அச்சிலிருந்தாலும் நாம் படிக்கும்போது ஈரசைச்சீர் வேண்டிய இடத்தில் 'ப்ரபந்த' என்றுதான் ஒலிக்கும். தானாகவே நிகழும் ஒலி இது. ஆகையால் பெரியோர்கள், ஸ்வயமே இப்படி அமைந்த சொல்லை நாம் ஏன் மாற்றவேண்டுமென்று அப்படியே அமைக்கின்றனர். இந்த ரஹஸ்யம் இந்த ஜடத்தின் புத்திக்கு அகோசரமானது. 'பராங்குசனார் **சொற்பிரபந்தம்** உகந்து கற்றோன் வாழியே' என்று அச்சில் காணப்படும் நாதமுனிகளின் வாழி திருநாமப் பாட்டின் பாடத்தில் 'சொற்பிரபந்தம்' என்பது நான்கசைச் சீராகின்றது. இப்பாட்டில் மூவசைச் சீரும் ஈரசைச் சீரும் இருக்கவேண்டுமேயொழிய நான்கசைச் சீர் இருக்கவே கூடாது. ஆகவே சொற்ப்ரபந்தம் என்பதுதான் இங்கு கர்த்தா ப்ரயோகித்த சொல். அதை அர்த்த வ்யுத்பன்ன ப்ராந்தர்கள் மாற்றி எழுதிவிட்டனர் அல்லது அச்சிட்டனர் எனவேண்டும். ஆகையால் 'ப்ரபந்த' என்பது அப்படியே செய்யுளில் வருமென்பதற்கு இதுவுமொரு ப்ரமாணமாகின்றது. (12)

இந்தச் சனி இங்கு இப்படி ஓசையைக் கெடுப்பதுமட்டு மன்றி சித்ரகூடம் என்று ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் உள்ள இடங்களையெல்லாம் 'சித்திர' என்று மாற்றி அங்கும் கேடு விளைவிக்கின்றது. ப்ரபந்தஸாரத்தை இழித்துக்கூற முயன்றதின் பலன் என்னவெனில் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி களைக் குலைக்கவேண்டியிருப்பதுதான். இதற்குத் துணி கிறது இந்த நாஸ்திகம். ஒரே விதமாய்ப் பல பாட்டுக்களில் இரண்டு ஆழ்வார் ப்ரபந்தங்களில் இருக்கும் பாடத்தை மாற்றுவேன் என்கிறது. யார் என்ன செய்யக்கூடுமென் கிற துணிவு காரணம். (13)

நாம் தற்பவங்களாகக்கூடிய சொற்களே மாற்றப்படாமல் தத்ஸமம் போலவே உபயோகிக்கப்படலாமென்று கூறு மிடத்தில் "அமல விமல இத்யாதி பரச்சத தத்ஸமச் சொற் களுண்டு" என்று இது கூறுவது அஸங்கதம். நாரணன் என்று தற்பவமிருக்க நாராயணன் என்று அப்படியே ப்ர யோகிக்கப்படுகிறது. புண்ணிய, புண்ய; சக்கர, சக்ர, இத்யாதிகளும் உள்ளன. ஆகையால் "ப்ரபந்த என்பது பிரபந்த என்று ஆகியே தீரும்" என்றது அர்த்தமற்ற அப் ராமாணிகப் பேச்சு: ஆகவேண்டிய அவச்யமில்லையென்பது ஸ்தாபிதம். (14)

'ப்ரவ்ருத்திக்கிறது' என்று நாம் எழுதுவது மிகத் தவறு என்கிறது புரோபாகி. இதுவும் பழங்கதை. ப்ரவர்த் ததே என்ற திங்ந்தத்தைக் கருதி 'ப்ரவர்த்திக்கிறது' என் பர் சிலர். ப்ரவ்ருத்தி என்ற ஸுபந்தத்தையே ப்ரக்ருதியாக வைத்து 'ப்ரவ்ருத்திக்கிறது' என்று வினைச் சொல்லாக்கி ப்ரயோகிப்பதும் உண்டு. இதுவே நம் பழக்கம். 'ப்ரச்னிக் கிறார்' என்பார்கள். அதுபோன்றது இது. சைவநூல்

அபத்தமென்று நிந்திக்கிற குத்ஸிதம் ஜைனன் செய்த இலக்கண நூலைத் தனியன் சாந்தி பாடங்களோடு காலக்ஷேபம் செய்ததாகப் பெருமை கொள்கின்றது. இது தன்னுடைய துர்க்கந்த நூல் 9-ம் பக்கம் முதல் வரியில் **"இதுகளின்"** என்று எழுதியிருக்கின்றது. இலக்கண வாஸனையில்லாதவர் இப்படிப் பேசுவதும் எழுதுவதும் உண்டு. (15)

துர்க்கந்த ராசீகரணத்தின் முடிவில் வீசுகின்ற துர்க்கந்தம் அத்யந்த துஸ்ஸஹம்.

> ப்ரபந்தசாரம் நவீனகல்பிதமென்பதை உலகமெல்லாம் நம்புமாறு ஒரே விஷயம் காட்டுவோம்

என்று சதுரப் பூக்கோடிட்டுக் கொட்டை எழுத்துக்களில் ப்ரதிஜ்ஞை செய்து பல பல ஆரவாரங்களைச் செய்து

> தேசிக ப்ரபந்தங்களில் ஒன்றிலாவது 'வேதாந்தாசாரியர் ஸாதித்தது என்று பொறித்திருப்பதுண்டோ, கிடையவே கிடையாது. ஒன்றிலும் கிடையாது. இருந்தால் எடுத்துக் காட்டலாமே ... ...'ஒரு பிரபந்தத்திலும் திருநாம நிர்த்தேசம் கிடையாதென்பதைத் தலைவிதியாய் இசைந்து தீரவேண்டியதாயிற்று. ஒரு பிரபந்தத்திலும் நூலின் பெயரோ நூலாசிரியரின் பெயரோ கிடையாதென்பது கல்வெட்டாகத் தேறியிருக்க விவாதச் சுவடியொன்றில் மட்டும் 'வேதாந்த குரு மொழிந்த' என்கிறது காணப்பட்டால் ... ... ...

என்று உறுமுகிறது. ப்ரபந்தஸாரம் ஒன்றில் மட்டும் 'வேதாந்தகுரு' என்ற திருநாமம் காண்கிறது. மற்ற எதிலும் இல்லையென்று இது சொல்வதை அப்படியே வைத்துப் பேசுவோம். இதனால் இது போலியென்பதெப்படி ? இதில்

மட்டும் 18 பாட்டுக்கள். மற்ற எதிலும் இல்லை. இதனுல் இது போலி என்ருல் எப்படியோ, அப்படி இது. இது இஷ்டமே என்னக்கூடும் இந்தப் பெரும் பைத்தியம். அப்படியாகில் பெரியாழ்வார் திருமொழியில் மற்ற எந்தத் திருமொழியிலுமில்லாமல் சீதக்கடல் ஒன்றில் மட்டும் 21 பாட்டிருப்பதால் இது போலி, என்று இசையவேண்டும். தம் பெயரை **'விட்டுசித்தன்'** என்றே பெரியாழ்வார் குறிக்கின்ருர். நாவகாரியத்தில் மட்டும் **விட்டுணுசித்தன்** என்று காண்கின்றது. ஆகையால் இது யாரோ அறியாத ஒருவன் எழுதிச் சேர்த்தது என்று இசையவேண்டும். சாஸ்த்ர வாஸனேயேயில்லாத துர்மதியாகையால் ஒன்றை ஸாதிக்க எது ஹேதுவாகும், எது ஆகாது என்பதை அறியமாட்டாமல் என்னென்னவோ பிதற்றுகிறது. "தேசிகனுடைய க்ரந்தங்கள் ஒவ்வொன்றிலும் முடிவில் அவருடைய ('தம்முடைய' என்றது தவறு) திருநாமம் நிர்தேசிக்கப்பட்டிருப்பதைக் காண்பவர்கள்"— "ப்ரபந்தஸாரம் ஒன்று தவிர மற்ற ப்ரபந்தங்களில் நாமநிர்தேசமில்லாமையால் இவை தேசிக க்ருதிகள் அல்ல. ப்ரபந்தஸாரம் ஒன்றுதான் அவரருளிச்செய்த தமிழ் ப்ரபந்த"மென்று கொள்ளவேண்டும், என்று இதைப்போன்ற இன்னெரு உன்மத்தம் பிதற்றினுல் அதற்கு இது என்ன பதில் கூறுமோ அறியோம். உண்மையில் அது எப்படி அநுபபன்னமோ அப்படியே இதன் அனுமானமும் அனுபபன்னம். அப்ரயோஜகம், வ்யாப்யத்வாஸித்தம், பாதிதம், என்றிப்படி பல ஹேத்வாபாஸங்கள் உண்டு. அவற்றைச் சேர்ந்தவை இந்தக் குமதி கூறும் ஹேதுக்கள் யாவும்.

இனி உண்மையைக் கூறுவோம். வைராக்யபஞ்சகம் ந்யாஸதசகம் இவற்றின் முடிவில் தேசிகன் திருநாமம்

காணவில்லை. அப்படியே சில தமிழ் ப்ரபந்தங்களின் முடிவில் காணவில்லையென்றால் அதற்குக் காரணம் இருக்கிறதா இல்லையா, இருந்தால் என்ன அது ? என்பதை ரஸிகர்கள் விமர்சிக்கலாம். ஏதோ ஒரு முடிவுக்கு வரலாம். தமிழ் ப்ரபந்தங்களில் ஒன்றிலும் நாமநிர்தேசம் இல்லையென்று இது சொல்வது வெறும் பொய். பெரும் வஞ்சனை. அம்ருதாஸ்வாதிநீ முடிவு பாட்டில் **"வையத்துள்ளே வேதாந்த வாரியனென்றியம்பநின்றோம்"** என்றிருக்கிறது. ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தின் முடிவில் **"மெய்விரத நன்னிலத்து மேன்மையேத்தி வேதாந்தவாசிரியன் விளங்கினனே"** என்றிருக்கிறது. கீதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில் **'கோதற்ற நான்மறை மௌலியின்னாசிரியன் குறித்தான்'** என்றிருக்கிறது. இனி இவற்றைப்பற்றி ஏதாவது கோணலாக ஒன்று கூற முயலும் குடிலமதி. அதற்குப் பலனான ப்ரஹாரங்களையும் பெற்றுக்கொள்ளும். ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தின் கடைசிப் பாட்டான 'சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்' என்பதைப்பற்றி இது உளறும் உளறல் அநுவதிக்கவும் அநர்ஹம். நிரஸனம் அபேக்ஷிதமே இல்லை. *(16)*

இதன் போக்கு தேசிகன் தமிழ் ப்ரபந்தம் ஒன்றுமே செய்யவில்லை என்று ஒரு பெரிய ஆகாசக் கோட்டை கட்டி உலகத்தோர்க்குக் காட்டுவதை லக்ஷ்யமாகக்கொண்டு போய்க்கொண்டிருக்கிறது. நல்லது. *(17)*

திவ்யப்ரபந்தங்கள் தமிழாகையால் பலருக்கு அதில் அநாதரம் இருந்தது. அதைப் போக்கி ச்ரத்தையை உண்டாக்கத் திருவுள்ளம்பற்றி 'தமிழ் மறையோன் வேதாந்த குரு மொழிந்த' என்றிப்படிக் கூறி, ஸம்ஸ்க்ருத வேதம்

போன்றதே தமிழ் வேதம். ரங்கநாதன் அருளிய வேதாந்தா சிரியன் என்ற பட்டம் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தைப்பற்றி மாத்திரமன்று. இந்தத் தமிழ் வேதாந்தத்தையும்பற்றி யதே. ஆகையால் இதையும் நான் மிகவும் போற்றுகிறேன். எம்பெருமான் திருவருளைப் பெற விரும்புகின்றவர்கள் யாவ ரும் இவ்வாறே அதைப் போற்றி ஆதரிக்கவேண்டுமென்று உணர்த்துகின்ருர் ஸ்வாமி. இப்படி ஆழ்ந்த கருத்தும் அரிய ப்ரயோஜனமுமுள்ளது இங்குள்ள வேதாந்தகுரு என்ற சொல். *(18)*

முடிவில் "களவு கண்டுபிடித்தல். மருமம்" என்று என் னென்னவோ பிதற்றுகின்றது. இதன் ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த குத்ருஷ்டிகளிடத்திலும் இதனிடத்திலும் மலிந்தி ருக்கும் குற்றங்களைப் பிறரிடத்தில் ஏற்றப்பார்க்கின்றது. இதன் நர்த்தனங்களினுல் தேசிகப்ரபந்தம் எதிலும் ஒரு அணு கூட அசையாது. இதன் இந்த ஆர்ப்பாட்டங்க ளால் இதன் முன்னேர்களின் வஞ்சகச் செயல் வெட்ட வெளிச்சமானது ஒன்றுதான் பலன். திவ்யப்ரபந்தங்கள் இருபத்து நான்கென்பதும் மொத்தப் பாசுரங்கள் நாலாயிர மென்பதும் முதல் முதலில் க்ரந்தாரூடமானது ப்ரபந்த ஸாரத்தில்தான். இது பாஷ்யகாரரின் சிஷ்ய ப்ரசிஷ்ய ஸம்ப்ரதாயஸித்தமாகையால் இதில் விப்ரதிபத்தி பண்ண இடமில்லாமற்போயிற்று. இராமாநுச நூற்றந்தாதியை வெளியே தள்ளிய பிறகு 24, 4000 என்ற இரண்டு எண் ணிக்கையையும் சரிக்கட்டுவதற்காகப் பல்லாண்டைத் தனி ப்ரபந்தமாக்கினுர்கள். மடல்களின் பாட்டு எண்ணைப் பெருக்கினுர்கள். இந்தக் குடில ப்ரவ்ருத்தி இப்போது ஸர்வவிதிதமாக்கப்பட்டது. *(19)*

நமது பாரிஜாதபுஷ்பம் பிறந்து சாகவில்லை. செத்தே பிறந்தது என்று பேசி மகிழவெண்ணி அச்சு முடியாமலிருக்கும்போதே சில பக்கங்களைத் திருடிக்கொண்டுபோய் இப்படி துர்க்கந்த ராசிகரணம் செய்திருக்கிறது இந்த திவாபீதம். நாம் பேசுவது எல்லாம் ஸத்யமேயாதலால் ஸத்யமே பேசும் நம் நூல் ம்ருதஜாதமுமன்று, ஜாதம்ருதமுமன்று. அபி து அம்ருதம். நித்ய ப்ரகாசம். நித்யோஜ்வலம். ரஸிக விபுதர்களுக்கு பரமாநந்தகரம். உண்மையை அறிய விரும்புகிறவர்களுக்கு வெளிச்சம் தரும் விளக்கு. (20)

பரிமளம் முற்றிற்று.

खरं जनस्थानगतं पुरस्ता-
जघान या राघवबाणपङ्क्तिः ।
सैवोदिताऽसत्करतूलिकात्मा
काञ्चीगतं सम्प्रति जङ्घनीति ॥

'ஸ்ரீரங்கஸ்ரீ:'

# ஸ்ரீரங்கஸ்ரீ:

## ஜ்யேஷ்ட கனிஷ்ட ஸம்வாதம்.



கனிஷ்டன்:—அண்ணா ! ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆலயங்களிலும் மடங்களிலும் திருமாளிகைகளிலும் "ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய" என்கிற ச்லோகத்தை அநுஸந்திக்கிறார்களன்றோ ... ... ... ...

ஜ்யேஷ்டன்:—அன்பனே ! அது ச்லோகம் அன்று. வாக்யமே.

க:—தேவரீரே பலபடியாக அதை ச்லோகமென்று எழுதியும் சொல்லியுமிருப்பதோடு அதை ஆக்ஷேபித்து எழுதிய வித்வானொருவருக்கு 'ச்லோக்யதே இதி ச்லோக:' என்று வாக்யத்தையும் ச்லோகமென்னலாமென்பதாக மறுப்புரையுமிட்டிருக்கின்றீரே; இப்பொழுது இப்படி அதை மறுப்பானேன் ?

ஜ்:—சரி, அது பழங்கதை. இருக்கட்டும். விஷயமென்ன ?

க:—இவ்வாக்யத்தை, அரங்கன் பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிடக்கொள்ளும் அத்தாணிச் சேவகரான அர்ச்சகரும் அவரபிமானிகளுமாகிய பிறர்களேயன்றோ நித்யாநுஸந்தானம் செய்யத் தகுந்தவர். 'எப்படி ஊராமிலைக்கக் குருட்டாமிலைக்கும் அப்படி' அல்லாதாரும் கண்மூடிகளாய் கோஷிக்கின்றோமே, இது தகுமா ? கர்ப்ப க்ருஹத்திற்குள்ளே ப்ரவேசிக்கவும் உரிமையில்லையே நம்மவர்க்கு. பாஹ்ய கைங்கர்யங்களிலும் நம்மிருவருக்கும் நம்போன்றவர்களுக்கும் யாதொரு உரிமையுமில்லையே.

ஜ்:—ஆனாலென்ன ? ஒவ்வொருவரும் தம் தம் உரிமையையும் தம் தமக்கேற்பட்டுள்ள மரியாதைகளையும் நினைத்

தன்றே எம்பெருமானை வழிபடுவது. பரமைகாந்தியான தன்னையுகந்து அர்ச்சாவதாரம் பண்ணியிருக்கிறவெம்பெரு மான் பக்கலிலேயுள்ள பரம பாவனத்தன்மையையும் ஆச் ரித பாரதந்த்ரியத்தையும் ஆகர்ஷகத்வத்தையும் இவை முதலான கல்யாணகுணங்களையநுஸந்தித்தே சேஷவ்ருத் தியைச் செய்கின்றார்கள். ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் தத்வத்ரயாதிகாரத்திலே அருளியிருக்குமமுதமொழியொன் றுண்டு. அதாவது— "அநந்தகருடாதிகளுக்கு அதிகார விசேஷங்களும் ததுசிதகைங்கர்யங்களும் வ்யவஸ்திதங்க ளாயிருக்க நித்யர்க்கும் முக்தர்க்கும் ஸர்வவித கைங்கர்ய ஸித்தியுண்டென்கிற அர்த்தம் கூடுமோவென்னில்; ஸ்வா மியினுடைய அபிப்ராயத்திற்கீடாகத் தனக்கு அபிமதங்க ளான கைங்கர்யங்களிலே கிடையாதவையொன்றுமில்லா மையாலும் ஒரொருத்தருக்கு வ்யவஸ்திதங்களான கைங்கர் யங்களைத் தாங்கள் அநுஷ்டிக்கவேணுமென்றபிஸந்தி வேரொருத்தருக்குப் பிறவாமையாலும் ஆரேனுமொருவர் அநுஷ்டிக்கும் கைங்கர்யமும் ஸ்வாமிக்கு ப்ரியமானபடி யாலே ததுசித கைங்கர்யங்களும் ஸர்வர்க்கும் ப்ரியமாய் கைங்கர்ய பலமான ப்ரீதியில் வாசியில்லாமையாலும் ஸர்வர்க் கும் ஸர்வவித கைங்கர்யஸித்தியுண்டென்கையில் விரோத மில்லை" என்பதே அது. ஆகவே அடியார்களனைவரும் "ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம் ... ... " என்று அநுஸந்தானம் செய் வதேயன்றோ உசிதமானது.

க:—அண்ணா! தேவரீருடைய இவ்வைதிகமனோஹ ரோக்தியானது மனதில் பதிந்துள்ளது அடியேனுக்கும். இதுவரை ஸ்ரீவைஷ்ணவர்கள் மற்றோரையும் நம்மையும் வெவ்வேறு குலங்களாக வைஷம்யத்தினால் எண்ணியிருந்து அவ்வாறு விண்ணப்பம் செய்தேன். இனியறிந்தேன்.

அந்த வாக்கியத்தின் கருத்தையும் அடியேனுக்கு விளங்கச் செய்தருளவேணும் தேவரீர்.

ஜ்:—ஸாவதாநமாய்க் கேளாய். அரங்கன் பக்கல் ஸ்ரீரங்க ஸ்ரீயை உபரோதமொன்றுமின்றிக்கே பெருகச் செய்யவேணுமென்று இதில் ப்ரார்த்திக்கப்படுகின்றது. ஸ்ரீமந்— 'ஆச்ரயண வேளையோடு போக வேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யம்' என்று தீர்மானிக்கப் பெற்ற திருவரங்கனே!

க:—அண்ணா! ஆச்ரயண வேளையில் மிதுநம் உத்தேச்யமாவது எப்படி? நெடுவாசியுண்டே! பிராட்டிக்கு உபாயத்வமும் எம்பெருமானுக்குப் புருஷகாரத்வமுமில்லையே!

ஜ்:—நம்பிள்ளை ஈட்டு ஸ்ரீஸூக்தியில் குசோத்யம் செய்யாதே. 'யதா ஸர்வகதோ விஷ்ணுஸ்ததைவேயம் த்விஜோத்தம' என்று பரதேவதாபாரமார்த்யவேதியான பராசர ப்ரஹ்மரிஷியின் புராணரத்நபணிதியுள்ளது. இதற்கு எங்களாழ்வான் விஷ்ணுவின் ஸர்வ வ்யாப்தி முதலியவை அனைத்தும் பிராட்டிக்கும் உண்டு என்று உரையிட்டருளினார். இதுவே ஸித்தாந்தமென்பதை அவர் சிஷ்யரான அம்மாள் தமது ப்ரபந்நபாரிஜாதத்திலே "ததா லக்ஷ்ம்யா: ஸ்வரூபம் ச வக்ஷ்யே ச்ருணு ஸமாஹித:। குணதஸ் ஸ்வரூபேண வ்யாப்திஸ்ஸாதாரணீ மதா ॥ யோ யதா ஜகத்வ்யாப்த: ஸ்வரூபேண ஸ்வபாவத:। ததா வ்யாப்தமிதம் ஸர்வம் நியந்த்ரீ ச ததேச்வரீ ॥ என்று. மேலும் மஹாசார்யருடைய சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீந்ருஸிம்ஹராஜாசார்யரும் 'லக்ஷ்ம்யா: ஸமஸ்வகோடிகா ஜ்ஞாநவ்யாப்தி:' என்று தமது ஆநந்த தாயிநீயென்னும் ஸர்வார்த்தஸித்தி வ்யாக்யானத்தில் ஸித்

தாந்தம் செய்திருக்கிறார். ஆகவே 'வாசியற' என்று நம் பிள்ளையருளியது உபபந்நமே.

க:—'ஸ்ரீமந்' என்பதின் பொருள் மிகத் தெளிவாகியது. 'ஸ்ரீரங்கஸ்ரீ:' என்பதின் பொருள் யாது ?

ஜ:—பகவச்சாஸ்த்ர நிஷ்டரும் வைதிகாக்ரேஸரருமான அர்ச்சகர்களால் அநாதிகாலமாய் நடந்துவரும் அரங்கனுடைய நித்யநைமித்திக திருவாராதனங்களும், நித்யோத்ஸவம் முதலியனவும், "ஸா ஹி ஸ்ரீரங்கராஜஸ்ய" எனப்பட்ட சுக்லக்ருஷ்ணயஜுராதி பாராயணங்களும், மேலும் அரங்கனைக் குலதெய்வமாகக் கொண்ட ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதிகளும் "வாஸுதேவேதி தேவஸ்ய தஸ்ய நாம ப்ரஸஸ்யதே" என்று ஸ்ரீரங்கமாஹாத்ம்யத்தில் புகழ்பெற்ற ஸ்ரீவாஸுதேவப் பெருமாளும், "வாராஸரயேஸ்ர மஹாயோகீ தஸ்ஸௌ ஸந்நிஸந்நிதௌ" என்கிறபடியே புஷ்கரிணீ தீரத்தில் ப்ரதிஷ்டிதரான பகவத்பாதராயணரும், ஸ்ரீமந் நாதமுனிகள் முதலிய ஆசார்யர்களும் ஆழ்வார்களும், ஸ்ரீரங்க ஸ்ரீயில் சேர்ந்தவையன்றோ. இவ்விபூதிகளின் ஸம்ருத்தியை அநுதிநம் ஸம்வர்த்தய என்று நாம் அநுஸந்தானம் செய்துவரும் இவற்றிற்குக் கலி புருஷ கிங்கரர்களால் உபத்ரவம் நேராதிருக்க வேணுமென்பது "அநுபத்ரவாம்" என்பதின் பொருள்.

க:—அண்ணா! இதற்கு முன் இந்த வாக்யத்தை அநுஸந்தானம் செய்ய நமக்கு யாதொரு உரிமையுமில்லை என்றெண்ணினேன். ஸ்ரீ தேசிகன் தத்வத்ரயாதிகார ஸூக்தியை தேவரீர் விளக்கிய பிறகு ஸ்ரீ வைஷ்ணவர் அனைவருக்கும் உரிமையுண்டென்று தெளிந்தேன். இப்பொழுது முதலிரண்டு மூன்று பதங்களுக்கும் தேவரீர் தெளிவித்

தருளிய பொருளை உற்று நோக்குமிடத்தில் நமக்கேது உரிமை என்றுகூட தோன்றுகிறது. முதலிலே அடியேன் நினைத்ததுவே மறுபடி ஊர்ஜிதமாகிறதே.

ஜ்:—ஸ்ரீ தேசிகனுடைய தத்வத்ரயாதிகார ஸூக்திகளை உனக்கு நான் தெளிவித்தும் த்ருடபூர்வச்ருதனாய் பேசுகின்றாய். "ஜ்ஞாநலவதுர்விதக்தம் பிரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி". காலதேசங்களையும் உண்மை நிலைகளையும் உற்றுநோக்கி விசால நோக்குடன் அஸூயையை விலக்கி ஸ்ரீ தேசிகன் நியமனப்படி ஸ்ரீமந் இத்யாதி வாக்யத்தை இரட்டித்து நித்யாநுஸந்தானம் செய்வாயாக.

"[illegible] ।
[illegible] ॥"

தி. ஈ. வீரராகவாச்சாரியர்,
மதுராந்தகம்.

---

## கால அட்டவணை.

| | | |
|---|---|---|
| | | இங்கிலீஷ்-ஸூ |
| ராமாநுஜதயாபாத்ரத் தனியன் அவதாரம் (ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி செய்தருளியது) | | 1339 |
| திவ்ய ப்ரபந்தாநுஸந்தான ஆரம்ப அவஸானங்களில் தனியன் வாழிதிருநாம அநுஸந்தான ஆரம்பம். | | 1349 |
| த்விதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமி ஸாதித்த பன்னிராயிரப்படி குருபரம்பரையின் உத்தரார்த்தத்தில் இந்தத் தனியனுக்கும் மற்றெல்லாத் தனியன்களுக்கும் விரிவான வ்யாக்யானம் செய்யப்பட்டது. இந்த ஸ்வாமி ஆஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த காலம் | | 1386-1394 |

வாத்ஸ்ய அஹோபிலாசார்யர் என்ற ஸ்வாமி பாத்ரத்தனியனுக்கும் மற்றவைகளுக்கும் ஸங்க்ரஹமாக வ்யாக்யானம் செய்தருளியிருக்கிறார். இவர் மைஸூர் பரகால மடத்தில் 15-வது பட்டத்தில் எழுந்தருளியிருந்தவரும் உபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமானுஜ ஸ்வாமிக்கு ஸந்யாஸாச்ரமம் தந்தருளினவருமான ஜ்ஞானப்தி ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமியின் சிஷ்யர். இந்த ஸ்வாமியின் ஆஸ்தான காலம் 1607–1618

ஷை மடம் 21-வது பட்டத்தில் எழுந்தருளியிருந்தவரும் திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிரப்படி வ்யாக்யானம் அருளிச்செய்தவருமான பெரிய பரகாலஸ்வாமியின் ஆஸ்தான காலம் 1676–1737

இந்த ஸ்வாமியின் ஆசார்யரான சந்த்ரகிரி ஸ்ரீநிவாஸாசார்யர் பாத்ரத் தனியனுக்கு ஒரு வ்யாக்யானம் செய்தருளினார்.

---

ராஜ ஒடையார் என்ற மஹாராஜன் மைஸூர் ராஜ்யத்தை ஆண்ட காலம் 1578–1617

கண்டீரவநரஸிம்ஹராஜ ஒடையார் என்ற மஹாராஜன் ஆண்ட காலம் 1704–1714

இவ்வரசனிடம் திருநாராயணபுரத்தில் பகவத் ஸந்நிதியில் ராமானுஜதயாபாத்ரத் தனியன் அநுஸந்திக்கக்கூடாதென்ற வ்யவஹாரம் விசாரணைக்கு வந்தது. இவன் ராஜ ஒடையார் காலம் முதல் என் தகப்பனார் காலம் வரையில் அநுஸந்திக்கப்பட்டுவந்த அந்த ச்லோகத்தின் அநுஸந்தானத்தை இப்போது நிறுத்தக்கூடாதென்று தீர்ப்புக் கூறினான்.

---

9. ஸத்பதவ்யாம் ஸஹாயம் என்ற ரத்நாவளி ச்லோகத்தை ஸாரத்திலுள்ளதென்றும் இது சதகார்த்தமாயிருக்க தசகார்த்தமென்றும் தவருகக் கூறியதற்காக (பக்கம் 65)

10. கல்யப்தேஷு" சதுஸ்ஸஹஸ்ர, என்ற ச்லோகத்தில் பதத்தின் அர்த்தத்தை அறியமாட்டாமல் வீணே பழித்ததற்காக (பக்கம் 67)

11. "இங்ஙனே ஸங்க்யா வாசக சப்தத்தை நேரே யிட்டு இயற்றப்படுவது கிடையாது" என்று விபரீதமாய்ப் பேசியதற்காக (பக்கம் 68)

12. பாத்ரபத்யம் ஓலைச்சுவடிகளில் உள்ளதென்று ஸம்ப்ரதாய ப்ரதீபத்தில் அவற்றின் எண்களுடன் விளக்கப் பட்டிருக்க பழையபடியே இல்லவேயில்லை என்று பொய் ப்ரதிஜ்ஞை செய்ததற்காக (பக்கம் 98)

13. புரூப்பைத் திருட்டுத்தனமாகக் கொண்டுபோய் அதற்காக ஒரு கட்டுக்கதை எழுதியதற்காக (பக்கம் 114)

14. மெய்யெழுத்தை முதலில் கொண்ட தமிழ்ச்சொல் இல்லையென்று தமிழ் பாஷையின் ஸ்வபாவஸ்திதி கூறப் பட்டிருக்க, விவேகமில்லாமல் அதை ப்ரதிஷேதமாகக் கொண்டு வடமொழிச் சொல்கூட அப்படி ப்ரயோகிக்கப் படுவது கூடாது என்று வீண் ஆர்ப்பாட்டம் செய்ததற்காக (பக்கம் 117)

## திருத்தம்.

| பக்கம் வரி. | | — | பக்கம் வரி. | |
|---|---|---|---|---|
| 13—21 | ப்ரமாணமாகக் | | 62— | கடைசி 2 பண்ணிரு-லென்ன |
| 25— 2 | படுகின்றனவென்பது | | 64—19 | ரத்தில் |
| 27—21 | கலியன்" என்று | | 76— 7 | கருங்தேள் |
| 45— 6 | ஒன்றரை | | 95—14 | த்ரயஸார |
| 52—23 | शालिनी | | 100—22 | அநச்நந்நயோ |
| 54—22 | ஷஷ்டி | | 102—15 | கோடியில் |

ஸ்ரீ:

# ஸ்ரீ வைஷ்ணவ மஹான்கள் கவனிக்கவேண்டும்.

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥

என்று பகவானால் வெறுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்த குமதி ஆசார்யர்களைப்பற்றியும் நம்மைப்பற்றியும் கூறும் வசவு மொழிகளை நாம் பொருள்படுத்தவேண்டிய அவசியமே இல்லை. ஆனால் ஸ்ரீ ஸூக்திகளைப்பற்றி இது உண்டாக்கும் கலக்கங்களைப் போக்கவேண்டியது நம் கடமை; அவற்றை அநுக்ரஹித்த ஆசார்யச்ரேஷ்டர்களுக்கு நாம் செய்யவேண்டிய பெரும் கைங்கர்யம். இதை யாவதாயுஷம் செய்துவரத் தீர்மானித்திருக்கிறோம். இது அர்த்தஸாத்யமாயிருப்பதனால் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவரும் இந்தப் பாரிஜாதபுஷ்பம் என்கிற ப்ரபந்தஸாரவைபவத்தைத் தாம் விலை (1-50) கொடுத்து வாங்கி வாசிப்பதுமட்டுமன்றி மற்றவர்களும் வாங்கி வாசிக்கும்படி முயலவேண்டுமென ப்ரார்த்திக்கின்றோம். ஸௌகர்யமும் திருவுள்ளமும் உள்ள மஹான்கள் மேன்மேலும் நடக்கவேண்டியதாயிருக்கிற இக் கைங்கர்யத்திற்குத் தம்மாலியன்ற அளவு உதவி புரிந்தால் அதை ஏற்று அவர்களிடம் எப்பொழுதும் க்ருதஜ்ஞராயிருப்போம்.

தக்ஷிண மாடவீதி,
திருப்பதி.
1—2—61

D. T. தாதாசாரியன்.